# கட்டுரைகள்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

LIBRARY SERVICE INDIA
KOTTAIYUR-623106.
TAMILNADU. INDIA.

புதுமைப் பதிப்பகம்

காரைக்குடி

1944

ROJA MUTHIAH
KOTTAIYUR-623 106
TAMILNADU INDIA

## பதிப்புரை

ராஜாஜி நூல் வரிசையில் சிறு கதைகள் முதல் மலரில் தொகுத்துப் பிரசுரிக்கப்பட்டன. இது இரண்டாவது மலராகும். இதனுள், ராஜாஜியவர்கள் எழுதியுள்ள கட்டுரைகளும் ஸோக்ரதர் சரித்திரமும் அடங்கியிருக்கின்றன. இக்கட்டுரைகள் கல்கி, கலைமகள், ஆனந்தவிகடன், சக்தி, வசந்தம் முதலிய பத்திரிகைகளிலும் கதாமணியிலும் குமரி மலரிலும் வெளிவந்தனவாகும்.

புதுமைப் பதிப்பகத்தார்

# பொருளடக்கம்

# பேசுந் தமிழ்

"வியாசங்கள் எழுதுவதை விடப் பேசப் பயில்வதே மாணவர்களுக்கு அவசியம். வாழ்க்கையில் பெரும்பாலோருக்குப் பயன்படக் கூடிய பயிற்சி, எழுதிப் பழகுவதைவிட, சுத்தமாகவும் தெளிவாகவும் பேசிப் பழகுவதுதான். அதுமட்டுமல்ல; இயற்கை யான தோரணையுடன் படிப்போர் கவனத்தைக் கவரக் கூடிய நடையில் எழுத மாணவர்கள் கற்கவேண்டு மானுல், அதற்கு வழி, சரியான முறையில் பேசப் பழகுவதுதான்."

இது இங்கிலாந்தின் அரசாங்கக் கல்வி நிருவாக சபையாரின் முடிவு. அவர்கள் சொல்லுவதைப் பாருங்கள் :

"நமது பள்ளிக்கூடங்களில், கீழ் வகுப்புகளைக் கடந்தபின் பேச்சுப் பயிற்சி முழுவதும் நின்று போகி றது. வியாசம் எழுதுவது ஒன்றே மேல் வகுப்பு மாண வர்களுக்கு அளிக்கப்படும் அப்பியாசம். இதனுல் படா டோபமான ஒரு எழுத்து நடையைப் பள்ளிக்கூடங் களில் மாணவர்கள் எழுதப் பயின்றுவிடுகிருர்கள்.

இந்த உயிரற்ற எழுத்து நடையை நீக்கி, நல்ல எழுத்துநடை மாணவர்களுக்குக் கற்பித்தல் அவசியம். அதற்கு இன்றியமையாத முறை, வாய் மொழிப் பயிற்சிதான் என்பது எங்கள் துணிபு. "*

போதனுமுறை மேதாவி ஒருவர் எழுதுகிறார்; "பேச்சுநடை வேறு, எழுத்துநடை வேறு என்று எண்ண வேண்டாம்; கொஞ்சம் கவனித்து ஆலோசித்துப் பேசுகிற பேச்சே எழுத்தாகும்." †

தமிழில் எழுத்து நடையையும் பேச்சு நடையையும் ஒன்ருகக் கொள்வதற்குத் தயக்கம் தரும் விஷயம் ஒன்று இருக்கிறது. அது, கற்ருேர் பேச்சிலும் கொச்சைப் பதங்கள் மிதமிஞ்சி வழங்கி வருவதாகும். பேச்சுநடை என்ருல், கொச்சைப் பதங்களல்ல. இலக்கணமும் உருவமும் சிதறிப் போன மொழிகளைச் சேர்த்து எழுதியவுடன், பேச்சுநடை உண்டாகி விட்டது என்று எண்ணக்கூடாது. வசனத்தின் நடை வேறு. மொழிகளின் வடிவம் வேறு. கொச்சை மொழிகள் கலந்து வருவதைப் பேச்சுநடை என்று வைத்துக்கொண்டு கலவரப்படுத்திக் கொள்ளக் கூடாது. எழுதும்போது, மொழிகளின் வடிவத்தைத் திருத்தி எழுதுவது அவசியம். இயற்கையாக மனதில் பொங்கும் மனோ வேகங்களினுலும்,

* The Teaching of English in England : Board of Education, London.

† E. A. G. Lamborn, Expression in speech and writing: Oxford University Press.

எதிரில் கேட்டுக்கொண்டு நிற்கும் மனிதர்களுடைய முகத்தில் காணும் உணர்ச்சி வேகத்தின் பிரதிபலனாகவும், பேச்சில் தோன்றிப் பொலியும் வடிவழகுகளே பேச்சு நடை என்பது. எழுத்தறிவின்மை, அசிரத்தை, கவனக் குறைவு முதலிய காரணங்களினால் உண்டாகும் கொச்சை மொழியும் இலக்கணப் பிழையும் பேச்சு நடை ஆகாது.

சில திரிசொற்களும் இலக்கண வழுக்களும் இலக்கியத்தில் சேரக் கூடிய தகுதி பெற்று விடுவதுமுண்டு. பதங்களில் எழுத்தும், இலக்கணமும், பொருளும் தவிர, வடிவு ரகசியம் ஒன்று இருக்கிறது. ஒரு மொழி போல் ஒரு மொழி இல்லை. ஒரு வடிவு கொண்ட மொழியிலுள்ள உயிர் மற்றொன்றில் இல்லை. பிழையாயினும் சில வடிவங்களுக்கு ஒரு சக்தி யுண்டு. அந்தச் சக்தியானது இலக்கணத்தையும் வென்று செல்லும். இதைச் செய்யுளிலும் காணலாம். '(தேன் வந்து) பாயுது,' 'வேகுதே,' 'காணுதே,' 'ஆச்சே,' 'போச்சே' முதலிய உணர்ச்சி பொங்கும் மொழிகளை உதாரணமாய்ச் சொல்லலாம். அழகும் அழுத்தமும் வேகமும் உயிரும் தருகிற இப் பதங்கள் உயர்ந்த தமிழாகும். ஆனால், சாதாரண வசன நடையில் கண்ட இடங்களிலெல்லாம் 'கிறது' என்பதற்குப் பதில் 'உது' போட்டுவிட்டு, 'விட்டது' என்பதை 'வூட்டுது' என்றாக்கி, வளரும் தமிழுக்குப் பணி செய்துவிட்டோம் என்று எண்ண முடியாது. பேச்சில் வெறும் அவசரத்தாலும் கவனக் குறைவாலும் எழுத்தறிவின்மையாலும் மொழிகள் மறைந்தும்

உருவும் கெட்டும் இலக்கண வழுவியும் வருவதைத் திருத்தி யமைப்பது அவசியம். வேகம் வேறு, சோம்பேறித்தனம் வேறு. உருக்கம் வேறு, அறியாமை வேறு. கொச்சைப் பேச்சின் ஒலிப் பதிப்பே வசன நடை என்று ஆகாது. பேச்சு என்ற ஊற்றிலிருந்து தான் வசன நடை உண்டாகும் என்றால், அதன் பொருள், பிழைகளுடன் வசனம் எழுத வேண்டுமென்பதல்ல.

கதையிலும் கட்டுரையிலும் வரும் பாத்திரங்களின் வாயில் அமைக்கப்படும் பேச்சை அவர்களுக்கு உரிய கொச்சைப் பதங்களாகவும் பிழைப்பட்ட இலக்கணமாகவும் அமைத்து எழுதுவது ஒரு நூல் நடையே. இது இலக்கிய உண்மை என்ற தத்துவத்தை யொட்டிய முறை. இதை நவீன தமிழ் எழுத்தாளர்கள் அளவுக்கு மிஞ்சிக் கையாண்டு வருகிறார்கள். இலக்கணக் கொடுங்கோன்மைக்கு இது ஒரு பதில் என்றும், புரட்சி மனப்பான்மையில் இது ஒரு அங்கம் என்றும் எழுத்தாளர்களுக்குத் தீவிர உணர்ச்சி இருக்கிறது.

என்னுடைய அபிப்பிராயம் இந்த முறையை ஓரளவுதான் கையாள வேண்டும் என்பது. அதிகமாகப் போனால், கதையில் பாத்திரங்கள் பேசும் பேச்சாயிருந்தாலுங்கூட, இது தமிழ் வளர்ச்சியைத் தடுத்துக் கெடுதி விளைவிக்கும் என்று அஞ்சுகிறேன். நல்ல நவீன இலக்கியத்தொகுதி உண்டாகியபின் இந்த முறை அவ்வளவு தீமை செய்யாது. தற்போது நாம் அந்த நிலையில் இல்லை. தவிர, இலக்கியமும் சித்திரமும், உள்ளதை உள்ளதுபோல் வரைந்து

விடுவதல்ல. உண்மையைப் படம் பிடித்து வரைவது அவ்வளவு எளிதான வேலையன்று, சாமர்த்தியம் வேண்டும். நான்கு கோடுகள் இழுத்து ஒரு பெருங் காட்டை உயர்ந்த சித்திரக்காரன் காட்டி விடுவான். மற்றவர்கள் காகிதம் நிறைய மரங்களை எழுதினாலுங் கூடக் காட்டின் அடர்த்தியைக் காட்ட முடியாது. பேச்சை எழுத்தில் அமைப்பதும் அவ்வாறே ஒரு சாமர்த்தியமான வேலை. உண்மையோடு அழகும் பயனும் உண்டாக வேண்டுமானால், தள்ளவேண்டியதைத் தள்ளி, தேர்ந்தெடுத்து அமைக்க வேண்டும். உயிருடன் தாண்டவமாடும் உண்மைக்குக் குறைவுமில்லை, பயமுமில்லை; அதன் உயிரே அதற்குக் காவலும் காப்பும். பேசும் கொச்சை மொழி அவ்வாறு உயிருள்ள பொருள்தான். ஆனால், அதை எழுத்தில் வரையும்போது, திருத்தியமைத்தா லொழிய உண்மையாகாது. நண்பன் வாயிலிருந்து உதித்து நம்முடைய காதில் புகுந்து உடனுக்குடன் உண்டாகும் உணர்ச்சி வேறு. ஆனால், அதே மொழிகளைப் பிழையான ஒலியுடன் எழுத்தில் பதிய வைத்து அதை நாம் படித்தால் மனதில் அவற்றின் உண்மை உருவம் உண்டாகாது. பேசும்போது மறைந்த எழுத்துக்களெல்லாம், நுண்ணிய தேகங்கொண்டு, மிஞ்சி யிருக்கும் எழுத்துக்களில் கலந்து மனக் காதில் ஒலிக்கும். காகிதத்தில் பரப்பி அமைக்கப்படும்போது அது முடியாது.

கொச்சை மொழிகளை வசன நடையில் மிதமிஞ்சிக் கையாளக்கூடாது என்பதற்காக இவ்வளவு எழுதினேன். நடை முறையில் கலந்து போய் எல்

லோரும் ஒப்புக்கொண்டதும், தனி நோக்கத்துடன் சில சந்தர்ப்பங்களில் சேர்க்கக்கூடியதும் தவிர, மற்றக் கொச்சை மொழிகளைப் பேச்சிலுங்கூடக் குறைத்து வரவேண்டியது தமிழன்பரின் கடமை. பேசுவோரும் கேட்போரும் ஒரு வாரம் சிரமப்பட்டு உறுதியாகப் பழகி வந்தால் பிறகு அவர்களுக்கு இதில் ஒரு கஷ்டமும் இராது. இந்தச் சீர்திருத்த இயக்கத்தினால் தமிழ்மொழி பெரும் பயனடையும். எழுத்துக்கும் பேச்சுக்கும் இடையிலுள்ள ஒரு பெரிய தடை நீங்கி, பேச்சின் முழு லாகவமும் வசனநடையில் அப்படியே வந்து சேர்ந்து தமிழ் எழுத்துக்கு உயிர் உண்டாகும்.

ஆக, நாம் செய்யவேண்டிய சம்பாஷணைச் சீர்திருத்தம் :

(1) கொச்சையாகப் பேசுவதைக் கூடிய வரையில் விலக்கி மொழிகளைச் சரியாக உச்சரித்துப் பேசுதல்.

(2) அனாவசியமான ஆங்கில மொழிகளைக் கலக்காமல் பேசுதல்.

(3) மனோவேகங்களையும் நுட்பமான பொருள் பேதங்களையும் குறிப்பிடுவதற்கு மெய்ப்பாட்டுச் சமிக்ஞைகளைக் கையாளுவதை யொழித்துத் தகுந்த மொழிகளின் வழியாகவே வெளிப் படுத்துதல்.

இம்மாதிரி சம்பாஷணை இயக்கம் வளர்ந்தால் தமிழ் வசனநடை தானாகவே இயற்கை வலி பெற்று ஓங்கும்.

---

## 2

## தமிழில் அரபி பார்ஸி

ஒரு பாஷையில் அன்னிய மொழிகள் வந்து சேருவதற்குப் பல காரணங்கள் உண்டு. அது ஒரு தாழ்வு ஆகாது, மேன்மையுமல்ல. ஹிந்துஸ்தானி, குஜராத்தி, மராத்தி முதலிய பாஷைகளில் அரபி, பார்ஸி மொழிகள் ஏராளமாகக் கலந்திருப்பதை, அனைவரும் அறிவார்கள். ஆனால் தமிழிலுங் கூட அரபி, பார்ஸி மொழிகள் இல்லாமலில்லை.

மிராசுதார் உலகத்தில் அடிபடும் மொழிகளைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. "கிஸ்து," "மகசூல்," "வசூல்," "ஜப்தி," "ஜாரி," "அசல்," "பாக்கி," "ஜாமீன்," "ரசீது," "வக்கீல்," "தாவா," "தாக்கல்," "ஜமீன்," "மிராசு," "பசலி," "மாமூல்," இவை எல்லாம் அரபி அல்லது பார்ஸி; அரபியே அதிகம்.

வசந்தன், ஆபீசிலிருந்து வந்தான். வந்ததும் தலையிலிருந்த சரிகை உருமாலையை எடுத்து மெதுவாக மேஜைமேல் வைத்து விட்டு, சோம்

பேறி, நாற்காலியில் கால் நீட்டி உட்கார்ந்து மனைவியைக் கூப்பிட்டு, "காமு, நல்ல காப்பி போடுவாயா? முதல் தரமாக இருக்க வேண்டும் எவ்வளவு ஜல்தியில் முடியுமோ அவ்வளவுக்கு நல்லது" என்றான்.

இந்தியாவுக்குக் "காப்பி" அரபி தேசத்திலிருந்து வந்தது. கூடவே அதன் அரபிப் பெயரும் வந்தது. இது சகஜம். ஆனால் "ஜல்தி" என்ற அரபி மொழி என்னத்திற்கு? இதைப் பேச்சில் கலப்பதில் தமிழருக்கு ஒரு தனி மகிழ்ச்சி. "சரிகை" பார்ஸி மொழி; 'ஜரி' என்பது தமிழில், 'சரிகை' யாயிற்று. "உருமாலை" என்பதும் பார்ஸி. 'மாலை' க்கும் 'உருமாலைக்கும்' சம்பந்தமில்லை. 'ருமால்' என்ற பார்ஸி மொழியின் திரிபு அது. வடநாட்டில் ருமால் என்றால் கைக் குட்டை, அதாவது முகம் துடைக்கும் துணி என்று பொருள். தமிழ், தெலுங்கு, கன்னட தேசங்களில் கைத் துண்டைத் தலையில் கட்டிய காரணத்தால் 'உருமால்' என்பது தலைப்பாகை யாயிற்று. "டோபி" என்றால் ஹிந்துஸ்தானி என்றும், "குல்லாய்" என்பது நல்ல தமிழ் என்றும் சிலர் எண்ணலாம். ஆனால் "குல்லா" யும் பார்ஸியே. "மேஜை" என்பது பார்ஸி. "முதல் தரமான காப்பி" என்பதில் "தரம்" என்பது உண்மையில் தமிழல்ல, அரபி.

"நீங்கள் இப்படி அவசரப் படுத்துவீர்கள் என்று எனக்குத் தெரியும். காப்பி தயாராக வைத்திருக்கிறேன்"

# தமிழில் அரபி பார்ஸி

"பேஷ்! அப்படியல்லவோ இருக்க வேண்டும் வாழ்க்கைத் துணைவி."

"பேஷ்" "சபாஷ்" வகைரு மகிழ்ச்சிக் குறிப்புகள் பார்ஸியிலிருந்து தமிழருக்குக் கிடைக்காமலிருந்திருந்தால், பாட்டுக் "கச்சேரி"கள் தமிழ் நாட்டில் எவ்வாறு நடந்திருக்கும்! "வகைரு" என்றேன். "வகைரு" என்பதற்கும் "வகை" என்ற தமிழ் மொழிக்கும் ஒரு சம்பந்தமுமில்லை. "வகைரு" என்பது சுத்த பார்ஸி மொழி. அதிலுள்ள ககரம் நெஞ்சிலிருந்து வரவேண்டும். "கச்சேரியைப்" பற்றிச் சொல்ல வேண்டியதே யில்லை.

'தயார்' என்பது ஒரு சுத்த அரபி மொழி. "சாப்பாடு தயார்," "கல்யாணத்துக்கு எல்லாச் சாமானும் தயார் ஆகிவிட்டதா?" "அவன் எதற்கும் தயார்" என்றெல்லாம் தமிழ் வீடுகளில் பேச்சு நடக்கும்போது அரபி மொழி ஒன்றைக் கொண்டு வந்து உள்ளே விட்டதாக யார் எண்ணுவார்கள்?

வசந்தன் நிமிர்ந்து உட்கார்ந்து பேலாவை நாஜூக்காக வாயில் வைத்து மனைவியைப் பார்த்த வாக்காக காப்பியை உறிஞ்சினான்.

"சுமாராக இருக்கிறதா?" என்றாள் மனைவி.

"கொஞ்சம் சர்க்கரை ஜாஸ்தி" என்றான் வசந்தன்.

"நேற்று இவ்வளவேதான் போட்டேன். கம்மி என்றீர்களே?"

"நேற்று காப்பிப் பொடி ஜாஸ்தியா யிருந்திருக்கலாம், அதனால் சர்க்கரையை எடுத்துக் காட்டவில்லை."

"சரி, இனி எல்லாம் தராசில் நிறுத்துத்தான் நான் சமையல் வேலை செய்ய வேண்டும்."

"குஸ்திக்கு வரவேண்டாம், அம்மே! கேட்டதற்குப் பதில் சொன்னேன்."

"குஸ்தி" பார்ஸி என்பது வெளிப்படை. "பேலா"வும் பார்ஸி. "ஜாஸ்தி" "கம்மி" "தராசு" "நஜூக்" எல்லாம் பார்ஸி. "ஜாஸ்தி" என்பது மொகலாய மகராஷ்ட்ர ஆட்சியில் நிலத் தீர்வை ஜமாபந்தி மொழிகளுடன் வந்திருக்க வேண்டும்; 'ஜ்யாததி" என்ற பார்ஸி மொழியின் சுருங்கிய உருவம். "சுமார்" என்ற சாதாரண மொழியும் ஒரு சுத்த பார்ஸி மொழி. "பதில்" என்பதும் நல்ல அரபி மொழி, தமிழல்ல. தோற்றத்திலும் உபயோகத்திலும் "சுமார்" என்பது "ஏறக் குறைய" என்பதைத் தோற்கடிக்கும். "பதில்" என்பதும் அவ்வாறே "விடை" என்பதைத் தோற்கடிக்கும்.

"கதர்க் கடையில் புதுத் தினுசு நிறைய வந்திருக்கிறதாம். போய்ப் பார்க்கலாம், நீங்களும் வாருங்கள். அப்படியே கலாயக்காரனிடம் கொடுத்திருக்கும் பாத்திர சாமான்களையும் வாங்கி வரலாம்."

## தமிழில் அரபி பார்ஸி

"ஒரு மாதத்தில் எத்தனை தபா கலாயம் பூசுவது? மண் பாத்திரமே உபயோகித்தால் என்ன? உடம்புக்குங்கூட அது நல்லது என்கிறார்கள்."

"அப்படியே செய்யலாம். நீங்களும் ஆபீசில் காகிதத்திற்குப் பதில் பனை ஓலையே உபயோகித்து வரலாம்."

* *

"ரகம்" என்பது அரபி மொழி. "மோஸ்தர்" என்பதும் அவ்வாறே அன்னிய மொழி. ஆனால் "தினுசு" என்பது தமிழ் என்று சிலர் எண்ணலாம், இது தவறு. "தினுசு" என்பது ஒரு அரபி வியாபார மொழியின் தமிழ்த் திரிபு. "ஜினுசு" என்றால் அரபியில் வியாபாரச் சரக்குகள். "பட்டு ஜினுசு" "கம்பளி ஜினுசு"கள் "தானிய ஜினுசுகள்"கள் என்று உயர்ந்ததும் தாழ்ந்ததுமாகப் பண்டங்களை வகை வகையாகப் பிரித்து வைத்து விற்கும் முறையில் இம்மொழியின் உபயோகம். அதுவே "தினுசு" என்றாயிற்று. அதிலிருந்து "அவன் பேச்சே ஒரு அலாதி தினுசு." "இது புது தினுசு மீசை" என்றெல்லாம், விற்பனைக்கு அமைக்கப்படாத விஷயங்களைப் பற்றியும் இம்மொழியின் பிரயோகம் நடைபெற்று வருகிறது.

"கலாயம்" என்பது அரபி மொழி. தங்கம் வெள்ளி முதலிய நாகரிகப் பூச்சுக்கு "முலாம்" என்பதும் அரபி மொழியே. "சாமான்" என்பது பார்ஸி. மகர ஒற்றும் னகர ஒற்றும் மொழியின் ஈற்றில்

வந்து தமிழ் வடிவமாகப் பொய்த் தோற்றம் காட்டு கிறது. "காகிதம்" என்பதும் பார்ஸி. ஹிந்துஸ் தானியில் காகஸ் (Kagaz) என்பார்கள். "கடுதாசி" என்றாலும் அன்னிய பாஷையிலிருந்து தப்பமாட் டோம். அது அரபி "கிடதாஸ்" (Qirtas) என்பதன் திரிபு. மலையாளத்தில் அரபிச் சேர்க்கை அதிகமான படியால் "கலதாஸி" என்று அந்தத் தேசத்தில் அதிக மாக வழங்கும்.

"எங்கள் அம்மா கல் சட்டியில் குழம்பு செய்வாள். அதன் ருசியே அலாதி."

"அம்மா எது செய்தாலும் உங்களுக்கு நன்றாக விருக்கும். நான் கல் சட்டியல்ல பொன் சட்டியில் செய்தாலுங்கூட உங்களுக்குப் பிடிக் காது."

"மன்னிக்க வேண்டும். நான் சொன்னதை வாபிஸ் வாங்கிக் கொள்ளுகிறேன்."

"வாபிஸ்" என்பது பார்ஸி. "அலாதி" என் பது ஒரு அரபிப் பதம். இது எவ்வாறு தமிழில் வந்து சேர்ந்தது என்று அரபி வித்வான் ஒருவர் மிகவும் வியந்தார். "அண்ணன் பங்கும் என் பங்கும் அலாதி" என்றெல்லாம் பேச்சில் சாதாரணமாக வழங்கி வருகிறது.

"ஆசாமி பரவாயில்லை; கெட்டிக்காரன்."

"இனமாகக் கொடுத்தாலும் வேண்டாம்."

## தமிழில் அரபி பார்ஸி

"நீ என்ன அவனுக்கு சிபார்சு பேசுகிறாய்?"

"கடன் வாங்கின ஆசாமிகளில் பாதிப்பேர் பராரி."

"இரண்டு மாதத்திற்குள் பைஸல்."

"இந்தச் செருப்புக்கு யாரும் வார்சு இல்லை போலிருக்கிறது."

இத்தகைய செந்தமிழ்ப் பேச்சில், "ஆசாமி," "பரவா," "இனும்," "சிபார்சு," "பராரி," "பைசல்," "வார்சு" எல்லாம் அரபி அல்லது பார்ஸி.

"அரபி மொழிகள் ஏன் உபயோகிக்கக் கூடாது? சம்ஸ்கிருதம் மாத்திரம் ஒசத்தியோ?"

அப்படி யாரும் சொல்லவில்லை. எந்த மொழியானாலும் சரிதான்; வழக்கத்தில் வந்து, தமிழ் வடிவம் பெற்று, அனைவரும் பொருள் அறிந்த வார்த்தையா யிருந்தால், அதைப் பொருந்திய இடத்தில் உபயோகிப்பதில் யாதொரு பிசகுமில்லை. வைதிகர்கள் கூட ஆட்சேபிக்க மாட்டார்கள்! இதற்கு, "சாஸ்திரிகளே, வீண் தகரார் பேசிக்கொண்டிருக்க வேண்டாம். பூஜை சாமான்கள் தயார் செய்யுங்கள்" என்பதைவிட வேறு உதாரணம் வேண்டியதில்லை.

3

# கலைச் சொல்லாக்க முயற்சிகள்

தனக்கே தெரியாது, தன்னுடலின் அழகு; பிறருக்குத் தான் தெரியும். அதிக சிரமப்பட்டு நிலைக்கண்ணடி வைத்துப் பார்த்துக் கொண்டாலும் தன் அழகு சரியாகத் தெரிந்துகொள்வது துர்லபம்.

இவ்வாறே தமிழ்மொழியின் அழகு தமிழருக்குத் தெரிவதில்லை. தமிழ் பேசுவதிலும், படிப்பதிலும், எழுதுவதிலும் தன்னை யறியாமல் தமிழனுக்கு உண்டாகும் உள்ளுவப்பேதான் தமிழின் அழகுக்குப் பிரமாணம். அந்த அழகை வெளித் தோற்றமாகத் தமிழருக்கு எடுத்துக்காட்டுவது கஷ்டம்.

சிற்பம் எவ்வளவு அழகு வாய்ந்ததா யிருந்தா லும், உடல் எவ்வளவு ஆரோக்கியம் கொண்டதா யிருந்தாலும், சரிவரக் கவனித்துப் போற்றுமல் விட்டு விட்டால் கெட்டுப்போகும். பெரிய மாளிகையானு லும், சுத்தமாகவும், ஒழுங்காகவும் வைத்துக்கொள்ளா மற் போனால் குடியிருக்க இடமும் வசதியும் போதாமல் போகும். பாஷையும் இவ்வாறேதான். போற்றப்

படாமற்போனால், நாளாவட்டத்தில் எந்தப் பாஷை யும் அழகு குன்றி சொல்வளம் குன்றி, லாகவமும் குன்றியதாகத் தோன்றும் ; உண்மையில் குன்றியும் போகும். பிற மொழிகளைக் கடன் வாங்கி வாங்கி, உள்ள மொழிகளை மறக்கவும், தாய் மொழியை வெறுக்கவும் ஏற்பட்டுவிடும். இப்போது நாம சுதந்தர மும் பெருமையும் நீங்கி அடிமையும் சிறுமையுமடைந் துள்ளோம் என்பதை அனைவரும் காணக்கூடியபடி, ஒரு தோல்விக் கொடிபோல எப்போதும் ஆங்கில மொழிகளை உபயோகிக்கும் வழக்கத்தை மேற்கொண் டிருக்கிறோம். மொழிப்பிச்சையில்லாவிட்டால் வாழ்க் கையே சாத்தியமில்லை என்று முடிவு கட்டிவிட்டது போல் நடந்து கொள்ளுகிறோம்.

ஆங்கிலத்தின் நரம்புக்கட்டும், லாகவமும், பொருட் செறிவும் தமிழில் கிடையாது என்று தமிழை மறந்த தமிழர் எண்ணுகிறார்கள். இவர்கள் புதிய சொற் களும் சொற்றொடர்களும் ஆக்கினாலல்லது தமிழில் எதையும் இக்காலத்தில் சொல்லமுடியாது என்பார் கள். பழைய சொற்களையும் புராதனக் கலைகளையும் மறந்துவிட்டதே இவ்வாறான எண்ணங்களுக்குக் கார ணம். வீட்டிலுள்ள பழைய பெரிய பெட்டியில் கிடக் கும் பட்டாடைகளை மறந்து, கந்தல் துணியுடன் கடைக்குப்போய்க் கடனுக்குச் சேலை வாங்குவதைப் போன்றது இந்த மொழிப்பிச்சைக் கொள்கை.

*Plus*, *minus*, $x^2$, $x^3$, $x^n$, *equation*, *square*, *cube root* - இவைகளையும், ஏன், ஏறக்குறையக் கணிதமுழு

வதையும் பல நூற்றுண்டுகளுக்குமுன் வேறு பாஷைக் கலப்பின்றி, உலகத்திற்கு அளித்த இந்திய நாடானது, ஊரூராய் அலைந்து மறுபடி தாய் வீட்டுக்கு அந்தக் கலை திரும்பி வந்த காலத்தில், 'உனக்கு உடுக்க இங்கே ஆடையில்லை. பிற தேசத்தாருடைய உடுப்புக்கள் அணிந்து தான் நீ இங்கே இருக்கலாம்' என்கிறது! என்ன வெட்கக்கேடு! இதுவே வேறு பல சாஸ்திரங்களின் நிலையும். எல்லாக் கலைகளுக்கும் போதிய மொழிச் செல்வம் நம் தாயண்டை உள்ளது. தமிழும் சம்ஸ்கிருதமும் சேர்ந்து உலகத்தையே அளக்கலாம். நம் நாட்டுக்குப் பழக்கமான உடை உடுத்திஞல்தான் கலைகளைக் கண்டு பயப்படாமலும் திகைக்காமலும் நம்நாட்டு மக்கள் அவைகளண்டை நெருங்கிப் பழகுவார்கள், பயனும் அடைவார்கள்.

ஒரு விஷயத்திற்குச் சொல் இல்லை, புதிதாகத் தான் ஆக்கிக் கொள்ளவேண்டும் என்று ஆழ்ந்து சோதித்துப் பார்த்து முடிவு செய்தால் - சோம்பேறித் தனத்தாலும், அறியாமையாலும், அவசரத்தாலும் இல்லாமல், உண்மையில் முயன்றும் கிடைக்கவில்லை என்ருல் - புதியதொரு சொல்லை ஆக்கும் முறையில் ஈடுபடவேண்டியது அவசியம். அந்தந்த சாஸ்திரம் படித்தறிந்தவர்கள்தான் அந்தந்த சாஸ்திரத்துக்கு வேண்டிய சொற்களை விஷயநுட்பமறிந்து அமைக்க முடியும். கலைப்பயிற்சி இல்லாதவர்கள் ஆட்சேபணையும் சமாதானமும் எளிதில் சொல்லிவிடுவார்கள். ஆழ்ந்த அறிவுடன் ஆராய்ச்சி செய்யத் தகுந்தவர்கள் தான் இந்தப் பணியில் கலந்துகொள்ளலாம். நல்ல

முறையில் ஆக்கப்பட்ட சொற்களை, அறிந்தவர்கள் மகிழ்ச்சியுடன் போற்றுவார்கள். பழைய கலைச் சொற்களைத் தேடித் திரட்டுவதும், புதிய சொற்களை ஆக்குவதுமான இந்தப் பணியை, தனித்தமிழ் இயக்கத்துடன் கலந்து கலவர முண்டாக்கிக் கொள்ளுதல் தவறாகும்; தமிழில் கலந்துகொள்ளும் தன்மைகொண்ட சம்ஸ்கிருத மொழிகளைக் காரணமின்றி வெறுத்தல்கூடாது; தனித்தமிழ் வெறியும், வடமொழி மோகமும் - இரண்டும் இந்தத் தமிழ்ப் பணிக்குத் தடைகளாகும்.

'உலகம் முழுதும் ஆங்கிலமொழி பரவி வருகிறது. நாமும் ஆங்கிலக் கலைச்சொற்களையே அமைத்துக் கொண்டாலென்ன? சப்தத்தில் எனது, உனது என்றெல்லாம் ஏது, விஷயம்தானே முக்கியம், காலத்தை ஏன் வீண்போக்க வேண்டும்?' என்றெல்லாம் சிலர் வாதம் செய்வார்கள். இதற்குப் பதில் சொல்லி முடிவு கட்ட இயலாது. யுக்தி வாதத்தைவிட உள்ளத்தின் உவப்பே பிரமாணம். தமிழ்மொழியால் ஒன்றைக் குறித்தவுடன் தமிழனுக்கு அது மனதோடு மனதாகக் கலந்து மகிழ்ச்சி தருகிறது. மற்ற இரவல் மொழிகளால் தமிழனுக்கு அந்த மகிழ்ச்சி உண்டாகமாட்டாது. இந்த ஒரு காரணமே போதும்.

LIBRARY SERVICE INDIA
KOTTAIYUR-623106.
TAMILNADU

# 4

## தமிழ் எழுத்துக்கள்

தமிழ் எழுத்துக்குறிகள் மிகவும் குறையுடையன வென்பது அன்னியர்களுடைய அபிப்பிராயம். க, ச, ட, த, ப, இவ்வைந்து தமிழ் எழுத்துக்குறிகளும் முறையே, क ख ग घ ह; च छ ज झ श स; ट ठ ड ढ; त थ द ध; प फ ब भ; இந்த இருபத்துமூன்று வடமொழி எழுத்துக்களுக்கும் பதிலாக நிற்பது பெருங் குறை என்பார்கள். மலையாளம், தெலுங்கு, கன்டம், இந்தத் திராவிட பாஷைகளில் இவ்விருபத்துமூன்று எழுத்துக்களுக்கு இருபத்துமூன்று குறிகள் வழங்குகின்றன. ஆனால் தமிழில்,

க என்பது क, ग, ह என்ற மூன்று உச்சரிப்புக் களையும் குறிக்கும் ;

ச என்பது श, च, ज, என்ற மூன்று சப்தங்களுக் கும் நிற்கும்.

ட என்பது ड, ट என்ற இரண்டு வகை உச்சரிப் பும் கொள்ளும்.

த என்பது द, त என்று இரண்டு வகையாகவும் உச்சரிக்கப்படும்.

ப என்பது प, ब என்ற இரண்டு எழுத்துக்களுக்கும் ஒரு குறியாகும்.

ஆக இந்த ஐந்து எழுத்துக்கள் பன்னிரண்டு உச்சரிப்புக் கொள்ளும்.

மற்ற பதினெரு உச்சரிப்புக்கள் தமிழில் கிடையவே கிடையாது. தமிழில் இராத உச்சரிப்புக்களுக்குத் தமிழில் குறிப்புக்கள் இல்லாதது ஒரு குறையாகாது. ஒப்புக்கொள்ளப்பட்ட குறையை மட்டில் ஆராய்வோம். உண்மையில், சரியாக ஆராய்ந்து பார்த்தால், இந்தக் குறை குறுகிக்குறுகி முற்றிலும் ஒரு விதிக்குட்பட்டுப் போவதைக் காண்போம். எவ்வாறென்பதைப் பார்க்கலாம்.

க என்பது மொழியின் முதலெழுத்தாக வந்தால் தான் क உச்சரிப்பு. மொழியின் இடையிலோ, ஈற்றிலோ வந்தால் ह உச்சரிப்புக் கொள்ளும்; உதாரணம் : களவு, கொடுமை, காடு, கிளி, குதிரை; பகுதி, தகுதி, விகுதி, வகை, ஆகாரம், அதிகம், ஆகும், வருக என்பன. மெல்லின எழுத்துடன் சேர்ந்து வந்தால் ग உச்சரிப்புக் கொள்ளும்; பங்கு, தங்கம், வாங்கலாம் முதலியன. க இரட்டித்தால் சுத்த வல்லின ஓசை பெறும்; பக்கம், அக்கா, தக்கவன்.

ச என்பது மொழியின் முதலிலும், இடையிலும், ஈற்றிலும் श உச்சரிப்புத்தான் கொள்ளும்; செவ்



ROJA MUTHIAH
KOTTAIYUR-623 106
NADU, INDIA

வாய், சுவை, சும்மா, சாதல், பசி, மாசு, கொசு, தசை, ஆசான், முதலியவாறு.

இரட்டித்தால்தான் च வல்லோசை பெறும்; அச்சம், பச்சை, தச்சன், கச்சை, அச்சு, பிச்சை முதலியன. மெல்லினத்துடன் வந்தால் ज ஓசை பெறும்; பஞ்சம், இஞ்சி, தஞ்சை முதலியன.

ட என்பது ड உச்சரிப்புத்தான். ट என்கிற உச்சரிப்பு இரட்டித்தால்தான் வரும்; கட்டு, பட்டை, கட்டை, கட்டில், மட்டு. இடு, ஆடு, ஓடு, கடை, வடக்கு, தடை, முதலியவைகளில் ட என்பது ड़ உச்சரிப்பே. மெல்லினத்துடன் ड என்றாகும் என்பது சொல்லாமலே விளங்கும்; பண்டம், வண்டி, கூண்டு முதலியன.

த என்பது மொழியின் முதலில் त உச்சரிப்பு; இடையிலும் இறுதியிலும் द உச்சரிப்பு.

தகப்பன், தாய், தித்திப்பு, தோல், துவையல், தையல்.

அது, இது, பொது, பாதி, பகுதி, காதம், கதை, மாதம், காதல். இரட்டித்தால் त உச்சரிப்புப் பெறும்; மெத்தை, கத்து, வாத்து, அத்தி முதலியன.

மெல்லினத்துடன் வரின் द உச்சரிப்பு; வந்து, கந்தல், கூந்தல், மந்தி.

ப என்பது மொழியின் முதலில் प உச்சரிப்பு; பாலம், பசு, பொது, பூட்டு. இரட்டித்தாலும் प உச்சரிப்பு; அப்பம், கப்பல், தித்திப்பு, அப்போது.

இரட்டிக்காமல் இடையிலும், ஈற்றிலும் வந்தாலும், மெல்லினத்துடன் வந்தாலும், ब உச்சரிப்பு; கம்பம், வம்பு, அம்பு, செம்பு, உருபு, மரபு, திரிபு, ம்ரார்பு.

றகர ஒற்றுக்குப் பின் வரும் வல்லின எழுத்தை இரட்டித்ததாகவே வைத்துக்கொள்ள வேண்டும்; ஆகையால், அது வல்லோசை பெறும். ஆகவே, பொதுவாக, வல்லின எழுத்துக்கள் மொழியின் முதலி லும், றகர ஒற்றுக்குப்பின் அல்லது இரட்டிக்கும் போதே வல்லோசை பெறும். மற்ற இடங்களில் உண்மையான வல்லின ஓசை பெறாது. இடையிலும், ஈற்றிலும் க என்பது ஹ ஆகும். ச என்பது श என்ற எழுத்தேயாகும்; றகரத்திற்குப் பின் அல்லது இரட் டித்தால்தான் च ஆகும். ட என்பது ड எழுத்தேயாகும்; இரட்டித்தால்தான் ट ஆகும்.

மெல்லினத்திற்கு அடுத்தாற்போல் எல்லா வல்லின எழுத்துக்களும் முறையே ग, ज, ड, द, ब ஆகும்.

வடமொழிச் சொற்களைத் தமிழில் கொள்ளும் போது அவைகளின் சம்ஸ்கிருத உச்சரிப்பே வைத்துச் சொல்லவேண்டும் என்பது கூடாது. அது தமிழ் முறையாகாது. மணிப் பிரவாளமாகும். வருஷம் என்றுதான் தமிழில் சொல்ல வேண்டும்; வர்ஷம் என்பது தமிழல்ல. மாதம் என்று சொல்லு வதுதான் சரி; மாஸம் என்பது சுத்த சம்ஸ்கிருதமே யாகும்; தமிழாகாது. அவ்வாறே, துவேஷம், மாமி சம், சீதை, அருச்சுனன் முதலியன. புராதனமாகத் தமிழில் வழங்கும் வடமொழிச் சொற்களுக்குத் தமிழ்

உச்சரிப்புக் கொடுத்துச் சொல்லுவதே முறையாகும். த்வேஷம், மாம்ஸம், ஸீதா, அர்ஜுனன் என்று உச்சரிப்பது தமிழல்ல. இதை ஞாபகத்தில் வைத்தால் மேலே நான் குறிப்பிட்ட விதிகள் தமிழில் கலந்த வடமொழிச் சொற்களுக்கும் பொருந்தும் என்பது விளங்கும். சீதை என்பதைத் தமிழில் शीतै என்றுதான் சொல்லுகிறோம். सीता அல்லது सीतै என்பது தமிழர் முறையாகாது. கதை என்பதை कदै என்று உச்சரிப்பதுதான் தமிழ் முறை. 'அதை', 'கதை', 'விதை', 'மதி', 'அன்னையும் பிதாவும்', இவைகளெல்லாம் தமிழர் த என்பதைத் தெரிந்தும் தெரியாமலும் द வாகத்தான் உச்சரிப்பார்கள். அவ்வாறு உச்சரிப்பது தமிழ் முறையில் சரியேயாகும். நான் கூறியிருப்பது வடமொழிப் பயிற்சியடைந்தவர்களுக்கும் தெலுங்கு கன்னடம் வழங்கும் பிரதேசங்களில் வசிக்கும் தமிழர்களுக்கும் சில விஷயங்களில் வித்தியாசமாகத் தோன்றலாம்.

தாகம், தசரதன், தமயந்தி, துரோணன் என்பவையில் மொழியில் முதலில் நிற்கும் தகரத்தைத் தமிழர் त ஆகவே உச்சரிப்பார்கள்; அவ்வாறு உச்சரிப்பதும் சரியேயாகும். द என்று உச்சரிப்பது வடமொழிப் பயிற்சியினால் ஏற்பட்ட வழக்காகும். தமிழில் நன்றாகப் பதியாத வடமொழிச் சொற்களின் உச்சரிப்பு சம்ஸ்கிருதத்தை ஒட்டியே நிற்கும். அச்சொற்களுக்கு மேற்குறித்த விதிகள் பொருந்தா. ஆகவே, தமிழில் உள்ள உயிரெழுத்துக்களும், மெல்லின இடையின எழுத்துக்களும், குறைவின்றி இருக்கின்றன. வல்லின எழுத்

துக்கள் மேற்கண்டவாறு சில விதிகளுக்குட்பட்டு, மாறுபாடு இல்லாமல் இடத்தை யனுசரித்து உச்சரிக்கப் பெறுவதால்* அவ்வகையிலும் கூறப்படும் குறையானது உண்மையில் குறை ஆகாது.

---

*சென்னைப் பல்கலைக் கழகத்தார் ஆதரவில் பிரசுரிக்கப்பட்டிருக்கும் தமிழ் அகராதியில், தமிழ் மொழிகளுக்கெதிராகக் கொடுக்கப்பட்டிருக்கும் 'ரோமன்' உச்சரிப்புக் குறிகளில், க, ச, ட, த, ப. எழுத்துக்களை ஒரே மாதிரியாக எல்லா மொழிகளிலும் எல்லா ஸ்தானத்திலும் (क, च, ट, त, प,) *k*, *ch*, *t*, *t*; *p* என்று காட்டியிருப்பதன் பொருள் எனக்கு விளங்கவில்லை. அவ்வாறு தான் தமிழர் உச்சரிக்கிறார்கள், அல்லது உச்சரிக்க வேண்டும், என்பது அகராதி ஆசிரியர்களின் எண்ணம் என்று வைத்துக்கொள்ளுவது சுத்த அசம்பாவிதமாகும். 'அது' என்பதை *atu* (अतु), 'இடு' என்பதை *itu* (इडु), 'கொடு' என்பதை *kotu* (कोडु) என்று அகராதியில் காட்டியிருக்கிறபடி தமிழர் யாராவது உச்சரிக்கிறார்களா, உச்சரிக்கச் சம்மதிப்பார்களா? இவ்வகராதியில் தமிழ்ச் சொற்களுடன் கலந்த மலையாளம், கன்னடம் இச்சொற்களைச் சரியான முறையில் *adu*, *kodu* என்று காட்டி, தமிழ்ச் சொற்களைமட்டும் இவ்வாறு தவறான உச்சரிப்புகளைக்காட்டி 'ரோமன்' எழுத்துக்களில் எழுதியிருப்பதன் நோக்கமும் பயனும் விளங்கவேயில்லை. தமிழ் அறியாதவர்களுக்காக ரோமன் எழுத்துக்களில் மொழியைக் காட்டியிருக்கிறது. அவ்வாறு தமிழ் அறியாதவர்களுக்குச் சரியான தமிழ் உச்சரிப்பை அல்லவோ கொடுக்க வேண்டும்? அதற்குப் பதில் *atu* (அது), *itu* (இது), *vantu* (வந்து), *pokutal* (போகுதல்), *aimpatu*

தமிழ்ச் சொற்களுக்கும் தமிழருக்குமே தமிழ் எழுத்துக் குறிகள் உண்டாக்கப்பட்டவை. பிற பாஷைகளைத் தமிழ் எழுத்தைக்கொண்டு எழுதப் புகின் பல குறைகள் தோன்றும். அதைக்கொண்டு தமிழ் எழுத்துக்களை நாம் குறை கூறுவதோ இகழ்வதோ கூடாது.

---

(ஐம்பது), *eppati* (எப்படி), *inta* (இந்த), *atippatutal* (அடிப்படுதல்) என்றெல்லாம் காட்டியதன் தத்துவம் என்ன?

5

# பொருளற்ற சண்டைகள்

[இது 1930-ஆம் வருஷத்தில் என்னுடன் சிறையி லிருந்தவர்களுக்குச் சொன்னது.]

தமிழ்நாட்டில் ஓர் இயக்கம் பரவப் பார்க்கிறது. அத ஞல் ஒற்றுமைக்குக் கேடு உண்டாகும். தமிழன்பும் தமிழ்க் கல்வியும் தமிழர்களுள் ஒற்றுமை யுண்டாக்க வேண்டியிருக்க, அதைக்கொண்டே பிரிவினை யுண் டாக்கச் சிலர் பார்க்கிருர்கள். தமிழ்த்தாய் தன் குழந்தைகளை ஒன்றுபடுத்தத் தமக்குத் தந்த பிரசாத மாக சுப்பிரமணிய பாரதியார் தம் கவிதையைக் கருதி ஞர். இப்போது சிலர் தம் தமிழ்க் கல்வியைக்கொண்டு தமிழ் மக்களை இரு வகுப்பாகப் பிரித்து நாட்டைப் பாழாக்கப் பார்க்கிருர்கள்.

தமிழ் நாகரிகம் வேறு ஆரிய நாகரிகம் வேறு என்றும், தமிழ் நாகரிகத்தை ஆரிய நாகரிகம் கெடுத்து விட்டதாகவும், மறுபடி தமிழ் நாகரிகத்தை வாழ்வில் உயர்பதவிக்குக் கொண்டுவந்து நிறுத்துவது தமிழர் கடமையென்றும் இவர்கள் உபதேசித்து வருகிருர்கள்.

இத்தகைய கொள்கைகளுக்கு மூலம் ஐரோப்பியர் சிலர் எழுதிய புத்தகங்களும் சொல்லி வந்த கற்பனைகளுமே. இந்தியாவிலுள்ள மக்கள் ஒரு சாதியாரல்ல, ஒரு நாகரிகம், ஒரு பாஷை, ஒரு பூர்வ சரித்திரம் கொண்டவர்களல்ல, எளிதில் அவர்களைப் பிரித்தாளலாம் என்பதே அவர்கள் ஆசையும் அவர்கள் எண்ணமுமாகி, அதை அனுசரித்தே அவர்களுடைய ஆராய்ச்சியும் கற்பனைகளும் நடைபெற்றன. அதைப் படித்துப் படித்து நம்மவர்களும் அவற்றில் நம்பிக்கையும் மோகமும் கொண்டு, ஆரிய திராவிட வேற்றுமைகளை விடாமல் பிடித்துக்கொண்டிருக்கிறார்கள்.

மிகப் பழைய தமிழ் நூல்களிலுங்கூட இன்று 'ஆரியர்' வணங்கும் தெய்வங்களையேதான் காண்கிறோம். அக்காலத்துத் தமிழர் வேறு எந்தத் தெய்வங்களையும் கும்பிட்டதாகக் காணப்படவில்லை. நமக்குக் கிடைத்திருக்கும் தமிழ் நூல்களில் மிகத் தொன்மையானதென்று கருதப்படும் நூலிலும் வேதத்தில் சொல்லப்பட்ட இந்திரனைத் தமிழர் வணங்கியதாகக் காண்கிறோம். தமிழர்களும் அறம், பொருள், இன்பம், வீடு என்றே வாழ்க்கை நலன்களைப் பிரித்து வந்தார்கள். இவ்வாறே இன்னும் பல விஷயங்களும்.

வங்காளத்திலுள்ள மக்கள் தங்கள் நாட்டின் நாகரிகத்தை ஆராய்ச்சி செய்து, அதில் எப்பகுதி வங்காளத்திலேயே உண்டான புராதனப்பகுதி, எப்பகுதி வடமேற்கிலிருந்து ஆரியர் கொண்டுவந்தது என்று பிரித்து மகிழ்வதும் வெறுப்பதும் கிடையாது. தமிழ

ராகிய நாம் மட்டும் ஏன் நம்முடைய வாழ்க்கைச் செல்வத்தைப் பிரித்து, எது நமது, எது வெளியிலிருந்து வந்தது என்று கிளறுவதில் கவனம் செலுத்த வேண்டும்? ஐரோப்பிய வித்துவான்கள் சிலரின் அறியாமையும் கற்பனைகளுமே இதற்குக் காரணம். அது பெரிய ஆபத்தாய் முடிந்திருக்கிறது. பழம் பொருளாராய்ச்சிக்காரர் சிலர் மேல்நாட்டிலிருந்து வந்து, எதைக் கண்டாலும் அதன் இரகசியத்தையுணரவல்லோம் என்று இந்தியாவில் வழங்கும் புராணங்களையெல்லாம் ஆராயப் புகுந்தார்கள். இராமாயணத்தையும் மகாபாரதத்தையும் பார்த்தார்கள். 'ஓகோ! ஆரியர்களுக்குள் இருகூட்டத்தார் பெரிய கலகம் ஒரு காலத்தில் நடத்தினார்கள். அதுவே பாரத யுத்தம்; இராமாயணக் கதை ஆரியர்களுக்கும் திராவிடர்களுக்கும் நடந்த பெரியதொரு யுத்தம்' என்றார்கள். அதை வைத்துக்கொண்டு ஆங்கிலப் பள்ளியில் படித்த நம் பண்டித சிகாமணிகளும் ஆராய்ச்சி வேட்டை ஆரம்பித்தார்கள். சிறு வயதில் புகட்டிய கற்பனைகளை மனதைவிட்டு எளிதில் அகற்றமுடியாது; ஐரோப்பிய ஆராய்ச்சிக்காரர்கள் கற்பித்த அஸ்திவாரத்தை வைத்து இவர்கள் அதன்மேல் இன்னும் புதுக் கற்பனைகளைச் சேர்த்துக் கட்டி வேற்றுமை உணர்ச்சியை உண்டுபண்ணுகிறார்கள்.

'வடக்கிற்கும் தெற்குக்கும் நடந்த கோர யுத்தமே இராமாயணம்' என்னும் வேடிக்கையைக் கண்டு அழுவதா சிரிப்பதா தெரியவில்லை. ரைடர் ஹாகார்டு என்னும் ஆங்கில ஆசிரியர், 'ஷீ' என்ற ஒரு கதை எழுதி

ஞர். அதை ஓர் உண்மைச் சரித்திரமாக எண்ணி அதைக் கொண்டு ஆப்பிரிக்கா தேசத்துப் பூர்விக சரித்திரத்தை ஆராய்ச்சி செய்தால் நகைப்பார்கள். ஆனால் அதை ஒத்ததே இராமாயண இதிகாசத்தை ஆரிய திராவிடப் போராக்குவதும்.

இந்தப் பண்டித சிகாமணிகளில் சிலர் இராவணனை ஒரு தமிழனாகப் பாவித்து வருகிறார்கள்! அதிலும் இராமனைத் தீயவனாகவும் இராவணனை உண்மையில் நல்லவனாகவும் கருதிப் பார்க்கிறார்கள்; தமிழர் இம்மாதிரி இராவணனைப் பாராட்டப் பார்ப்பதைக் கண்டு தெலுங்கர் நகைப்பார்கள். படித்த தமிழருள் இந்த விபரீதக் கற்பனை எவ்வளவு தூரம் பரவியிருக்கிறது என்பதைத் தெலுங்கர் எப்படியறிவார்கள் பாவம்! நமக்குள் இவ்விஷயத்தில் தீவிர மத வேறுபாடு ஏற்பட்டு ஒருவரையொருவர் வெறுப்பதும் பகைப்பதுமாகவிருக்கிறது என்று அவர்கள் அறியாதபடியால், இது ஒரு வேடிக்கை என்று ஆந்திரர்கள் எண்ணலாம். வால்மீகிமுனி, அல்லது யார்முதலில்பாடினாரோ அந்தக் கவிஞர், ஓர் அரக்கனைக் கற்பித்தார். உள்ளும் புறமும் மகா பயங்கரமாகவிருந்த ஒரு பிரகிருதியைச் சிருஷ்டித்தார். தமிழர் சிலர் அந்த அரக்கனை நம் குலபுருஷன் என்று வைத்துக்கொள்ள முற்படுகிறார்கள்! கதையைச் சரித்திரமாக்கி, அதனின்று பகைமை யுண்டாக்கிக்கொண்டு ஒருவரையொருவர் தாக்கி, இல்லாத துக்கத்தைச் சம்பாதிக்கப் பார்க்கிறோம். கவிஞரொருவர் ஒரு காரணத்தை முன்னிட்டு ஒரு கற்பனை செய்து பாடினால், அந்தக் கற்பனை

யைச் சரிதையாக வைத்துக் கொள்ள முயல்வது மதி யீனமாகும். நன்மைக்கும் தீமைக்கும் உள்ள வேற்று மையைக் காட்டக் கவிஞர் கற்பித்த பாத்திரங்களை நம் முன்னோர்களாக எண்ணலாமா? பாடிய கவிஞர் நம் முடைய முன்னோர் என்பதனால் அவர் பாடிய காவியத் தில் உள்ள பாத்திரங்களை நம்முடையமுன்னோர்களாக வைத்துக்கொண்டு, கவிஞரைத் தூஷிக்கிறோம். இது சிரிப்புக்கு இடமாகிறது. நன்மைக்கும் தீமைக் கும் நடக்கும் போரைக் காட்டக் கவிஞர் பாடியது இராமாயணம் ஒன்றேயல்ல. இராமாயணத்திற்கும் முன்னமே, தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் போர் நடந்ததாக வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அவ் விரு கூட்டத்தாரும் வாசுகியைக் கயிறாகவும் மேரு மலையை மத்தாகவும் அமைத்துக்கொண்டு பாற் கடலைக் கடைந்ததாகக் கதையுண்டல்லவா? இதுவும் தமிழரைப் பற்றியோ? பாற்கடலைக் கடைந்ததும் ஆரியர் தமிழரை ஏமாற்றிய வரலாறோ? ஆழ்ந்த உண்மையையும் உயர்ந்த எண்ணங்களையும் எடுத்துக் காட்டக் கவிஞர் கற்பித்த அழகிய கற்பனைகளைப் பாடியும் படித்தும் பயன் பெறுவதற்குப் பதில், பத் திரிகைகளில் நமக்கு வேண்டாதாரைப்பற்றி மறை வாக நாம் இக்காலத்தில் எழுதி அவதூறு செய்வது போல் கவிஞர் அக்காலத்தில் தமக்கு வேண்டா தாரைத் தாக்கிப் பாடிய பாட்டுக்களாக அவைகளை எண்ணுவது மூடத்தனமாகும்.

நம் நாட்டைப்பற்றிச் சரியான சரித்திரமில்லை யாயின், இல்லையென்று ஒப்புக்கொள்வது நலம்.

வெறுங் கதைகளையும், கற்பனைகளையும் சரித்திரமாக்கி, ஒருவரையொருவர் துவேஷிக்கவேண்டாம். படித்த மூடர்கள் கவிஞருடைய கற்பனைகளை வெறுத்து, 'சரித்திர ஆராய்ச்சி செய்கிறோம்' என்று நூல்கள் எழுதினாலும் அவை ஆராய்ச்சியாகவே நின்றால் பொறுத்துக் கொள்ளலாம்; வேடிக்கையாகவிருந்தால் சிரிக்கவும் சிரிக்கலாம். ஆனால் அந்த ஊகங்களை அரசியல் போரில் கலந்து, மக்களிடையில் போட்டியும் துவேஷமும் புகுவதற்குக் கருவிகளாக்குவதைப் பொறுத்தல் கூடாது.

சில தமிழர் தங்கள் புதல்வர்களுக்கு இராவணன், கும்பகர்ணன் என்று பெயரிடக்கூடத் தலைப்பட்டார்கள்! அரக்கன், அசுரன், இராவணன், கும்பகர்ணன் என்ற பெயர்களெல்லாம் அதருமம், அசத்தியம், தீமை என்பதைச் சுட்டிநிற்கும் பெயர்கள்; பேராசை, மக்களை இம்சித்தல், சோம்பல் முதலிய துர்க்குணங்களை நன்மக்கள் வெறுத்து விலகவேண்டுமென்று கற்பித்த உருவங்களும், நாமங்களுமாகும். ரிஷிகளுடைய கற்பனாசக்தியும், கவித்திறமையும், வேதாந்த ஞானமும், அந்த உருவங்களுக்கு உயிர் தந்தன. உடனே நாம் அவர்கள் எங்கள் முப்பாட்டன்மார்கள் என்று உறவு கொண்டாடுகிறோம்! இதைவிட என்ன வேடிக்கை வேண்டும்!

இந்த ஆரியதிராவிட குலவேற்றுமையும் சண்டைகளும் உண்மை என்றே வைத்துக்கொள்வோம். பல்லாயிர வருஷங்களுக்கு முன் நடந்த சம்பவங்களை இப்போது கிளப்பி சமூக ஒற்றுமையையும் முன்னேற்

றத்தையும் தடைப்படச் செய்வானேன்? இவ்விதப் போட்டிக் கதைகளைச் சொல்வதும், துவேஷ மனப் பான்மைகளை உண்டாக்குவதும் சாதியொற்றுமைக் குப் பெருந்தடையாகும்.

நான் சீமைக்குப் போய், 'ஸெய்ண்ட் ஜார்ஜ் (*St. George*)க்கும் ட்ராகனு (*Dragon*)க்கும் நடந்த சண்டை கதையல்ல, ஸெய்ண்ட் ஜார்ஜ் ஸாக்ஸனிய சாதித் தலைவன்; ட்ராகன் கெல்ட் ஜாதித் தலைவன்; இந்த இரண்டு சாதியாருக்குள் நடந்த யுத்தத்தை ஒருவாறு குறிக்கும் இதிகாசம் இது' என்று பிரசாரம் செய்தேனுனல், ஆங்கிலேயர் என்னைப் பார்த்துச் சிரிப்பார்கள். ஆங்கிலேயர் ஸெய்ண்ட் ஜார்ஜ், ட்ராகன், ஆர்தர் முதலிய புராணக் கதைகளை நல்ல தற்குப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறுர்கள்; மக்க ளுடைய குணுபிவிருத்திக்கும், இலக்கியப்பெருக்கத்துக் கும் பயன்படுத்திக்கொண்டிருக்கிறுர்கள். நாமோ, சில நாளாக இராமாயண மகாபாரதங்களை முன்னிட்டு மக்களுக்குள் பகைமையும் வெறுப்பும் உண்டாக்கிக் கொண்டு வருகிறேம். கவித்திறமையால் தீய பாத் திரங்கள் கூட கம்பீரமும் விசித்திர அழகும் பெறக் கூடும். இராவணன், ஷைலாக் முதலிய கதாநாயகர் கள் கூட அழகும், கலைச் சித்திரமும் கொண்டு விளங்குவார்கள். ஆனல், இத்தகைய கற்பனை உருவங் களைக் காரணமாக வைத்து நாம் சாதிச் சண்டை செய்வதா?

இராமாயணத்தில் இராமனுடைய குணத்தைப் பற்றியும், செயல்களைப்பற்றியும், இராவணனைப்பற்றி

யும் ஜனங்களின் மனதைப் புண்படுத்தாத முறையில் புது விமரிசனங்கள் எழுதினால் அவைகளை மிகவும் ரஸமாகவே படித்து அனுபவிக்கலாம். 'இராவணன் சாஸ்திரங்கள் படித்த பண்டிதன்; சீதையைத் தூக்கிச் சென்றானாயினும் அவளை எவ்வளவு மரியாதையாக நடத்தினான்; கஷ்ட காலங்களிலும் தைரியமிழக்காமல் மிக்க கம்பீரமாக நடந்துகொண்டான்; இராமன் பல சந்தர்ப்பங்களில் திடமான மதி கொண்டவனாகத் தோற்றவில்லை' என்றெல்லாம் விமரிசனை செய்ய லாம். இராவணன் எவ்வளவு கம்பீரம், மேதை பொருந்தியவனானாலும் எவ்வளவு வேதம் ஓதியவனானாலும், நாம் மறவாமல் கவனிக்க வேண்டியது, பாவத் திற்கும் புண்ணியத்திற்கும் நடக்கும் போராட்டத்தில் இராவணன் என்ற கற்பனை, பாவத்தையும், இராமன் என்ற கற்பனை, புண்ணியத்தையும் குறிக்கின்றன என் பதே. துரியோதனனும் சகுனியும் இவ்வாறே பாவத் தைக் குறிக்கும் கற்பனைப் பாத்திரங்கள். சகுனி யும், காந்தாரியின் தகப்பனும், பஞ்சாபுக்கும் அதற்கு மேற்கே ஏதோ தேசத்திற்கும் அரசர்களா யிருந் தார்கள் என்று வைத்துக்கொள்ளலாம். அதனால் இத் தகைய மகாபாரதக் கற்பனையைக் காரணமாக வைத் துக்கொண்டு பஞ்சாபு தேசத்து ஜனங்கள் யாருடனா வது இப்போது சண்டையிடுவார்களா? இராமன் வாலியின்பால் நடந்தது சரியல்லவென்று ஆதி முதற் கொண்டு ஆட்சேபணை உண்டு. வால்மீகியே இந்த விஷயத்தை எடுத்துச் சமாதானம் சொல்லப் பார்க் கிறார். அது முற்றிலும் ஒப்புக்கொள்ள முடியா

தென்று அதிலேயே விளங்குகிறது. ஷைலாக் என்னும் கொலைபாதக வட்டி வசூல்காரனை ஷேக்ஸ்பியர் எழுதிய ஒரு நாடகத்தில் பார்க்கிறோம். அவன் தன் மகள்பால் வைத்திருந்த அன்பை, ஆசிரியர், மனதைக் கவரும்படி சித்திரித்திருக்கிறார். தற்கால மனோபாவங்களின்படி பஸ்ஸானியோ முதலியவர்கள் அந்த நாடகத்தில் ஷைலாக்கை நடத்தியது மிகவும் இழிவான முறை யென்றே சொல்லலாம். தெய்விகப் புலவர் எதைத் தொட்டாலும் அது பொன் மயமாகும். அதனாலேதான் இராவணன்கூட கம்பீரமும் அழகும் பொருந்தி விளங்குகிறான். ஆனால் அதனாலேயே அவன் திராவிட குலத்தின் தலைவனாகிவிடமாட்டான். அவன் வால்மீகி முனியின் கற்பனை உருவமே.

இராமன் சீதையைத் தேடித் தெற்குமுகமாய்ச் சென்றதாக வால்மீகி பாடிவிட்டார். இராவணன் வடக்கேயோ, மேற்கேயோ போய் அங்கே சீதையைச் சிறை வைத்ததாகக் கவிஞர் பாடியிருந்தால், இந்த ஆரிய திராவிடக் கலவரம் உண்டாயிருக்காது. பண்டிதர்கள் இவ்விஷயமாகச் சண்டை போட்டாலும் தேசபக்தர்கள் இச்சண்டையில் தலையிடாதிருக்கவேண்டும். ஸாக்ஸனியரும், டேனியரும், ஸ்காட் சாதியரும், 'நான், நீ' என்று இப்போது ஆங்கிலேயர்களுக்குள் சண்டை கிளப்புகிறார்களா? இல்லை. ஒரே பெருமையும் மகிழ்ச்சியுங் கொண்டு குலபேதஉணர்ச்சியின்றிச் சரித்திரம் படிக்கிறார்கள். சரித்திரத்தைத் தமக்குள் குலபேதமும் சாதி வெறுப்பும் உண்டாக்கப் பயன்படுத்துவதில்லை. ஒற்றுமை ஏற்

படுத்திக்கொள்ள இன்னும் எவ்வளவோ முயற்சிகள் செய்யவேண்டியிருக்க, பழைய கதைகளையும் உண்மையான பழைய சரித்திரத்தையுங்கூடத் தோண்டி எடுத்து நம்க்குள் பேதங்களை உண்டாக்கிக் கொள்ளக் கூடாது.

திராவிடர்கள் தென்னிந்தியாவில்தான் இருக்கிறார்கள் என்று எண்ணுவது தவறு. வங்காளம், நேபாளத்திலுங்கூட, திராவிட குலமென்று சொல்லக் கூடியவர்களைப் பார்க்கலாம். எங்கும் கலப்பு ஏற்பட்டு எங்கும் எல்லா இனத்தாரும் இருக்கிறார்கள். நான் ஆரியன் என்று தென்னாட்டுப் பிராமணரல்லாதார் எண்ணலாம். வடக்கே போனால் அங்குள்ளவர்கள் என்னைப் பார்த்து 'நீ திராவிடன்' என்கிறார்கள். என் பாஷை சுத்த திராவிட மொழி. ஆரிய பாஷையே எனக்குப் பேசமுடியாது. இவ்வளவு கலப்புகள் உண்டாயிருக்க, கலப்புகளும் நாம் கோருவதாயிருக்க, மறுபடி பிரிக்கப் பார்ப்பது மடமையன்றோ? இராமன், இலக்குமணன், கிருஷ்ணன் என்ற பெயர்களை விடுத்து இராவணன், கும்பகர்ணன் என்று பெயரிடுவது என்ன பேதைமை! அப்படித் திராவிடப் பெயர்கள் வேண்டுமாயின் நல்ல பெயர்களில்லையா? இம்சை, பாவம், தூக்கம், கோரம் இவைகளைக் குறிப்பதற்கே பல்லாண்டுகளாய் நின்ற இந்தப் பெயர்களைத் தவிர்த்து நல்ல அழகிய திராவிடப் பெயர்கள் உண்டு. அவைகளைக் குழந்தைகளுக்கு வைக்கலாம். சண்டை இடவேண்டுமாயின் இடுவோம். ஆரியன் திராவிடன் என்று வேண்டாம். தற்காலத்தில் நாம் கொண்டிருக்கும் குணதிசயங்களைப்பற்றிச் சண்டையிடலாம். அதற்கு விமோசனமுண்டு.

6

## ‘முத்து மாலை’ ஆசிரியரின் கஷ்டங்கள்

“பரமபதத்திற்குச் செல்லும் பாதை மிக்க கஷ்டமான பாதை. தீட்டிய கத்திமுனைமேல் செல்வது போல் அதைக் கொள்க” என்றான் யமன் கடோபநிஷத்தில். அவ்வாறே பத்திரிகை ஆசிரியர்கள் தொழிலும், கத்திமுனைப் பாதையாகவே இருக்கிறது.

சர்க்கார் சமாசாரம் வேண்டாம், அரசியல் விஷயம் வேண்டாம், ஹரிஜனங்களைக் கிறிஸ்தவர்களாக்குவதுங்கூட எக்கேடாக ஆவது போகட்டும், குட்டிக் கதைகள் பிரசுரித்துப் பத்திரிகையை நடத்தலாம் என்று முத்துமாலையை ஆரம்பித்தேன்.

* * * *

ஒருநாள் எங்கள் ஆபீசுக்குப் பெரிய தலைப்பாகையும் நரைத்த தொங்கு மீசையுங்கொண்ட ஆஜானுபாகு ஒருவர் வந்தார். இவ்வளவு பெரிய மனிதர் எங்கள் ஆபீசுக்கு வந்தாரே என்று மகிழ்ச்சி கலந்த

வியப்புடன் எழுந்து நமஸ்காரம் செய்து ஆசனத்தில் அமரச்செய்தேன்.

"ஏன், ஐயா, கதை எழுதினால் இம்மாதிரியா எழுதுவது? நாயுடு ஜனங்களை அவமதிக்கவா உங்கள் பத்திரிகை நடத்துவது?" என்று ஆரம்பித்தார்.

மகிழ்ச்சி தீர்ந்து விசாரங்கொண்டு விஷயம் விசாரித்தேன்.

"சென்ற மாதத்திய இதழில் பங்காரு நாயுடுவின் ஆங்காரம் என்று 'தும்பி' எழுதிய சிறுகதையை எல்லாரும் போற்றினார்கள். எங்கள் பத்திரிகைக்கு நல்ல காலம் வந்தது என்றிருந்தேன். அதில், குஜிலிக் கடையில் பங்காரு நாயுடுவை ஒரு பெண் ஏமாற்றிய ஹாஸ்ய விஷயத்தைக் குறித்துத்தான் மீசைக்காரருடைய ஆட்சேபம். "நாயுடுகள் எல்லாம் இப்படி மூடர்கள் என்று எழுதி விடலாமா?" என்றார் பெரியவர்.

"ஒரு நாளும் கிடையாது. யாரோ ஒருவர் ஏமாற்றப்பட்டதாகக் கதை. அது ஒரு சாதியைக் குறிக்காது. அகஸ்மாத்தாக நாயுடுவாக அமைந்தது அவ்வளவுதான்" என்றேன்.

"அதெல்லாம் பொய்ப் பேச்சு. ஏன் நாயுடு என்று பேர் வைத்தீர்கள்? செட்டி, ஐயர், ஐயங்கார் யாராவது ஒருவரை வைத்துக் கதை ஏன் எழுதவில்லை? வேணுமென்று நாயுடு குலத்துக்கு முட்டாள் பட்டம் கட்டவே இது எழுதியது" என்றார். நான்

எவ்வளவு சொல்லியும் அவருக்குச் சமாதானம் உண்டாகவில்லை.

"இனி இவ்வாறு செய்யக்கூடாது. இதற்கும் ஏதாவது மன்னிப்பு எழுதுவது நலம்" என்று கடைசி வார்த்தையாகச் சொல்லிவிட்டுப் போனார்.

அடுத்த நாள் ஒரு தினசரியில் 'அபாண்டமான அவதூறு', 'அக்கிரமத் திமிர்' என்றெல்லாம் சொற்றொடர்கள் அமைத்துத் தலையங்கம் வந்தது. நாயுடு ஜனங்களெல்லாம் எங்கள் பத்திரிகையைப் பகிஷ்காரம் செய்ய வேண்டும் என்று யோசனை நடப்பதாகவும் எழுதியிருந்தது. ஒரு மாதம் சென்றது. புதுச் சந்தாதாரர்கள் வரவில்லை. பழையவர்களும் பணம் அனுப்பவில்லை. ஆனால் யாரும் பகிஷ்காரம் செய்ததாகத் தெரியவில்லை.

*　　　*　　　*　　　*

அடுத்த இதழில் ஒரு கதை. மதுவிலக்கு விஷயம். 'குடியால் கெட்ட குப்பாசாரி' என்பது கதையின் பெயர்.

'அகில இந்திய விசுவகர்ம குல சங்க'த்தின் காரியதரிசி என்று 'விஸிடிங் கார்டு' ஒன்று பையன் கொண்டு வந்தான். வரலாம் என்று நாற்காலியைக் காலி செய்து எதிர்கொண்டழைத்து மரியாதை செய்தேன்.

"எங்கள் சமூகத்திற்குப் பெருந்தீங்கு இழைத்து விட்டது, உங்கள் பத்திரிகை" என்றார்.

என்ன சமாதானம் சொல்லியும் பயனில்லை.

"குடித்துக் கெட்டுப்போன விஷயத்தைப்பற்றி எழுதவேண்டுமானால் ஒரு பறையனையோ, பள்ளனையோ, வேண்டுமானால் ஒரு பிராமணனையோ, யாரையாவது வைத்துக் கதை எழுதக்கூடாதா? இம் மாதிரி எங்களை அவமானப்படுத்தலாமா? இதற்குத் தாவா போட உத்தேசம்" என்றார்.

"ஏதோ தவறு நேர்ந்துவிட்டது. அடுத்த கதை பிராமணனை வைத்து எழுதிவிடுகிறோம்" என்றேன்.

*　　*　　*　　*

இந்த மாதத்தில் எங்கள் பத்திரிகை ஜாதகமே நன்றாயில்லை போலும்! அடுத்த நாள் என் நண்பர் (பெயர் சொல்லக் கூடாது) ஒரு முஸ்லிம் சகோதரர் வந்தார்.

வேஷம் எப்போதும் போல்தான். ஆனால் கண்கள் சிவந்து முகம் கோணி, பெருங் கோபக் குறிகள் காணப்பட்டன.

"இவ்வளவு நாள் சிநேகிதமும் வீணாய் முடிந்தது" என்றார்.

"ஏன்?" என்றேன் மிகக் கவலையுடன்.

"முஸ்லிம்கள் வியாபாரத்தில் மோசம் செய்வார்கள் என்று பொருள்பட அந்தக் கதை பிரசுரித்தது தருமமா?" என்றார்.

எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. "இந்த மாதத்திய முத்துமாலையை எடும்" என்றார்.

எடுத்தேன்.

## ‘முத்து மாலை’ ஆசிரியரின் கஷ்டங்கள்

“முத்துசாமியின் மோசம்” என்று ஒரு கதை. அது ஒரு பழைய ருஷ்யக் கதை. பெயர்கள் எல்லாம் மாற்றி ஏதோ ஒரு மாதிரியாகத் ‘துமுதும்’ எழுதி முடித்துத் தந்தது.

முதனூலில் ஒரு யூத வர்த்தகன். அவன் பெயர் ஸாகேரியன். இதை எங்கள் ‘துமுதும்’ பகீருத்தீன் என்ற ஒரு முகம்மதிய நகை வியாபாரியாக வைத்துக் கதையையும் கொஞ்சம் மாற்றி எழுதி யிருந்தார்.

“கொஞ்சம் நியாயமாகப் பாருங்கள். பகீருத்தீன் என்பதற்குப் பதில் கிருஷ்ணமாச்சாரி என்று எழுதி யிருந்தால் பிராமண சமூகத்திற்கு எவ்வளவு கோபம் வந்திருக்கும்?” என்றார்.

“ஒன்றும் வந்திருக்காது. யாரும் ஆட்சேபித் திருக்க மாட்டார்கள்” என்றேன்.

“சும்மா இப்போது சொல்லலாம். இது ரொம்ப அக்கிரமம். இதைப்பற்றி நேற்று மசூதியில் பெரிய கலவரம். பின்னால் உங்களுக்குத் தெரியவரும்” என்று சொல்லிவிட்டுக் கோபமாகவே போய்விட்டார்.

* * *

மற்றொரு கதையில் எங்கேயோ ‘வேங்கடசாமிப் பிள்ளை இடறி விழுந்தார்’ என்றிருந்தது.

“யாதவ குலத்தார்கள் எல்லாம் நொண்டிகளா? இது பெரிய அபவாதம்” என்று என் நண்பர் பொன்னுகிருஷ்ணப் பிள்ளை பலமாக ஆட்சேபணை செய்தார்.

* * * *

"இடைச்சி மார்க்குப் பாலே குழந்தைகளுக்கு ஊட்டுங்கள்." என்ற ஒரு விளம்பரத்தை மிகவும் கஷ்டப்பட்டு எங்கள் பத்திரிகைக்குச் சம்பாதித்துச் சில மாதங்களாக அதன் மூலம் எங்கள் பொருளாதார நிலை கொஞ்சம் சீரடைந்தது. சென்ற வாரம் ஒரு யாதவர் வந்து, "இடைச்சியாவது, அவதூருவது! இதெல்லாம் போக்கிரித்தனம்! 'யாதவ கன்னி' என்று உடனே மாற்றுங்கள். இல்லாவிட்டால், உங்கள் பத்திரிகை நிறுத்த வேண்டியதுதான்" என்றார். சரி, விளம்பரங்களுக்குங்கூட வந்தது கேடு!

* * * *

நம்மவர்களுடைய சாதிப் பிரிவினைகள் அரசியல் சுதந்திரத்திற்கு மட்டும் தடையல்ல; கதை, கட்டுரைகளில் தாராளமாகக் கற்பனை செய்து எழுதவுங்கூடத் தடைகளாய் நிற்கின்றன.

சிரித்து வாழ நாம் எங்கே போய்க் கற்றுக்கொள்ளுகிறது?

# 7

## தேனீ

1934-ஆம் வருஷ மத்தியில் சட்டசபைத் தேர்தல்களில் காங்கிரஸ் புகுந்ததும், அதன் பயனுக ஏற்பட்ட பொறுப்புக்களிலும் கவலைகளிலும் நான் முழுகியிருந்த காலத்தில், புதுப்பாளையம் ஆசிரமவாசிகள் முற்றிலும் வேருன ஒரு துறையில் புதிதாகப் புகுந்தனர் : ஸ்ரீ விசுவநாதன் தேனீப் பள்ளிக்கூடத்தில் ஒருமாதம் இருந்து 1934-ஆு ஜூன்மீ 2வ புதுப்பாளையம் திரும்பி வந்ததும், எல்லோரும் தேனீ சாஸ்திரத்தைப் படிக்க ஆரம்பித்தனர். தேனீக்கள் எங்கே கூண்டு கட்டியிருக்கின்றனவென்று சுற்றிச் சுற்றிப் பார்த்தார்கள். ஓட்டு தேடியலைவதைக் காட்டிலும் தேனீக்களைத் தேடுவது மேன்மையான வேலையென்பதை எல்லா சாதுக்களும் ஒப்புக்கொள்ளுவார்கள். 1934ஆு ஜூன்மீ 26வ முதல் கூண்டு பிடித்து வைத்தார்கள். இப்போது ஆசிரமத்தில் இருபத்தேழு கூண்டுகளிருக்கின்றன. ஆசிரமத்திற்கு வெளியே நண்பர்களிடத்தில் இருபத்தைந்து கூண்டுகளிருக்கின்றன. ஒவ்வொரு கூண்டிலும் ஒரு முனிஸி

பாலிடியிலுள்ள ஜனத்தொகையளவு தேனீக்கள் வசித்து வருகின்றன. ஒரு கூண்டைச் சேர்ந்த ஈ மற்றொரு கூண்டிற்குள் போகாது. வெளியே எங்கே எவ்வளவு தூரம் சென்றாலும் மறுபடி தன் கூண்டிற்கே திரும்பும்.

தேனீ வளர்ப்பது என்றாலென்ன? பசுமாடு விலைக்கு வாங்குவதுபோல், நல்ல சாதுவான பூச்சிகள் எங்கேயாவது விற்பார்கள் என்று எண்ணுகிறீர்கள். தேனீ பொல்லாத பூச்சியாயிற்றே; கொட்டினால் உடம்பெல்லாம் ஊதி உபத்திரவம் உண்டாகுமே; சிலசமயம் உயிருக்கும் ஆபத்துண்டாகுமாமே? அதை எப்படிப் பிடிப்பது? அதன் கொடுக்குகளை எவ்வாறு எடுப்பது? அது ஓடிப்போகாமல் எப்படிப் பார்த்துக் கொள்வது? அப்படி வீட்டில் நின்றாலும், கூண்டிலிருந்து தேன் எப்படி எடுப்பது? இவ்வாறெல்லாம் கேட்பீர்கள்.

பசுமாடு, குதிரை, நாய் போன்றன வைப்பது வேறு, தேனீ வைப்பது வேறு. தீனி போட்டு அவைகளிடம் அன்பாக நடந்து கொண்டோமானால், இம்மிருகங்கள் வரவர மனிதர்களின் எண்ணத்தை அறிந்து நாகரிகமடைந்துவிடும். எஜமானனிடம் மிகவும் நட்புக் காட்டி அவன் சொல்லுகிறபடி நடக்கும். தேனீ அவ்வாறல்ல; அதன் எண்ணத்தின்படி நாம் நடந்து கொள்ள வேண்டுமேயொழிய, நம் இஷ்டத்தை அது கொஞ்சமும் கவனியாது. முதலிலிருந்து கடைசிவரையில் அது காட்டுப் பூச்சியாகவேதானிருக்கும். சுதந்

திர உணர்ச்சியை இழக்காது. நாய், பசு, குதிரை முதலிய ஜந்துக்களைப்போல் தேனீ எஜமானனை அறிய மாட்டாது. நம்முடைய அறிவையும் யுக்தியையும் உபயோகித்து, அதன் சுதந்திரத்தை இழந்ததாக அதற்குத் தெரியப்படுத்தாமல் ஏமாற்றியே அதனிடம் வேலை வாங்கித் தேன் திருடவேண்டும். ஓகோ! இது என்ன, மெள்ள சுயராஜ்யப் பிரசங்கம் ஆரம்பித்து விட்டதே என்று நினைக்கவேண்டாம். இப்பொழுது தேனீக் கதையை மட்டுந்தான் சொல்லப்போகிறேன்.

எங்களுடைய கூண்டுகளின் பெயர்கள் : லக்ஷ்மி, கங்கா, கௌரி, ராதா, மாக்டலீன், காவேரி, சகி, உமா, ஈசுவரி, இந்திராணி, பத்மா, சீதா, மீரா, யமுனா, சம்பகா, மாதவி, பார்வதி, நாராயணி, கமலா, சுபத்ரா, காத்யாயனி, அல்லி, மேரி, மேனகா, ஸரஸ்வதி, துர்க்கா, காளி, பவானி, சகுந்தலா.

இதென்ன எல்லாம் பெண்பால்? கௌரவமாக ஆண்பாலாக வைக்காமல் ஏன் இவ்வாறு பெண் பால்? காரணமுண்டு. ஒவ்வொரு கூண்டும் எல்லா அங்கங்களும் படைத்த ஒரு ராஜ்யம். அதில் அரசு புரிவது ஆண் அல்ல ; தாய்த் தேனீ : குலபதியாக வீற்றிருப்பது பெண் ஈ. இராணியின் தலைமையின்கீழ் வேலை செய்யும் பல்லாயிரத் தேனீக்களும் கன்னிகள். இராணுவப்படையும் கன்னிகள்தான். வாயிற்காவலாட்களும் கன்னிகளே. இடம் தேடும் 'ஸ்கவுட்'டுகளும் கன்னிகளே. இவ்வாறு பல்லாயிரக்கணக்கான பெண்களிடையில் சில ஆண் தேனீக்களும் சாதுக்

களாகக் குடியிருக்கின்றன. அவைகளுக்குக் கொடுக்கு இல்லை; விஷமில்லை; சண்டையிடமுடியாது; வேலை செய்யத் தெரியாது. சும்மா தேன் குடித்துக்கொண்டு மாலைவேளையில் கொஞ்சம் வெளியே உலாத்தி வந்து, யாதொரு பொறுப்பும் அதிகாரமுமில்லாமல் காலங் கழித்துவரும்.

ஒரு கூண்டில் முதிர்ந்து வெளியேறிய பெண் ஈ ஒன்றேதானிருக்கும். பிரஜா உற்பத்தியும், பிரஜா பாலனமுங் அது செய்துவரும். இராணிக்கன்னிகள் முதிரும் பருவம் வரையில் கூண்டில் அடைபட்டிருக்கும். இராஜகுமாரிகள் முதிர்ந்து வெளி வந்ததும், அவைகளில் ஒன்றுக்குக் குலத்தின் பொறுப்பைத் தந்துவிட்டு, பழைய இராணி சில தேனீக்களைக் கூட்டிக்கொண்டு கூண்டைவிட்டு வெளியேகிவிடும். வேறு இடம் தேடிப் புதுக்கூண்டு கட்டிக்கொள்ளும். ஒரு கூண்டில் ஓர் இராணியும் பல்லாயிரக் கன்னிகளும் இருக்கும் என்று சொன்னேன். ஆனால், இராணித் தேனீதான் முட்டையிடுவது. மற்றவை ஆயுள் முழுவதும் பிரம்மசரியாசிரமம். தொழில் செய்வதே அவைகளின் ஜீவார்த்தம். இராணி ஈகூடத் தன் ஆயுளில் ஒரே ஒரு தடவைதான் ஆணுடன் சேரும். அது, கூண்டிற்கு வெளியே. அதன் பயனாக ஆண் ஈ தன் உயிரை அர்ப்பணம் செய்துவிடுகிறது. வேதத்தில் பிரஜோத்பத்தியை ஒரு யாகமாக ரிஷிகள் பாடுவது இதற்கல்லவோ பொருந்தும்! இராணி ஈ கர்ப்பம் தரித்துக் கூண்டிற்குத் திரும்பும். அதன் பிறகு ஆயுள் முழுதும் மறுபடி ஆண் ஈயைத் தீண்டாமல் பல்லாயிர

முட்டைகள் இட்டுக்கொண்டு வரும். அதிலும், குலத்தின் அவசியத்தின்படி இராஜகுமாரிகள், தொழிலாளிக் கன்னிகள், ஆண் ஈக்கள் எவை வேண்டுமோ அவைகள் உண்டாகுமாறு இஷ்டப்படி முட்டை போடும். இதுவும், புராணங்களில், தவஞ்செய்து சிலர் பெறும் சித்தியைப்போலல்லவா இருக்கிறது! தேனீயின் தவமும் நோன்பும் இந்தச் சக்தியைத் தருவதாயிருக்கலாம்!

முட்டை பொரிந்து முதலில் புழுவுண்டாகும். ஆண், பெண், இராணி, தொழிலாளி, இவ்வாறு வெவ்வேறு இனத்திற்கு வெவ்வேறு விதமான உணவை மற்ற ஈக்கள் செய்து தரும். இராணி தன் உணவிற்காகக் கூண்டைவிட்டு வெளியே போகாது. அதற்கென்று சில ஈக்கள் ஒரு தனித்தினுசு உணவு செய்து வாயிலூட்டும். முட்டை பொரித்து வெளி வந்த ஈக்கு, சில நாளில் சிறகு முளைக்கும். அது அறைக்குள்ளேயே மூடப்பட்டு வளரும். முதிர்ந்த பிறகு தன் அறையைக் கீறிக்கொண்டு வெளியே வரும். தொழில் செய்யும் ஈக்கள் வெளியே வேண்டிய தூரம் சென்று, பூக்களிலிருந்து மகரந்தப்பொடி திரட்டிக்கொண்டும், தேன் உண்டாக்க மது குடித்துவிட்டும், தத்தம் கூண்டிற்கு நேராகத் திரும்பிவிடும். பல மூலை முடுக்குகள் திரும்பிச் சென்றாலும், திரும்பும்போது ஒரே நேர் கோடாகத் தன் கூண்டுக்கு அம்புபோல் வந்து சேரும். மகரந்தப் பொடியைத் திரட்டி இரண்டு மூட்டைகளாகப் பின்கால்களில் தூக்கிக்கொண்டு வரும். மதுவைக் குடித்து, அதற்கென்று வயிற்றில் இருக்கும் ஒரு

டையில் கொண்டுவந்து பக்குவமாய்த் தேனாகக் கூண்டில் சிற்றறைகளில் உமிழ்ந்து நிரப்பி, மெழுகு வைத்துப் பத்திரமாக மூடும். பிறகு தேன் முதிர்ந்து பல காலம் கெடாமலிருக்கும்.

ஒரு தாய்த்தேனீயைச் சேர்ந்த தேனீக்கள் மற்றொரு கூண்டிற்குப் போகமாட்டா. போனால், அக் கூண்டின் காவற்படை ஈக்கள் தடுக்கும்; யுத்தம் நடக்கும். இதெல்லாம் படிக்க வியப்பாகத்தானிருக்கும். ஆனால் முற்றிலும் உண்மை. இன்னும் கேளுங்கள். வெயில் அதிகமாய்விட்டால், தேனுக்கும் குஞ்சுகளுக்கும் சீதோஷ்ண நிலையைச் சமப்படுத்திக் கொள்ளுவதற்காக, ஈக்களெல்லாம்கூடி, சிறகுகளை, எலக்ட்ரிக் விசிறிகள், போல் ஆட்டிக் குளிர்ச்சியுண்டாக்கிக் கொள்ளும். குளிர் அதிகமானல், ஈக்கள் ஒன்றுகூடி மொய்த்து உஷ்ணமுண்டாக்கிக் கொள்ளும்.

தேனீக்களில் பல வகைகளுண்டு. நான் பேசிவரும் தேனீ, அடை அடையாகக் கூண்டு கட்டும். அடைகள் மத்தியில் சிறிது இடத்தோடு மேலே ஒட்ட வைக்கப்பட்டு, கீழே விசாலமாகத் தொங்கும். தேனீக்கள் கீழிருந்து மேலே சென்று அடைகளிடையில் தங்கும். அடைகளிலுள்ள சிறு துவாரங்களில் முட்டைகள், பொரித்த குஞ்சுகள், சிறகு கொண்ட இளம் ஈக்கள், தேன், மகரந்தப்பொடியாகாரம் இவைகளிருக்கும். அடைகளின் அடிப்பாகத்தில் முட்டைகளும் இளம் பூச்சிகளுமிருக்கும்; அவைகட்கு

வேண்டிய ஆகாரமும் இருக்கும். மேல் பாகத்தில் மிகு தித் தேன்மட்டும் சேகரித்து வைக்கும். பொந்துகளைத் தேடி விரோதிப் பூச்சிகளும் ஜந்துக்களும் புகுவதற் குச் சவுகரியமில்லாத இடமாகப் பார்த்துக் கூண்டு கட்டும். நாம் இந்தச் சவுகரியங்களை யமைத்து மரப் பெட்டி செய்து, தாமாகக்கட்டிய மெழுகு அடைகளைச் சேதம் செய்யாமல் இப்பெட்டிகளில் வைத்தோ மானால், அவ்வாசனையினால் தூண்டப்பட்டு உள்ளே புகுந்து, நம்முடைய பெட்டியிலேயே குடிகொள்ளும். பயத்துக்குக் காரணமில்லாமல் சவுகரியமாக இடம் அமைத்துக் கொடுப்பதே ரகசியம். மேல்பாகத்தில் மிச் சத் தேனைச் சேகரிக்கும், கீழ்ப்பாகத்தில் குஞ்சுகளை வைக்குமாதலால், நாம் செய்யும் கூண்டுகளை இரண்டு அடுக்காக வைப்பது அவசியம். அப்படிச் செய்து வைத்தால் மேல் அடுக்கிலுள்ள அடைகளில் தேன் மட்டுமிருக்கும் ; குஞ்சுகள் முட்டைகள் எல்லாம் கீழ் அடுக்கிலிருக்கும். சுலபமாக மேல் அடுக்கைத் தனி யாகப் பிரித்து அதிலுள்ள தேனை மட்டும் எடுத்துக் கொள்ளலாம். ஈக்களாவது, முட்டைகளாவது சேத மாகாமல், தேன் அடைகளை ஒரு சுழற்று யந்திரத்தில் வைத்துச் சுழற்றினால் தேன் வெளிவரும். சாதாரண மாகத் தேன் எடுப்பவர்கள் தேனீக்களைப் புகை போட்டு ஹிம்சைசெய்து துரத்தி அடைகளைப் பிய்த்து எடுத்து முட்டை, குஞ்சு, ஈ என்று பாராமல் தேனைப் பிழிந்து எடுத்துக்கொண்டு, மெழுகையும் எடுத்து உப யோகித்து விடுவார்கள். ஈக்கள் நாசமாகும். தப் பினவை வேறு எங்கேயாவது, தெய்வமே என்று

போய், இடம் தேடித் தம் இயற்கைத் தருமத்தின்படி கூண்டு கட்டப் பார்க்கும். தாய்த் தேனீ இல்லாவிடில், மாண்டுபோகும். அஹிம்ஸா முறையில், தேனீக்களை மெதுவாக விலக்கி, முட்டை, குஞ்சு இல்லாத மேலடைகளை மட்டும் எடுத்துத் தேன் கொள்ளப்படும். தேன் எடுத்துக்கொண்டு அடைகளை மறுபடி அப்படியே தேன் கூண்டில் வைத்துவிடலாம். அடை சேதமாகாது. ஈக்கள் அடைகளை மறுபடி ஒப்புக்கொண்டு அதில் தேன் வைக்கும். ஈக்கள் கூண்டை விட்டு வெளியேற வேண்டியதில்லை. மறுபடி அடைகள் கட்டவேண்டியதில்லை. மெழுகு உண்டாக்கும் வேலை அதிகமாக இல்லாமற் செய்துவிடுவதால் தேனீக்களுக்குப் பாதி வேலை மிகுதியாகிவிடுகிறது. தங்கள் குலத்தைப் பாதுகாத்து விருத்தி செய்யும். விரோதிப் பூச்சிகள், எறும்பு, பல்லி முதலியவை புகுந்து சேதம் செய்யாமல் நாம் காப்பதும், தேனீச் சமூகத்திற்குப் பெரிய உதவியாகும். இதனால் தேனீக்கள் சீக்கிரம் விருத்தியாகித் தாராளமாய்த் தேன் செய்து தரும். தேனும் சுத்தமாக இருக்கும்.

*எங்களுடைய முதல் கூண்டின் கதை*

*1934-ஆம் ஹு, ஜூன்மீ, 26வ, மாலை 5 மணி;* தேன் எடுப்பவன் ஒருவன், ஆசிரமத்தின் அருகில் கற்சுவர் ஒன்றின் பொந்திலிருந்த தேனீக்களை ஓட்டி அடைகளைப் பிய்த்துக் கொண்டிருந்தான். சங்கதி அறிந்ததும் விசுவநாதனும் சில தோழர்களும் சாமான்கள் எடுத்துக்கொண்டு அங்கே போனார்கள். மெது

வாக இரண்டு கற்களை எடுக்கவே, ஒன்பது அழகிய அடைகள் வெளிப்பட்டன. அடைகளை மெள்ளச் சேதமில்லாமல், கல்லிலிருந்து கத்தியால் அறுத்தெடுத்து, ஒன்றன்பின் ஒன்ருக வாழை நாரால் மரச் சட்டங்களில் கட்டித் தொங்கவிட்டுக் கூண்டில் வைத்தார்கள். ஈக்களைச் சிதறவிடாமல், அதாவது அவைகளுக்குப் பயமுண்டாக்காமல், இவ்வேலை நடந்தது. கீழ்ப்பலகை யில்லாமல், மரக்கூண்டைப் பொந்திற்குப் பக்கத்தில் வைத்தார்கள். கீழே புகுந்து கூண்டுக்குள் ஈக்கள் மேலே அடைகளுக்கு ஏற சவுகரியமாய் வைத்துவிட்டு, பொந்திலுள்ள தேனீக் கூட்டத்தில் விசுவநாதன் கையிட்டு, பூக்கூடையிலிருந்து புஷ்பம் எடுப்பதுபோல், ஈக்களை மெதுவாக வாரி எடுத்து மரக் கூண்டின் கீழே கொண்டுபோய்க் கூண்டுக்குள் ஏற விட்டார். தம் குஞ்சுகளின் வாசனை கூண்டிற்குள் அடைகளிலிருந்து வருவதைக் கண்டதும் அவை ஆவலாக உள்ளே புகுந்தன. ஆனல், மறுபடி பழைய பொந்துக்குத் திரும்பி வந்துவிட்டன. பிறகு விசுவநாதன் பொந்திலுள்ள ஈக்கூட்டத்தை நன்ருகப் பரிசோதித்து, தாய்த் தேனீயைக் கண்டு பிடித்தார். தாய்த் தேனீ மற்றத் தேனீக்களைவிட நீண்ட தேகமும், நிறமும் பெற்று, அதிக அழகாக இருக்கும். அதனுடன் எப்போதும் சில ஈக்கள் தேகக் காப்புக்கும், சேவைக்கும் கூடவே சுற்றிக்கொண்டிருக்கும். மெதுவாகத் தாய்த் தேனீயையும் அதனுடன் ஒரு கைநிறைய மற்ற ஈக்களையும் எடுத்து மரக்கூண்டில் விட்டார். இவ்வாறு விட்ட கொஞ்ச

நேரத்தில் பொந்திலுள்ள எல்லா ஈக்களும் ஒரே படைவரிசையாக 'விர்' என்று சப்தம் கிளப்பிக் கொண்டு உடலைத் தூக்கியாட்டிக்கொண்டு புதுக் கூண்டுக்குச் சென்றுவிட்டன! தாய்த்தேனீயைவிட்டு மற்ற ஈக்கள் தனியாக நிற்கமாட்டா. தேனீ பிடிப்ப தில் இதுவே ரகசியம். கற்பொந்து காலியாய் விட் டது. வேலைக்கு வெளியே போயிருந்து நேரம் கழித் துத் திரும்பிய சில தேனீக்கள் மட்டும் பழைய பொந் தண்டை வந்து வீட்டின் நிலைமையைக் கண்டு ஏக்கத் துடன் இங்குமங்கும் பறந்துகொண்டிருந்தன. அவை களையும் மெதுவாக ஒருவலைத் துணியில் பிடித்து மரக் கூண்டில் சேர்த்து விட்டார்கள். கூண்டுக்குள் மூன்று நாள் உணவுக்காகச் சர்க்கரைப் பானகம் வைத்து ஆசிரமத்தில் ஒரு தகுந்த இடத்தில் கிழக்கு நோக்கி அமைத்தார்கள். மறுநாளே புது இடத்தை ஒப்புக்கொண்டு ஈக்கள் வெளியேறிப் பூந்தாதுச் சுமையுடன் கூண்டுக்குத் திரும்பி வர ஆரம் பித்தன. நாலு நாள் கழித்துத் திறந்து பார்த்த தில், அடைகள் எல்லாம் கூண்டுக்குள் மரச் சட்டங் களோடு நன்றாகப் பதிந்து ஒட்டப்பட்டு, கயிறுகள் அறுபட்டுக் கிடந்தன. ஈக்கள் தாமாகவே இவைகளைத் தூக்கி வெளியேபோடும். நாம் பார்த்து எடுத்துப் போட்டால் அவற்றின் வேலை குறையும். தோட்டி ஈக்கள் உண்டு. பிணம்தூக்கி ஈக்கள் உண்டு. கூண் டிற்குள் எவ்வித அசுத்தமுமிருக்கவிடா; அவ்வப் போது சுத்தப்படுத்தி அழுக்கெல்லாம் வெளியே கொண்டுபோய்ப் போட்டுவரும். காயம் பட்ட ஈக்க

ளுக்குச் சில ஈக்கள் சிகிச்சை செய்யும். இடம் தேடி வழிகாட்டுகிற 'ஸ்கவுட்' ஈக்களும் உண்டு. தேனீச் சமூகம் எல்லா வேலைகளையும் மனுதர்ம சாஸ்திரம் படித்தாற்போல் நடத்தும்.

இந்த முதல் கூண்டுக்கு 'லக்ஷ்மி' என்று ஆசிரம வாசிகள் பெயரிட்டார்கள். ஆறுமாதமானதும் லக்ஷ்மி ஒரு சீசா தேன் கொடுத்தது. மறுபடி பதினைந்து நாட்களுள் இன்னொரு சீசா நிறையத் தேன் எடுக்கப்பட்டது. 1935ஞ் ஜனவரிமீ, 16உ லக்ஷ்மியிலிருந்து ஒரு கூட்டத்தைக் கூட்டிக்கொண்டு தாய்த்தேனீ வெளியே போயிற்று. கூண்டில் வேறொரு இராணியைத் தனக்குப் பதில் அமைத்துவிட்டு, நிறையத் தேனும் சேகரித்து வைத்து, எல்லா வசதிகளும் சரியாய்ச் செய்துவிட்டுத்தான் இம்மாதிரி தாய்த் தேனீ வெளியே போகும். குடியேறும் ஈக்களும், புது இடம் தேடும் வரையில் பசிதாங்கத் தேன் குடித்துவிட்டு, ஓர் இடத்தில் எல்லாம் மொய்த்துக் கொள்ளும். சில ஸ்கவுட் ஈக்கள் நல்ல இடம் கண்டு பிடிக்க வெளியே போகும். இடம் நிச்சயமானதும் திரும்பி வந்து மற்ற ஈக்களுக்குத் தெரியப்படுத்தும். அதன் பின் எல்லாம் போய்க் கூண்டு கட்டும். ஜனவரி 16உ வெளியேறிய கூட்டத்தை விட்டுவிட்டோம். அதற்குப்பின் நாலுநாள் கழித்து மறுபடி ஒரு கூட்டம் வெளிக் கிளம்பிற்று. அப்படையில் இரண்டு ராஜகுமாரிகள் இருந்தன. இரண்டில் ஒன்று யுத்த சோதனையில் வென்று, அதுவே ஆட்சிபுரிய வேண்டியது. இருபது நிமிஷம் யுத்தம் நடந்தது. ஒன்று மாண்டது. ஆனால், நாங்கள்

இவைகளைக் குடியேற விடவில்லை. மெதுவாக இவை களைப் பிடித்து மறுபடி பழைய கூண்டில் சேர்த்து விட்டோம். கூண்டில் ஆள் பலம் குறையாம லிருப்பதற்காக இவ்வாறு செய்தோம். டிசம்பர் மாதத்தில் மறுபடி ஒரு கூட்டம் கிளம்பிற்று. இதைப் பிடித்து வேறொரு புதிய கூண்டில் அமைத்தோம். அதுதான் நம்முடைய 'கங்கா'. இவ்வாறே மற்றக் கூண்டுகளின் கதையும். ஆசிரமத்தில் தற்போதிருக் கும் கூண்டுகளில் புத்து குடியேற்றக் கூண்டுகள்; பதினேழு, காட்டில் பிடித்த கூண்டுகள்.

தேன் எவ்வளவு எடுத்தீர்கள் என்று விசாரிக்கா தீர்கள். தேன் எடுப்பது பெரிதல்ல. தேனீக்களை வளர்த்துச் சரியாகப் பாதுகாத்து வருவதே ஒரு நல்ல ஆத்ம சிக்ஷை. பசுவைப் பாதுகாக்கச் சொல்லுவது பாலுக்காகவல்ல. குதிரை, பசு இவைகளை வைத்திருக் கும் வீட்டில் வளரும் குழந்தைகள் சுபாவமே வேறு; வாடகை வண்டியில் ஏறி, விலைக்குப் பால் வாங்கும் வீட்டுக் குழந்தைகள் சுபாவம் வேறு. அவ்விதமே தேனீ வளர்ப்பதும். ஜந்துக்களுடன் கூடி வாழ்ந்து, அன்பும் அறிவும் பெருக்கிக்கொள்ளுவது, படிப்பு களுக்குள் பெரிய படிப்பு.

8

## மனிதன் எம்மாத்திரம்

குடியானவன் ஒருவனை யாதாயினும் பக்கத்திலுள்ள ஓர் ஊர் எவ்வளவு தூரம் என்று கேட்டால், இரண்டு, அல்லது மூன்று நாழிகை தூரம் என்பான். அதாவது இரண்டு அல்லது மூன்று நாழிகைகளில் ஒரு மனிதன் சாதாரண நடையாக நடந்தால் செல்லக்கூடிய தூரம் என்று பொருள்.

இவ்வாறு கால அளவைக்கொண்டு தூரத்தை அளந்து சொல்லுவது, கிராமத்திலுள்ள குடியானவர்கள் மட்டுமல்ல. பௌதிக சாஸ்திரங்களில் சாதாரண அளவுக்கு எட்டாத தொலைகளை இவ்வாறு கால அளவை வைத்துச் சொல்லுவது முறை. ஆனால் சாதாரண நடை வேகத்தை வைத்துக் குறிப்பிடுவதற்குப் பதில், நமக்குத் தெரிந்த விசைகளனைத்திலும் பெரும் விசையான ஒளி விசையைக்கொண்டு அளந்து சொல்வார்கள். காசி எவ்வளவு தூரம் என்று கேட்டால் இக்காலத்தில் கால்நடையளவில் சொல்லமாட்டோம்.

நான்குநாள் பிரயாணம் என்று புகைவண்டிப் பிரயாணத்தை அளவாக வைத்துக்கொண்டு சொல்லுவோம். அம்மாதிரியே விஞ்ஞான சாஸ்திரிகள் ஒரு நட்சத்திரம் பூமிக்கு எவ்வளவு தூரம் என்றால், இத்தனை "ஒளி வருஷங்கள்" என்பார்கள். அதாவது ஒளியானது ஒரு வருஷத்தில் செல்லும் தூரத்தை அளவையாக வைத்துக்கொண்டு நட்சத்திரத்திற்கும் நமக்கும் இடையிலுள்ள தூரத்தை அளந்து குறிப்பார்கள்.

ஒரு வண்ணான் துணி துவைப்பதைத் தூரத்தில் மேட்டில் உட்கார்ந்து பார்ப்பவர்களுக்கு, ஒவ்வொரு தடவையும் கல்லின்மேல் துணி விழுவதைக் கண்ட கொஞ்ச நேரத்திற்குப் பின் இடைவிட்டுத்தான் அடியோசை கேட்கும். உற்சவ காலத்தில் வாண வேடிக்கை பார்க்கும்போது, "அவுட்" வாணம் மேலே கிளம்பி விசித்திர கோலமாகப் பொறி பூத்த கொஞ்ச நேரங் கழித்துத்தான் வெடி சப்தம் காதுக்கு எட்டுகிறது. இவ்வாறு சப்தம் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடம் போய்ச்சேர தொலைவுக்குத் தகுந்த நேரம் பிடிக்கிறது என்பதை அறிகிறோம். ஒலியின் விசை புகைவண்டியின் விசையைவிட மிக அதிகம். ஆனால் ஒலியின் விசைகூட நட்சத்திரங்களின் தூரங்களை அளக்கப் போதாது. காசிக்கும் காஞ்சிக்குமுள்ள தொலையைக் காலடியால் அளந்து சொல்வதைப் போலவேயாகும்.

ஒலியைப்போலவே ஒளிக்குங்கூட ஓர் இடத்திலிருந்து மற்றோரிடத்திற்குப் போகக் கொஞ்ச நேரம் பிடிக்கிறது. ஆனால் அதன் விசை ஒலி விசையை

விடப் பன்மடங்கு அதிகம். மிகவும் வேகமான புகை வண்டியைவிட பன்னிரண்டு மடங்கு விசையில் ஒலி செல்லுகிறது. ஒலியின் விசையைவிடப் பன்மடங்கு அதிகம், ஒளியின் விசை. ஒலி பத்து மைல் செல்வதற்குள், ஒளி ஒரு கோடி மைல் சென்றுவிடும்! இந்தியாவின் வட கோடியிலிருந்து தென் கோடிக்கு ஒளியானது ஒரு வினாடியில் நூற்றில் ஒரு பங்கு காலத்திற்குள் தாண்டும். இவ்வளவு விசையாகப் பறக்கும் ஒளியானது நட்சத்திரங்களுக்குள் நமக்கு மிகச் சமீபம் என்று சொல்லக் கூடியவைகளிலிருந்து நம்முடைய உலகத்திற்கு வந்து சேர மூன்று வருஷமாகிறது.

ஒரு நாளில் கோடி இந்தியாவைத் தாண்டும் ஒளி விசையானது மிக நெருங்கி நிற்கும் நட்சத்திரத்திற்கும் நமக்குமுள்ள தூரத்தைக் கடந்துவர மூன்று வருஷங்களாகுமென்றால், நட்சத்திரங்கள் எவ்வளவு தூரத்திலிருக்கின்றனவென்பதை ஒருவாறு உணரலாம். சில நட்சத்திரங்கள் மூன்று வருஷமல்ல, ஐம்பது, சில ஐந்நூறு, சில ஆயிரம் வருஷ தூரத்திலிருக்கின்றன. அங்கிருந்து அவற்றின் ஒளி நம்மிடம் வந்து சேருமுன் இடையில் நாம் புத்தகங்களில் படிக்கும் இந்திய சரித்திரம் முழுதும் நடைபெற்றது. இன்று நாம் அசுவினி, கிருத்திகை முதலிய நட்சத்திரங்களைப் பார்க்கிறோமல்லவா? பத்து, ஐம்பது அல்லது ஆயிரம் வருஷங்களுக்கு முந்தியிருந்த காட்சியைத்தான் நாம் இன்று காண்கிறோம். ஒளி அவ்விடங்களிலிருந்து புறப்பட்டு நம் கண்ணுக்கு எட்ட இவ்வளவு காலம் செல்லுகிறது.

பூமியின் சுற்றளவு சுமார் இருபத்தையாயிரம் மைல். இந்த அளவு கொண்ட பூகோளத்தை ஒரு சிறு எலுமிச்சம்பழ அளவாக வைத்துக் கொண்டால், சூரியனுடைய பரிமாணம் ஒன்பது அடி குறுக்களவு கொண்ட ஒரு பெருஞ் சுடர்க் கோளமாகும். அந்த அளவு கொண்ட சூரியனுங்கூட, சில நட்சத்திரங்களுக்கு முன், அணு மாத்திரமேயாகும். இவ்வளவு மகத்தான இடைவெளியில் இவ்வளவு பேரளவு கொண்டு அங்கங்கே சுழன்று செல்லும் அண்டங்களின் வேகங்களையும், நிலைகளையும் இடைவிடாமல் ஆண்டுவரும் மகாசக்தியே ஈசுவர சக்தி. இதில் மனிதனின் பிரமாணம் எவ்வளவு சிறியது! அவனுடைய வெறுப்பு விருப்புக்களையுமே வைத்து உலகத்தின் நன்மை தீமையை அளக்க முடியுமா?

ஜகமனைத்தும் சேர்ந்தது ஓர் உடல். அதனுள் நின்று அதனை ஆளுவது ஒரு பரமாத்மா. ஜகம் முழுதும் சேர்ந்த முற்றுப் பொருளில் ஒவ்வொரு ஜீவனும் ஓர் உயிருள்ள அவயவம். அனைத்தும் ஒரு சக்தியால் ஓர் ஒழுங்குக்கு உட்பட்டு நடைபெற்று வருகிறது; ஒழுங்கற்ற வெறும் பொருட் கூட்டமல்ல. இரவில் வானத்தில் மின்னும் நட்சத்திரங்களைக் கண்டு நாம் மகிழும்போது இதையெல்லாம் எண்ணிச் சிந்திக்க வேண்டும்.

## 9

## உணவு சாஸ்திரம்

“ஜீவன்கள் அனைத்தும் உணவிலிருந்து உண்டாகின்றன. ஜீவன்களின் உயிரைத் தாங்குவதும் உணவேயாகும். ஜீவன்கள் அனைத்தும் முடிவில் உணவாகவே முடியும்.” — இது தைத்ரீய உபநிஷத்தில் மூன்றாவது வல்லியில் பிருகுவுக்கு அவர் தகப்பனார் உபதேசித்தது.

ஒவ்வொரு தாவர வகையும் பிராணி வகையும் வேறு தாவர ஜங்கம உயிர்களுக்கு ஆகாரமாகிறது. நேராகத் தின்னப்பட்டாலும் சரி, அல்லது மண்ணில் கலந்து எருவாகிப் பிறகு தாவரமாகி, அது உண்ணப்பட்டு ஒரு பிராணியின் யாக்கையில் ஒன்றுபட்டு, பிறகு அந்தப் பிராணி வேறு ஜந்துவால் உண்ணப்பட்டாலும் சரி, அல்லது பால் தந்து அப்பாலை மனிதன் குடித்தாலும் சரி, எல்லாம் உணவு முறைகளேயாகும். வேர் ஊன்றி வளரும் செடி முதலிய உயிர்களும், நீந்தியும் ஊர்ந்தும் பறந்தும் நடந்தும் செல்லும்



ROJA MUTHIAH
KOTTAIYUR-623 10
NADU INDIA

எல்லா ஜங்கமப் பிராணி வகைகளும், தம் உடல்களை ஒன்று மற்றொன்றுக்கு உணவாக உதவுகின்றன. இதுவே சிருஷ்டி அமைப்பு.

சிருஷ்டியிலுள்ள அனைத்தையும் உண்டாக்கிக் காப்பாற்றி, ஒன்றில் ஒன்று லயமாகி, இவ்வாறு ஒன்றுக்கொன்று இன்றியமையாத சம்பந்தமும்மாகின்ற இந்த 'அன்னம்' அல்லது 'உணவு' என்னும் பொருளிலே பிரம்மத்தைக் காணலாம் என்பது உபநிஷத்து ரிஷியின் மகத்தான உபதேசம்.

உ

வேதாந்த ஆராய்ச்சி ஒருபுறமிருக்க, பூத நூலாராய்ச்சி முறையில் உணவு என்னும் விஷயத்தைப் பற்றிக் கொஞ்சம் பார்க்கலாம்.

தாவரங்கள், காற்றிலுள்ள கரியெரிந்த வாயுவினின்றும், நீரினின்றும், நிலத்தில் கிடக்கும் மண் பொருள்களினின்றும் தம் யாக்கைக்கு வேண்டியதைத் தாமே செய்துகொள்ளும் திறமையைப் படைத்திருக்கின்றன. தாவரங்களைப்போல் வாயு, நீர், மண் இவைகளினின்று நேராக உயிருக்கு வேண்டியவைகளைத் தேடிக்கொள்ள மனிதன் முதலிய பிராணிகளால் முடியாது. தாவரங்களையோ அல்லது தாவரங்களைத் தின்ற பிராணிகளையோ அல்லது பிராணிகள் ஈன்ற பொருளையோ தின்றுதான் மனிதனும் பிராணிகளும் ஜீவிக்க முடியும். பிராணிகள், பிராணிகளையும் தாவரங்களை

யும் உணவாகக்கொள்ளும். தாவரங்கள்,உயிர் சம்பந்த மற்ற மண் பொருள்களை நேராக உட்கொண்டு வளர முடியும். இதுவே ஜங்கம ஜீவன்களுக்கும் தாவரங் களுக்கும் உள்ள பெரிய வித்தியாசம். மனிதனுக்குத் தாவரம் நேராகவும், பல படிகளின் வழியாகவும் உண வாகிறது. உதாரணமாக, கடலில் சிறு தாவர உயிர் களை உண்டு சிறு ஜீவன்கள் வளர்கின்றன. அவை களைச் சிறு மீன்கள் உண்கின்றன. அம்மீன்களைப் பெரு மீன்கள் தின்று வளர்கின்றன. பெரு மீன்களை மனிதன் உண்கிறான். இவ்வழியில் கடலில் வளரும் தாவரப் பொருள் மனிதனுக்கு உணவாகிறது.

ந

தாவரம் தன் உடல் வளர்ச்சிக்கும் மராமத்துக் கும் வேண்டியதை மண்ணிலிருந்தும் வாயுவிலிருந்தும் நீரிலிருந்தும் நேராக உண்டாக்கிக் கொள்ளுவதைப் போலவே, தாவரத்தின் உடலில் நடைபெறும் வேலைக்கு வேண்டிய மூல சக்தியை அது சூரிய கிரணங்களினின்று நேராக எடுத்துக் கொள்ளுகிறது. தனக்கு வேண்டிய சக்தியை வெயிலினின்று தாவரம் நேராகப் பெறுவதுபோல, சூரியனிலிருந்து நமக்கு வேண்டிய சக்தியை எடுத்துக்கொள்ள நம்மால் முடி யாது. சூரியனுடைய சக்தி வெயில் வழியாகத் தாவ ரத்தில் புகுந்து அவ்வாறு தாவரங்கள் ஈட்டிய சக் தியை நாம் காயும், கனியும், கிழங்கும், தானியமும், இலையுமாக எடுத்து உண்டு சக்தி பெறுகிறோம். சூரிய னுடைய சக்தியே மனித யாக்கையின் வேலைக்கு ஆதி

மூலமாயினும், அதைத் தாவரத்தின் வழியாகவும், தாவரங்களைத் தின்ற பிராணிகளின் வழியாகவுந்தான் மனிதன் அடைகிறான்.

௩

யந்திரத்திற்குக் கரி போடுவதுபோல் மனித யாக்கைக்கு உணவு போடவேண்டும். கரி எரிந்து உண்டான உஷ்ணத்தைக் கொண்டு யந்திரம் வேலை செய்வதுபோல் மனித யாக்கையில் உணவு எரிந்து உண்டாகும் சக்தியின் பயனாக உடலின் வேலை நடைபெறுகிறது.

ஆயினும் யந்திரம் வேலை மட்டும் செய்யும்; வளராது. மனித யாக்கை வளர வேண்டும். உடலில் மராமத்தும் நடக்கவேண்டும். இதற்கும் உணவு பயன்படுகிறது. யந்திரத்திற்குப் போடும் கரி அல்லது எண்ணெய் அந்த யந்திரத்தை வளரச் செய்யாது; வேண்டிய மராமத்துகளும் செய்யாது. மனிதனும் மற்றப் பிராணிகளும், யந்திரங்களைப் போலன்றி, உட்கொள்ளும் உணவினின்று இருவித பயன் எடுக்கவேண்டும்: ஒன்று, வினைச் சக்தி. மற்றொன்று யாக்கைப் பொருள் உண்டாக்கிக் கொள்ளுதல். ஆகார ஆராய்ச்சியில் இது முக்கியமான விஷயம். சில உணவுப் பொருள்கள் இரண்டு பயனும் தரும். சில பொருள்கள் வினைச் சக்தி மட்டுமே தரும். வினைச் சக்தி மட்டும் தரும் உணவுக்கு 'எரிபொருள் உணவு' என்றும், யாக்கைப் பொருள் தரும் பொருளுக்கு 'ஊன் உணவு' என்றும்

பெயர் தந்து உணவுப் பொருள்களை வகுக்கலாம். இரண்டாவது வகையான ஊனுணவானது யாக்கைப் பொருள் தருவதோடு, எரிந்து வினைச் சக்தி தருவதற்கும் உதவும். ஆதலால் எரிபொருளுணவு ஒரு-பயன் பொருள் ஆகிறது; ஊனுணவு இருபயன் பொருள் ஆகிறது.

எரி பொருள் உணவுப் பொருள்கள் : சர்க்கரை, தானிய மாவுகள் முதலியன. ஊன் உணவுப் பொருள்கள் மாமிசம், முட்டைக்கரு, பால் முதலியன.

௫

ஒரு மனிதனை உஷ்ணமானியில் வைத்து இரண்டு நாள் கணக்கு எடுத்தால், தேகத்தில் உண்டாகும் உஷ்ணத்தின் அளவு, அவன் அந்த இரண்டு நாட்களில் உட்கொண்ட உணவுப் பொருள்களைத் தீ வைத்து எரித்தால் எவ்வளவு உஷ்ணம் வெளிப்படுமோ, அந்த அளவே ஆகும். தேகத்திற்குப் பயன் படாமல் வெளிப்பட்டுப் போகும் கழிபொருளின் கணக்கைக் கழித்தால் வித்தியாசமில்லாமல் இரண்டு கணக்கும் ஒத்திருப்பதைப் பார்க்கலாம். உண்ட உணவு எரிந்து உஷ்ணம் உண்டாவதுடன், உணவுப் பொருளிலுள்ள சக்தியில் ஒரு பாகம் மனிதன் செய்யும் வேலையாக மாறுகிறது. புகை வண்டி எஞ்ஜினில் போடும் நிலக்கரியானது வண்டிகளை இழுத்து வேலை செய்வதுபோல், உட்கொள்ளும் உணவில் மறைந்து கிடக்கும் சக்தியில் நூற்றில் பத்து முதல் இருபது

வரை மனிதன் செய்யும் காரியமாக வெளிப்படுகிறது. தீ யந்திரத்தில் எண்ணெயோ கரியோ எரிந்து வேலை செய்கிற மாதிரியல்ல, உடலில் உணவுப் பொருள் வேலையாக வெளிப்படுவது. மின்கல அடுக்கில் ரசாயனப் பொருள் காணுமல் எரிந்து அதன் மூலம் நாம் வேலை உண்டாக்கிக் கொள்ளுதல்போல் உண்ட உணவு உடலின் வேலைக்குப் பயன்படுகிறது.

தொழில் செய்து வாழும் ஒரு மனிதன் நாளொன்றுக்கு சுமார் மூவாயிரம் கனலிகளாவது கொண்ட உணவு உட்கொள்ளவேண்டும். நீளத்தை அங்குலம், அடி என்று அளந்துகொள்ளுவதுபோல, வெப்பத்தை இத்தனைக் 'கனலி'கள் என்று அளந்து கொள்ளுவது முறை. ஒரு கனலியாவது, சுமார் நான்கு தேக்கரண்டி தண்ணீரைக் கொதிக்கச் செய்யும் உஷ்ணமாகும். ஒரு ராத்தல் சர்க்கரையில் ஆயிரத்து அறுநூறு கனலி உஷ்ண சக்தி அடங்கியிருக்கிறது.

௬

மனிதனுடைய உடல் ஒரு யந்திரம் என்பது உண்மையாயினும், யந்திரங்களில் ஒரு பாகம் கெட்டுப் போனால் அதை எடுத்துவிட்டுப் புதியது ஒன்றை மாட்டி யந்திரத்தை நடத்தலாமே, அவ்வாறு மனிதன் உடலை மராமத்து செய்ய முடியுமா என்று கேட்கலாம். ஓரளவு இது முடியுமாயினும், பொதுவாக முடியாது. ரத்தத்தில் உள்ள செந்தாதுக்கள் கெட்டுப்போனால், மற்றொருவனுடைய உடலிலிருந்து

ரத்தம் எடுத்துப் புகுத்திப் பயன் பெறலாம். ஆனல் ஒருவன் கையையோ காலையோ வயிற்றையோ எடுத்து அதை மற்றெருவன் தேகத்தில் பிணைக்க முடியாது. சில பூச்சிகளின் இளம்பருவத்தில் ஒரு பூச்சியின் அங்கத்தை மற்றென்றுக்கு ஒட்ட வைக்கக்கூட முடியும் என்று ஆராய்ச்சியாளர் கண்டிருக்கிறார்கள். ஆனல், பெரும் பிராணிகளின் உடல்களை இவ்வாறு மராமத்து செய்ய முடியாது.

எ

தேகத்தில் கெட்டுப்போன பாகங்களின் மராமத்தும் தேகத்தின் வளர்ச்சியும் தாமாகவே நடைபெறுகின்றன. இதற்காகத் தான் உட்கொள்ளும் உணவில் ஒருபாகம் உடலின் பலவிதத் தசைகள் உண்டாகும் பொருளாக இருக்க வேண்டும். ஆயினும் நாம் உட்கொள்ளும் உணவில் தேகத்திற்கு வேண்டிய வெப்பமும் வினைச்சக்தியும் உண்டாக்கும் பொருளே மிகவும் முக்கியமான அம்சம். வளரும் குழந்தை உண்ணும் உணவிலுங்கூட நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து பாகம் வினைச்சக்தியும் வெப்பமும் தருவது; மிகுதி ஐந்து பாகமே உடல் வளர்ச்சிக்கு உதவுகிறது.

உடல் வளர்ச்சிக்கும் யாக்கை மராமத்துக்கும் பயன்படும் உணவுக்குப் 'பிசினப் பொருள்' என்று பெயர். மாமிசத்தில் இதுவே பிரதானமானபொருள். முட்டையிலுள்ள வெண் கருவும் பிசினப் பொருளே. பாற்கட்டியும் பிசினமே. தாவரப் பிசினங்களுமுண்டு.

உளுந்து முதலிய பருப்புக்களிலும் கோதுமை முதலிய தானியங்களிலும் பிசினமுண்டு. மாமிசம், பால், கோழிமுட்டை இவைகளின் ஜீரணத்தைவிடத் தாவரப் பிசினம் செரிப்பது ஓரளவு கடினம். இதனால் மாமிச ஆகாரமே மேலானது என்று கொள்ளலாகாது. மரக்கறி ஆகாரத்துடன் பால் அல்லது பாலினின்று உண்டாகும் பொருள்களைத் தகுந்த அளவில் சேர்த்துக்கொள்ள வேண்டும். பால், கோழிமுட்டை முதலிய ஊன் உணவு சேராத சுத்த மரக்கறி ஆகாரத்தைக் கொண்டே ஜீவிக்கவும் முடியும். ஆனால் அந்தச் சாப்பாட்டுக் கிரமத்தை நன்ருக ஆராய்ந்து தீர்த்துக் கொள்ள வேண்டும். வளரும் குழந்தைகள், கர்ப்பிணிப் பெண்கள், குழந்தைக்குப் பால் கொடுக்கும் தாய்மார் ஆகிய இவர்கள் பால் ஒழிந்த வனஸ்பதி ஆகாரத்தைக் கொண்டே ஆரோக்கியமாக இருப்பது கடினமாகும்.

அ

யந்திரம் வேலை செய்யாமல் கிடந்தால் கரி போட வேண்டியதில்லை. ஆனால் பிராணிகளின் உடல் அவ்வாறு சும்மா கிடக்கமுடியாது. உடலுக்குள் அவயவங்களின் வேலை நடந்துகொண்டேயிருக்கவேண்டும். உடலின் உஷ்ண நிலை குறையாமலும் காப்பாற்றிக்கொள்ள வேண்டும். ஆகையால், வேலை செய்யாமல் சும்மா இருந்தாலுங்கூட, உடலுக்கு உணவு இன்றியமையாதது.

௯

வினைச்சக்திக்கும் வெப்பத்திற்கும் வேண்டிய எரி பொருள், யாக்கை வளர்ச்சி மராமத்துக்களுக்கு வேண்டிய பிசினப் பொருள் இவை இரண்டும்போக, பிராணிகளுக்கு நீரும் உப்பும் தேவை. இவையன்றி வேறு சில ஊக்குப் பொருள்களும் தேவை. ஊக்குப் பொருள்கள் என்றால், எரிந்து உஷ்ணம் தருவதுமில்லை; ஊன் பொருளாகி யாக்கையுடன் சேர்ந்து உதவுவதுமில்லை; ஆனால் உடலில் நடைபெறும் நிகழ்ச்சிகளுக்கு இன்றியமையாத பொருள்கள். ஊக்குப் பொருள்கள் உணவில் இல்லாவிடில் வியாதிகள் தோன்றும். வளர்ச்சி குறையும். இப்பொருள்களைப் பற்றி வெகுகாலம் வரையில் ஒன்றுந் தெரிந்திருக்கவில்லை. இப்போது சில வருஷங்களாகத்தான் ஊக்குப் பொருள்களைப் பற்றி ஆராய்ச்சி நடைபெற்று வந்திருக்கிறது.

௰

ஊக்குப் பொருள்களில் பலவிதமுண்டு. மேல்நாட்டு எழுத்துவரிசையாக அவைகளுக்கு ஏ பி ஸி டி இ என்று மேல்நாட்டார் பெயரிட்டிருக்கிறார்கள். 'ஏ' என்ற ஊக்குப் பொருள் உணவில் போதிய அளவு இல்லாவிடில் கண் மங்கிப்போகும். தோல் வியாதிகள் உண்டாகும். இன்னும் அனேகத் தொந்தரவுகள் உடலில் தோன்றும். 'ஏ' ஊக்குப் பொருள் மீன் எண்ணெயில் நிறைய இருக்கும். கோழிமுட்டை,



ROJA MUTHIAH

வெண்ணெய், நல்ல நெய் இவைகளிலுமிருக்கும். எண்ணெயில் கிடையாது. கீரை, பச்சைக் காய்கறி, கேரட்டு என்கிற மஞ்சமுள்ளங்கிக் கிழங்கு இவைகளை உணவில் தாராளமாகச் சேர்த்துக்கொண்டால் 'ஏ' ஊக்குப் பொருள் போதிய அளவில் அடைவோம்.

௧௧

இரண்டாவதான 'பி' ஊக்குப் பொருள் உணவில் போதிய அளவு சேராமற் போனால் 'பெரிபெரி' என்ற நரம்பைக் கொல்லும் கொடிய நோய் உண்டாகும். கால்கள் சுவாதீனம் நீங்கி இதயமும் நோய்ப்படும். முக்கியமாக, தீட்டிய அரிசி இந்த 'பி' ஊக்குப் பொருட்குறைவை உண்டாக்கும். அரிசி தீட்டும்போது தவிட்டுடன் இந்த ஊக்குப் பொருள் போய்விடுகிறது. இதற்காகத்தான் மில்லரிசி வேண்டாம், கைக்குத்தரிசி உபயோகப்படுத்த வேண்டும் என்பது. அரிசியை நன்றாய்த் தீட்டிவிட்டுத் தூயவெண்ணிறச் சாதம் சமைப்பது நோய்க்குக் காரணமாகிறது.

௧௨

மூன்றாவதான 'ஸி' ஊக்குப் பொருட்குறைவு ஏற்பட்டால் பல் வியாதி, கீல் நோவு, வளர்ச்சிக் குறைவு முதலியன உண்டாகும். நாரத்தை, ஆரஞ்சு முதலிய பழங்களின் ரசத்தில் இந்த ஊக்குப் பொருள் ஏராளமாக இருக்கும். கோஸ் கிழங்கு, பாகற்காய் முதலிய காய் கறிகளிலும், கருவேப்பிலை, கொத்து

மல்லிக் கீரையைப் போன்ற இலைகளிலும், இந்த ஊக்குப் பொருள் இருக்கிறது. ஆனால் சமைக்கும் போது அது அழிந்துபோகும். இதற்காகக், காய் கறிகளைப் பச்சடியாகவோ பச்சைத் துவையலாகவோ உட்கொள்ளுவது நலம்.

கரு

நான்காவதான 'டி' ஊக்குப் பொருள் எலும்பு வளர்ச்சிக்கு மிகவும் அவசியம். இது மீன் எண்ணெயிலும் வெண்ணெயிலும் கோழிமுட்டையிலும் இருக்கும். இதன் முக்கிய தத்துவம் சூரிய கிரணங்களின் சக்தி. உடலின்பேரில் வெயில் பட்டால் தோலுக்கு அடுத்தாற்போல் இருக்கும் உடற்கொழுப்பில் இந்த ஊக்குப் பொருள் உண்டாகிறது. வெயில் காணாத தேசங்களில் செயற்கைப் பொருள்களும் மருந்தும் இந்த 'டி' ஊக்குப் பொருட் குறைவைத் தீர்ப்பதற்கு வேண்டும். நெய்யை அரை மணி நேரம் வெயிலில் வைத்துச் சேர்த்துக் கொள்ளுவது நல்ல முறை என்று சிலர் எண்ணுகிறார்கள்.

கச

கடலில் மீன்கள் உப்பு நீரில் வாழ்வதுபோல் நம்முடைய தேகத்தின் பல்கோடிக் கண்ணறைகள் இரத்தமாகிய உப்பு நீரில் வாழ்கின்றன. அந்த உப்பு நீர் இல்லாவிடின் அவை உயிரிழக்கும்; அதாவது நாம் இறப்போம். கடுமையான விஷபேதி கண்டு தேகத்தி

விருந்து உப்பும் நீரும் அளவு கடந்து வெளிப்பட்டுப் போனால் உயிர் போய்விடும். ஆகையினால், காலரா கண்டவர்களுக்கு ஊசி குத்தி உப்புநீரை உடலில் ஏற்றிச் சிகிச்சை செய்கிறார்கள். இறந்துபோன ஒரு பிராணியின் இதயத்தைச் சிதைவுபடாமல் வெளியே எடுத்து அதில் இளஞ்சூட்டு நிலையில் உப்புநீர் பாயச் செய்தால், மறுபடியும் அது துடிக்க ஆரம்பிப்பதை ஆராய்ச்சிக்காரர்கள் பார்த்திருக்கிறார்கள். இதனால் உப்புக்கும் உயிருக்கும் ஏதோ ஒரு ரகசிய சம்பந்தம் இருப்பதாகத் தெரியவருகிறது.

# 10

## வெப்பத்திலும் தண்மை

உக்கிர வெயிலினிடையிலும் குளிர்காலத்தினிடையி லும் நம்முடைய உடல் ஒரே சூட்டு நிலையில் மாருமல் நிற்கிறது. அவ்வாறு நிற்கவேண்டியது தேக தருமத்திற்கு இன்றியமையாத நிலை. வைத்தியர்கள் உபயோகிக்கும் உஷ்ணமானி அனைவருக்கும் தெரியும். அதை வைத்துப் பார்த்தால் எந்த மாதத்திலும், காலை யிலும் இரவிலும் வெயிலிலும் பனியிலும் மனிதன் தேகம் ஆரோக்கிய நிலையிலிருந்தால் 98·4 பாகை உஷ்ண நிலையை எப்போதுமே காட்டும். இது உட லமைப்பில் ஓர் ஆச்சரியமான இலக்கணம்.

இவ்விஷயத்தில், மனித உடலைப்போல் எல்லாப் பிராணி வகைகளும் இல்லை. மீன்களின் உஷ்ண நிலை எப்போதும் ஒரேவிதம் இல்லை ; இருக்கவேண்டிய அவசியமும் இல்லை. அவை வசிக்கும் நீரின் உஷ்ணநிலை மாறுபட்டால் அதைத் தணித்துக்கொள்ளும் கவலை

அவைகளுக்கு வேண்டியதில்லை. ஆனால் பறவைகளும் பால் கொடுத்துக் குஞ்சு வளர்க்கும் எல்லாப் பிராணி வகைகளும் மனிதனைப் போலவே தம் உடலின் வெப்பத்தை ஒரே நிலையில் நிறுத்திக் கொள்ளுகின்றன. இல்லாவிட்டால் அவை உயிருடன் இருக்க முடியாது. இந்தப் பிராணிகள் தம்மைச் சுற்றியுள்ள சூழ் நிலையின் வெப்பத்தில் மாற்றம் ஏற்பட்டாலும், தம்முடைய உடலின் வெப்பத்தை ஒரே நிலையில் நிறுத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது.

உடலுறுப்புக்களில் முக்கியமாக மூளைக்குத்தான் மாருத வெப்ப நிலை இன்றியமையாதது. குளிரிலும் வெயிலிலும் நெருப்பண்டையிலும் பனிக்கட்டிகளினிடையிலும் கைகால்களின் தசைகள் சரியாகவே வேலை செய்யமுடியும். அவ்வாறே உடலுக்குள் மறைந்து நிற்கும் சிறுநீர் பிரித்தி, குடல் முதலிய அவயவங்கள் வெப்ப நிலை மாறுபடினும் தத்தம் வேலையைச் செய்யும். ஆனால், மூளைக்கு அவ்வாறு முடியாது. உடலின் வெப்ப நிலையானது சில பாகையளவு மேலேறினாலுங்கூட மூளை கலங்கிப் புத்தி மாருட்டம் ஏற்படுகிறது. வெப்பநிலை தாழ்ந்துபோனால் அதைவிட ஆபத்து. மிகச் சிறு மாறுதலேற்பட்டாலும், நினைவு தப்பிவிடும்.

சூழ்நிலையின் வெப்பம் ஏறினபோது அதனைத் தொடர்ந்து மனிதனுடைய உடலின் உஷ்ணநிலை அதிகப்படாமல் தணித்துக்கொள்வதற்கு மூன்று சாதனங்கள் உண்டு. நாம் வசிக்கும் வீடு, போர்த்தும்

உடை இவைகளைக் கவனிப்பது முதலாவது சாதனம். ஜன்னல்களைத் திறந்தும் வேறு வழிகளைத் தேடியும் வீட்டின் உஷ்ண நிலையை ஓரளவு தணித்துக்கொள்ள லாம். நாம் போர்த்தும் உடைகளைத் தக்கவாறு அதி கப்படுத்துவதும் குறைப்பதும் மிக முக்கியமான விஷயம். இதைக் கவனியாமல் சில தாய்மார்கள் குழந்தைகளைக் கஷ்டப்படுத்துகிருர்கள். உடையைத் தாமே கழற்றிவிடக் குழந்தைகளுக்கு முடியாது. வெப் பத்தைத் தணிக்க இடம் கொடுக்காமல் அனுவசியமாக உடைகள் போட்டும் போர்வை போர்த்தியும் குழந்தை களை இம்சிக்கிருர்கள்.

தேகத்தில் சதா காலமும் இடைவிடாமல் உஷ் ணம் உண்டாக்கப்பட்டு வருகிறது. அசையாமல் கிடந்தாலுங்கூட வெப்பம் உண்டாகிறது. வேலை செய்யும்போது வெப்ப உற்பத்தி அதிகமாகிறது. நிலக் கரி எரிந்து வேலை செய்யும் இயந்திரத்தைப் போலவே உடலும் ஓர் இயந்திரம். இயந்திரத்தில் சூடு உண்டா வது போல் உடலில் வெப்பம் கிளம்புகிறது. இதை அகற்றித் தணித்துக் கொள்ளாமற் போனால் நாம் இறந்து போவோம். ஒரு 'தெர்மாஸ்' புட்டியில் வெந்நீர் அல்லது காப்பியை மூடி வைப்பதுபோல், ஒரு மனிதனை வெப்பம் அகலாமல் மூடிவைத்து விட்டோ மானல், உடலில் உற்பத்தி யாகும் உஷ்ணத்தினு லேயே மூன்று நான்கு மணி நேரத்தில் உயிர் போய் விடும்.

உடலில் இடைவிடாமல் உண்டாகும் உஷ்ணம் இரத்த ஓட்டத்தினால் தோலண்டை வந்து தணிகிறது. தோலுக்கு அடுத்த பாகத்தில் இருக்கும் மயிரிழை போன்ற குருதிக் கால்களில் இரத்தம் ஓடி வெளிப் புறத்துக் குளிர்ச்சியினால் ஓரளவு உஷ்ணம் தணிகிறது. இரத்தக் குழாய்கள், அதிலும் முக்கியமாக இருதயத்தினின்று வெளியேறும் பாய் குழாய்கள் - அதற்கென்றுள்ள நரம்புகளினால் ஆளப்பட்டுப் பெருகவும் சுருங்கவும் செய்யும். நரம்பின் கட்டளைப்படி குழாயின் தசை தளர்ந்தால் குழாயின் பருமன் பெரிதாகிறது. அவ்வாறே குழாயின் தசை சுருங்கினால், குழாயின் பருமன் குறைகிறது. சூழ்நிலையின் வெப்பத்திற்குத் தக்கவாறு நரம்பு வேலை செய்கிறது. நரம்பின் உத்தரவுப்படி குழாய்களின் தசை வேலை செய்கிறது. இவ்வாறு தோலை யடுத்துப் பரவியிருக்கும் குழாய்களில் ஓடும் இரத்தத்தின் அளவு நரம்புகளால் ஆளப்படுகிறது. சூடு தணியும் அளவும் அதனைத் தொடர்ந்து நிற்கிறது.

இந்த குருதிக் குழாய் நரம்புகள் தாமாகவே வேலை செய்யும். நம்முடைய மனம்போல் வேலை செய்வதில்லை. நாம் கோரிய வண்ணம் வேலைசெய்யும் தசைகள் வேறு. தாமாகவே வேலை செய்யும் தசைகள் வேறு. இரத்தத்தை அமுக்கிப் பாயச் செய்யும் இருதயம், கண்ணிலுள்ள கருவிழி, வயிறு, குடல் முதலிய அவயவங்கள் நாமறியாமல் தாமாகவே வேலைசெய்துகொண்டு போகும். இருட்டானால் கருவிழியிலுள்ள சிறு தசை

நார்கள் கண்மணியைப் பெரிதாக்குகின்றன. வெளிச்சம் அதிகமானல் குறுகச் செய்கின்றன. நாமாகவே வேண்டி அவ்வாறு செய்யமுடியாது. குருதிக் குழாய் நரம்புகளும் இவ்வாறே நம்முடைய விருப்பத்தை எதிர்பாராமல் தம் தொழிலைச் செய்யும்.

நம்முடைய சுவாதீனமின்றி வேலை செய்யும் நரம்புகளின் எஜமான ஸ்தானம் மூளையில் ஒரு பாகத்தில் இருக்கிறது. இரத்தக் குழாயின் பருமனை யாளும் நரம்புகளுக்கென்று ஒரு காரியாலயம் மூளையிலிருக்கிறது. அது ஒவ்வொரு சமயம் தன் வேலையை மறந்து போவதுமுண்டு. வெகுநாள் படுத்த படுக்கையாய்க் கிடக்கும் நோயாளி திடீர் என்று எழுந்து நின்ருல், இந்தக் குருதிமானிக் காரியாலயம் சரியாக வேலைசெய்வதை மறந்துவிட்டு, மேலிருக்கும் ரத்தம் அதிகமாகக் கீழ் பாகங்களுக்கு வடிந்து மூளைக்கு ரத்தம் குறைந்து நோயாளி தலை சுற்றிக் கீழே விழுவான். திரவப் பொருள் எல்லாம் இயல்பாக மேலிருந்து கீழே வடியும்; தேகத்தின் கீழ்ப்பாகத்திற்குப் போகும் பாய் குழாய்களின் பருமனைக் குறுகச் செய்யும் நரம்புகள் வேலை செய்யாமல் போனல், அதிகமாக ரத்தம் கீழே பாயும். உடனுக்குடன் வேண்டியவாறு இரத்தக் கால்கள் சுருங்கிக் குறுகவும் தளரவும் நரம்புகள் வேலை செய்ய வேண்டுமானல், மூளையிலுள்ள குருதிமானிக் காரியாலயம் தூங்காமல் தன் காரியத்தைச் சரிவரச் செய்யவேண்டும். அதற்குப் பழக்கம் கெடாமல் ஆரோக்கிய நிலை வேண்டும். படுத்த படுக்கையாக

வெகுநாள் கிடந்தபின் மறுபடியும் கவனித்து வேலை செய்ய ஆரம்பிக்கக் கொஞ்சம் சாவகாசம் வேண்டும். இவ்வாறு சூட்டிற்குத் தக்கபடி குருதிக் குழாய்களின் பருமன் ஆளப்பட்டு, இரத்தம் தோலைச் சேர்ந்தாற் போல் பரவி உஷ்ண நிலை தணிகிறது.

தானாகவே சூடு தணிவதல்லாமல் அதிக வேகமாக வெப்பம் தணிவதற்காக வேர்வை உண்டாகி, அது காற்றில் உலர்ந்து, சூடு உடனே தணிகிறது. திரவப் பொருள் ஆவியாகும்போது அதனிலுள்ள வெப்பம் செலவாகி உஷ்ண நிலை தணிகிறது. கையை நீரில் தோய்த்து, அதன்பேரில் காற்று வீசினால், சூடு தணிவதை நாம் உணரலாம். அதேபோல், தேகத்தில் உண்டாகும் வேர்வையின்மேல் காற்றுப்பட்டு, அது ஆவியாக மறையும்போது தேகத்தின் சூடு தணிகிறது. வேர்வை உலராமல், நீர்த் துளியாகப் பெருகினால் பயனில்லை ; சூடு தணியாது.

சில ஊர்களின் இயற்கை நிலை, காற்றில் அதிக நீராவி நிறைந்து கிடக்கிறது. கடலோரப் பிரதேசங்களில் இவ்வாறிருக்கும். நீராவி நிறைந்த காற்றில் வேர்வை உலர்வதில்லை. அவ்வித ஈரக் காற்றில் உஷ்ண நிலை கொஞ்சம் ஏற்றம் ஏற்பட்டாலே வெப்பம் பொறுப்பது சிரமமாகிறது. மழை வரும் தறுவாயில் வளி மண்டலத்தில் நீராவி அதிகம் நிறைந்து கிடக்கிறது. நீராவி நிறைந்த காற்று வேர்வையை உறிஞ்சுவதில்லை. அதனால் உடலின் வேர்வை அகல்வதில்லை. இதனால்தான் மழைக்கு முன் வெப்பம் அதிகமாகத்

தோன்றுகிறது. வளிமண்டலத்தில் நீராவி குறைந்து, உலர்ந்த நிலையிலிருந்தால் வேர்வை உடனுக்குடன் ஆவியாகி விடுகிறது; உடலின் வெப்பம் தணிகிறது. இதனால்தான் நீரற்ற காற்றுள்ள ஊர்களின் உஷ்ணநிலை உண்மையில் அதிகமாக இருந்தாலும் வெப்பம் தோன்றுகிறதில்லை; பொறுக்கமுடிகிறது. சில ஊர்களில் உஷ்ண நிலையில் கொஞ்சம் ஏற்றம் ஏற்பட்டாலும், பொறுக்க முடிவதில்லை. இதற்குக் காரணம் காற்றில் நீராவி அதிகமாக இருந்து வேர்வை உலர்ந்து போகும் சௌகரியம் வளிமண்டலத்தில் இல்லாமலிருப்பதுதான்.

ஆங்கில தேசத்தில் வளிமண்டலம் எப்போதுமே நீர் நிறைந்திருக்கும். நூறு பாகை உஷ்ண நிலையே அந்தத் தேசத்தில் ஜனங்கள் பொறுப்பது கஷ்டம். ஆஸ்திரேலியாவில் அதே ஜனங்கள் நூற்றுப்பத்து பாகை உஷ்ண நிலையில் உஷ்ணத்தைப் பொருட்படுத்தாமல் மட்டைப்பந்து விளையாடுவார்கள். நூற்றுப் பத்து பாகையிலும் ஆஸ்திரேலியாவில் வெப்பம் அதிகமாகத் தோன்றாது.

இரத்தத்திலிருந்து வேர்வை வெளிப்படுவது பானையில் நீர் கசிவதுபோலல்ல. தோலுக்கடியில் அமைந்துள்ள வேர்வைச்சுரப்பிகள் இரத்தத்தினின்று வேர்வையைப் பிரித்துத் தருகின்றன. மூளையில் வேர்வைச் சுரப்பிகளின் காரியாலயம் உண்டு. அதன் கட்டளைகள் தோலடியில் பரந்து கிடக்கும் நரம்புகளின் வழியாக வேர்வைச் சுரப்பிகளுக்குச் செல்லும். அக்

கட்டளையின்படி அளவுக்குத் தக்கவாறு வேர்வைச் சுரப்பிகள் ரத்தத்தினின்று வேர்வையைப் பிரித்துத் தோலுக்கு வெளியே அகற்றும். அது ஆவியாகி உடலின் வெப்பத்தைத் தணிக்கும். இவ்வாறு சூழ்நிலை வெப்பத்தின் அளவு எதுவாயினும், உடல் தன் சூட்டு நிலையை மாற்றமின்றிக் காப்பாற்றிக் கொள்ளுகிறது.

குதிரை, பசுமாடு முதலிய கால்நடைகளுக்கும் வேர்வைச் சுரப்பிகளுண்டு. ஆனால் அனேகப் பிராணிகளுக்கு வேர்வைச் சுரப்பிகளே இல்லை. நாய்க்குக் கால் பாதங்களைத் தவிர மற்றப் பாகத்தில் வேர்வை சுரப்பதில்லை. ஆகையால் அது தன் வாயைத் திறந்து நாக்கிலிருந்தும் வாயிலிருந்தும் ஈரத்தைக் காற்றில் ஆற்றிக்கொண்டு தன் உடலின் உஷ்ணத்தைத் தணித்துக் கொள்ளுகிறது. வெயில் நேரத்தில் நாய் என்ன செய்கிறது என்பதைப் பார்த்தால் இது நன்கு விளங்கும். நாயின் வாயில் இருவித எச்சில் வடிகிறது. ஆகாரம் உட்கொள்ளும்போது அதன் வாயில் ஊறும் உமிழ்நீர் பசையுள்ளது. அது ஜீரண எச்சில். வெப்பம் தணித்துக் கொள்வதற்கு வாயில் வேறு விதமான எச்சில் நீர் சொரியும், அது பசையற்றது.

நாயின் சுவாசமுறையை நன்றாய்க் கவனித்தாலும், சூட்டைத் தணிப்பதற்காக ஒருவித மூச்சு, இரத்த சுத்திக்காக உட்கொள்ளும் சாதாரண மூச்சு வேறு என்பதைக் காணலாம். நாயானது பத்து மூச்சு வெகு வேகமாய் இழுக்கவும் விடவும் செய்யும் ; இடையில் ஒரு மூச்சு நம்மைப்போல் ஆழ்ந்து உட்கொள்ளும்.

சூட்டுத் தணிப்புக்காக உட்கொண்டு வெளிவிடும் மூச்சு வேகமாகவும் மேல்வாரியாகவும் இருக்கும். ஈரலுக்குச் செல்லும் மூச்சு ஆழ்ந்து இழுத்துக் கொள்ளும். மேலாக எடுக்கும் மூச்சு வாயில் ஊறும் நீரை உலர்த்த மாத்திரம் உதவுகிறது. அதனால் நாயின் உடல் வெப்பம் தணிகிறது.

வேர்வை விடுவதனால் இழந்துவிடும் நீருக்கும் உப்புக்கும் ஈடுசெய்ய வேண்டியது அவசியம். ஆகையால், தண்ணீர் குடிப்பதும், வேர்வையில் செலவழிந்து போகும் உப்புக்குப் பர்த்தியாக ஓரளவு உப்பு உணவுடன் உட்கொள்ளுவதும் வெப்பம் தணிவதற்கு வேண்டிய சாதனங்களாகும். மாடுகளுக்கு வேண்டிய உப்பு நாம் கொடாதபடியினால் அவை ஒன்றை ஒன்று நக்கிக்கொண்டு ஓரளவு உப்பு சம்பாதித்துக் கொள்ளுகின்றன. வெயில் காலத்தில் குழந்தைகளுக்கு வேண்டிய அளவு தண்ணீர் குடிக்கக் கொடுக்கவேண்டும். இதைச் சில தாய்மார் கவனியாமல் குழந்தைகளின் உடல் நிலை கெட்டு வியாதி உண்டாகிறது. சுரங்கங்களில் வேலை செய்யும் ஆட்கள் தண்ணீர் வேண்டிய அளவு குடித்தாலும் வேர்வை மூலம் இழந்துவிடும் உப்புக்குப் போதியபடி ஈடு செய்துகொள்ளாதபடியால் அவர்களுக்குச் சில வியாதிகள் உண்டாவதுண்டு. எனவே, உஷ்ணப் பிரதேசங்களில் உப்பு இன்றியமையாத உணவுப் பொருளாகும். உப்பைக் கண்டு சிலர் பயப்படுவது தவறு.

## 11

## பிராகாரத்தில் கண்ட பகற் கனவு

தென்னாட்டின் பிரதான க்ஷேத்திரங்களில் ஒன்றான திருவண்ணாமலைக்குப் பிப்ரவரி மாதம் இருபத்தெட்டாந் தேதி போயிருந்தேன். மறுநாள் காலையில் அவ்வூரிலுள்ள பிரசித்தமான ஆலயத்துக்குப் போக ஒருமணி நேரம் அவகாசம் கிடைத்தது. அந்த நேரத்தில் ஆலயத்தின் விசாலமான பிராகாரங்களைச் சுற்றிய வண்ணம் சிந்தனையிலாழ்ந்தேன்.

என்னைப்போல் அரசியலில் ஈடுபட்டவர்களுக்கு இம்மாதிரி அவகாசம் கிடைப்பது அபூர்வம். அவகாசம் கிடைத்தாலும் ஏகாந்தம் கிடைப்பதில்லை. எப்போதும் ஜனங்கள் அன்புடன் சூழ்ந்துகொண்டு உபசரித்த வண்ண மிருக்கிறார்கள். தனிமையில் பகற் கனவு காண்பதற்குச் சவுகரியம் ஏற்படுவது கிடையாது. திருவண்ணாமலைக் கோயிலில் இத்தகைய சந்தர்ப்பம் கொஞ்சம் கிடைத்தது, பெரிய அதிர்ஷ்டமாகவே தோன்றிற்று.

## பிராகாரத்தில் கண்ட பகற் கனவு

ஆகா! என்ன கம்பீரம்? என்ன விஸ்தாரம்? வெறும் கல்லையும் சுண்ணும்பையும்கொண்டு இப்பேர்ப்பட்ட வானை அளாவும் கோபுரங்களையும், பிரம்மாண்ட மதில்களையும், விஸ்தாரமான மண்டபங்களையும் கட்டியிருக்க முடியுமா? இவற்றைக் கட்டியவர்களுக்கு எவ்வளவு பக்தி சிரத்தையும் எவ்வளவு செயல் திறமையும் இருந்திருக்க வேண்டும்? எத்தனை காலம் பாடுபட்டு உழைத்திருக்க வேண்டும்?

இந்தக் காலத்தில் நாம் பிரமாதமாய் நினைத்துக் கொண்டிருக்கும் வாழ்க்கை இலட்சியங்கள், மனோரதங்கள் எல்லாம் இத்தகைய பிரம்மாண்டமான ஆலயங்களுக்கு முன்னுல் எவ்வளவு அற்பமாய்ப் போய் விடுகின்றன? இவற்றைக் கட்டிய நமது முன்னோர்கள் பக்தி சிரத்தையில் பெரியவர்களா யிருந்ததுபோல், வினைத் திட்பத்திலும் பெரியவர்களாக இருந்திருக்க வேண்டுமன்றோ?

இந்த ஆலயத்தில் எந்த மூலையை எடுத்துக்கொண்டாலும், இருபதினுயிரம் பேர் உட்காரலாம்! மண்டபங்கள், பிராகாரங்கள் எல்லாவற்றிலும் குறைந்தது ஒரு லட்சம் பேர் வசதியாக உட்கார்ந்து வெளி உலகத்தை மறந்து, ஆத்ம சாந்தியும் மனோதிடமும் தரக்கூடிய திவ்ய காலட்சேபங்களைக் கேட்டு ஆனந்திக்கலாம்.

ஆனால், அடடா, அப்படிப்பட்ட பெரியவர்களின் சந்ததியில் தோன்றிய நமக்கு இந்தக் காலத்தில்

என்ன நேர்ந்துவிட்டது? அவர்களிடமிருந்த பக்தியும் சக்தியும் கற்பனைத் திறனும் இப்போது எங்கே? இந்த அசிரத்தையும், அற்பத் தனமும், அவலட்சண மும், அசுத்தமும், குறுகிய திருஷ்டியும், இழிதகைமை யும் எங்கிருந்து வந்தன? நமது மூதாதைகளின் ஆத்ம சக்தியெல்லாம் எங்கே போய்விட்டது? இறைவா! இப்படி ஏன் எங்களைக் கைவிட்டாய்? எங்களுடைய முன்னோர்களின் சந்ததிகள் என்று சொல்லிக்கொள் ளத் தகுதியற்றவர்களாக எங்களை ஏன் செய்தாய்? நிஜமாக, இந்தப் பிரம்மாண்டமான கோபுரங்களையும் மதில்களையும் ஆயிரக்கால் மண்டபங்களையும், பிராகா ரங்களையும் மனதிலே கற்பனை செய்து கையினால் கட்டி முடித்தவர்களின் சந்ததிகள்தானா நாங்கள்? — இத்தகைய சிந்தனைகள், வார்த்தைகளினால் விவரிக்க முடியாத மன வேதனையை எனக்கு அளித்தன.

ஆலயத்தில் இப்போது, எங்கே பார்த்தாலும் 'அசுத்தம் செய்கிறவர்கள் பிராஸிகியூட் செய்யப் படுவார்கள்'; 'மலஜலம் கழிப்பவர்கள் தண்டனைக் குள்ளாவார்கள்' என்பனபோன்ற அறிக்கைகள் காணப்படுகின்றன. என்ன பயங்கரம்! இம்மாதிரி அசுத்த வழக்கங்கள் இருந்து வருவதனால்தானே மேற் படி அறிக்கைகள் போடவேண்டிய அவசியம் ஏற் பட்டது? இந்த எச்சரிக்கைகள்கூட அவ்வளவாகப் பயன்படவில்லை யென்றும் காணப்படுகிறதே!

'அண்ட பகிரண்டமெல்லாம் அடங்க ஒரு நிறைவாயிருக்கும் பரம்பொருளின் அகில வியாபகத்

துக்கு அறிகுறியாக, இந்த அற்புதமான ஆயிரக்கால் மண்டபத்தை நமது முன்னோர் நிர்மாணித்தார்கள். அதைச் சுற்றி இப்போது அவலட்சணமான செங்கல் சுவர் ஒன்று நிற்கிறது. இந்த அவலட்சணத்தை அதிகமாக்குவதற்கு, இரும்பு கேட் ஒன்றும் போட்டிருக்கிறது. இந்த மாதிரி அவலட்சணப்படுத்தியிருப்பதற்குக் காரணம் என்னவென்று விசாரித்தேன். ஆயிரக்கால் மண்டபத்தில் வருஷத்துக்கு ஒரு தடவைதான் சுவாமி எழுந்தருளுகிறாராம். மற்ற நாளெல்லாம் சும்மா கிடப்பதால், ஜனங்கள் இயற்கைக் கடன் கழிப்பதற்கு மண்டபத்தை உபயோகித்து விடுகிறார்களாம்! ஆயிரக்கால் மண்டபத்தில் செங்கல் சுவரும் இரும்பு கேட்டும் போட்டிருக்கும் காரணம் இதுதான் என்று அறிந்தபோது சொல்லமுடியாத மனவேதனை உண்டாயிற்று. "ஐயோ! நமக்குக் கதிமோட்சமும் உண்டா?" என்று சந்தேகம் தோன்றிற்று.

இந்த விஸ்தாரமான கோயிலை நன்கு உபயோகப்படுத்த முடியாதா, என்ன? சீலமும் உண்மையான பக்தியும் உள்ள சத்புருஷர்கள்—ஜனங்களுக்கு விளங்கும் பாஷையில் கதை சொல்லிப் பாட்டுப் பாடி, நமது முன்னோர்கள் கண்டு அனுபவித்த சமய தத்துவங்களைப் புகட்டக் கூடியவர்கள் — இப்படிப்பட்ட பாகவதர்களைக்கொண்டு தினம் காலையிலும் மாலையிலும் காலட்சேபங்கள் ஏற்படுத்தி, கோயிலில் எல்லா மூலை முடுக்குகளிலும் கேட்கும்படியான ஒலி பெருக்கிகளும் வைத்துவிட்டால், ஆகா! எவ்வளவு ஜனங்கள்

தினந்தோறும் கோயிலுக்கு வருவார்கள் ? இடந்தான் எவ்வளவு சுத்தமாகிவிடும் ?

இன்னும், நமது கோயில்களுக்குள் இருக்கும் அழகான திருக்குளங்களையும் சுத்தம் செய்து, ஆங்காங்கே சுண்ணும்பு போட்டுக் கெட்டிக்காத இடங்களில் சில செடிகளையும் மரங்களையும் வளர்த்துவிட்டால், நமது ஆலயங்களைப் பூலோக கைலாசம் என்று சொல்வதில் என்ன ஆட்சேபம் இருக்கமுடியும் ?

நமது முன்னோர்களின் மகத்தான உள்ளத்தில் உதயமாகி நாடெங்கும் கம்பீரமாய்க் காட்சியளிக்கும் திருக்கோயில்களை நாம் 'எப்படி நாசம் செய்துவிட்டோம்!' ஆனல், நல்லவேளையாக, அவை இன்னும் அடியோடு நாசமாகிவிடவில்லை. ஆலயங்கள் மீண்டும் பழைய மகிமையை அடையச் செய்யலாமென்னும் ஆசைக்கு இன்னமும் இடம் இருக்கிறது. இளம் பிராயத்தினர் மனது வைத்தால் அது நடந்துவிடும்.

வாலிபர்களே ! யுவதிகளே ! அகத்தூய்மையும் புறத்தூய்மையும் அடையுங்கள். பக்தியும் சக்தியும் பெறுங்கள். நமது மூதாதைகளின் பிதிரார்ஜித சொத்தை ஏற்றுக்கொள்ள முன் வாருங்கள். நமது முன்னோர்கள் இதையெல்லாம் நமக்காகவேதான் செய்து கொடுத்துவிட்டுப் போனர்கள். நம்முடைய தேகம், ஆத்மா எல்லாம் அவர்களிடமிருந்தே வந்தது என்பதை ஒருநாளும் மறவாதீர்கள்.

# 12

## காதலும் கலியாணமும்

எழுத ஆரம்பிக்கும்போது

“வழுக்கைத் தலை. இருக்கும் நாலைந்து மயிரும் வெளுப்பு. உமக்கென்ன தெரியும் காதலைப்பற்றி? தயவுசெய்து வேறு விஷயம் பேசும். பழைய அனுபவம் பேசப் போகிறீரா ? போதும், போதும், நிறுத்தும் ! காதல் என்ன கண்டீர் ? கர்னாடகப் பேர்வழியைக் கேட்டு நாம் கற்றுக் கொள்ளவா ?”

இவ்வாறெல்லாம் வாசகர்கள், அதிலும் பட்டணக்கரை வாலிபர்களும் யுவதிகளும் கேட்டுச் சிரிப்பது என் மனக் காதில் விழுகிறது. எவ்வாருயினும், இன்று விவாகம் காதல் இவ்விஷயங்களைக் குறித்து வியாசம் எழுதியனுப்பத் தீர்மானித்துவிட்டேன் நான். காதல் என்பது கடினமானவிஷயம். விவாகம் என்பதை வைத்துக்கொண்டு காதலைப்பற்றி இளைஞர்களுடன் கொஞ்சம் பேசலாம் என்று எனக்கு உத்தேசம்.

ஆராய்ந்து பார்த்தால், நம் நாட்டில் சரியான காதல் விளைவதற்குத்தக்க பூமியே இல்லை என்று ஒப்புக்கொள்ள வேண்டும். ஏனெனில், இந்நாளிலுங் கூட, தினசரி வாழ்க்கையில் ஆண் பெண்கள் தாராளமாய்க் கலந்து பழகுவது நமக்குள் கிடையாது. என்ன சமாதானம் சொன்னபோதிலும் இது உண்மையே. இது நல்லதா, கெடுதலா என்பது வேறு பிரசினை.

இரண்டாவதாக, நம்முடைய சமூகத்தில் பிறந்த பெண்களுக்கெல்லாம் விவாகம் செய்தே ஆகவேண்டும். காதல் என்னும் நிபந்தனை வைத்துக்கொண்டால் இது முடியாத காரியமாகும். இது பெண்ணைப் பெற்றவர்களுக்கு எளிதில் விளங்கும்.

மூன்றாவதாக, இது எல்லா நாடுகளுக்கும் பொது. காதல் என்பது இருபாலார் இடத்தும் இருக்கவேண்டிய மனநிலை. ஒருத்தி பேரில் ஒருவன் காதல் கொள்கிறான். அதற்கு ஏற்றாற்போல் அவளுக்கு அவன் பேரில் காதலுண்டாகவில்லை. காதலைத் தூண்டும் உருவமும், குணங்களும், செயல்களும் இருந்தால், இந்தப் பைத்தியக்காரப் போட்டி யுலகத்தில் அந்த ஒருத்தியையோ அல்லது ஒருவனையோ பல பேர் காதலிக்க முந்துகிறார்கள். இதற்கு என்ன செய்வது ? காமதேவன், நம்முடைய சௌகரியத்தை உத்தேசித்து, ஆண் பெண்களைத் தனித்தனி ஜோடிகளாகப் பிரித்துத் தன் பாணங்களைப் பிரயோகிப்பதில்லை. எல்லாரும், காதல் - மணந்தான் செய்யவேண்

டும் என்ற நியதியை ஏற்படுத்திக் கொண்டோமானல் பலபேர் விவாகமில்லாமலே இருக்க நேரும். ஆகை யால் காதலித்துத்தான் கலியாணம் செய்யவேண்டும் என்ற நிபந்தனை முடியாத காரியம் என்பதும் விளங்கும்.

*மின்னலும் மழையும்*

இதனால் காதல் என்பது ஒரு கனவு, வாழ்க்கை யில் நிறைவேற முடியாதது என்றல்ல: காதல் என் பது ஓர் உண்மையான வேகமே, சந்தேகமில்லை. சில சமயம் இரு பக்கமும் காதலுண்டாகி விவாகமும் முடிவு பெறுகிறது. சில சமயம் இரு பக்கமும் காதல் இல்லைதான். அதனாலேயே வாழ்க்கை காதலற்றுப் போகவேண்டியதில்லை.

விவாகம் செய்துகொண்ட தம்பதிகள் ஒருவரை யொருவர் மதிக்கவும், நேசிக்கவும், கூட்டாளிகளாக வாழ்க்கை நடத்தவும் பயிலவேண்டும். காதலில்லை, தாய் தகப்பனர் செய்வித்த மணம், இது உப்பில்லாச் சோறு, பிற நாடுகளில் எவ்வளவு காதல், கதைகளில் படிக்கிறோம், சினிமாவில் பார்க்கிறோம், அதுவல் லவோ உண்மையான வாழ்வு என்று ஏக்கமடைந்து ஏமாறவேண்டாம். அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. நம்முடைய நாட்டிலும் ஆண் பெண்கள் கூடி உயர் வும் நயமும் பொருந்திய வாழ்வு நடத்தலாம். மின்ன லைக் காண்கிறோம் ; அது உண்மையான வேகம், அழ கான காட்சி. ஆயினும், மின்னல் மின்னினல்தான்

மழை என்ற நியதி கிடையாது. மின்னல் தானாக உண்டாகும் ; உண்டானால் அழகுதான். ஆனால் மின்னல் இருப்பினும் இல்லையாயினும் மேகங்கள் கூடி மழை பெய்கின்றன அல்லவா, அப்படிப் பெய்வதால்தான் வாழ்வு.

### வியக்கத்தக்க தைரியம்

வாலிபனே, ஓர் இளம் பெண் உனக்கு மனைவியாக வீட்டுக்கு வந்திருக்கிறாளல்லவா, அதைப்பற்றி நீ எப்போதாவது ஆழ்ந்து சிந்தித்ததுண்டா ? சிறு வயதில் ஒரு பெண் தன் தாய் தகப்பனை விட்டு விட்டுப் புதிய ஒரு குடும்பத்திற்கு எவ்வளவு தைரியமாக வருகிறாள், எவ்வளவு சந்தோஷமாக வருகிறாள் ! அவள் எதை நம்பி, யாரை நம்பி, இவ்வளவு தைரியமும், சந்தோஷமும், முக மலர்ச்சியும் கொண்டிருக்கிறாள்? மணம் புரிந்த ஒவ்வொரு வாலிபனும் இதைத் தனக்குள் யோசித்து வியப்புற வேண்டும். இதைப் போன்ற தைரியத்தையும் திட புத்தியையும் ஆண்களில் யாராவது காட்டியிருக்கிறீர்களா ? காட்ட முடியுமா? மனைவியின் இந்த ஆத்ம சக்தியையும் தைரியத்தையும் கண்டுவிட்டால், அவள்பால் தான் செய்ய வேண்டிய கடமையை ஒவ்வொரு வாலிபனும் உணரவே செய்வான். தன் உடலின்பத்திற்காக அடைந்த ஒரு கருவியாக அவளை நினைக்கமாட்டான். தனக்குக் கிடைத்த அரிய பெரிய நட்புச் செல்வம் என்று அறிந்து நடந்துகொள்வான். தன்னை நேசிக்கும் ஆடவனை ஒரு சிநேகிதனிடம் நடந்துகொள்வதுபோல்

கவனிப்பும், மதிப்பும், சிரத்தையும் காட்டி மனைவியிடம் நடந்துகொள்வான். தான் இட்டது சட்டம் என்று நினைக்கமாட்டான். தான் எஜமானன், அவள் ஊழியம் செய்பவள் என்று எண்ணமாட்டான்.

### தோழமைப் பயிற்சி

கேவலம், உடலின்பத்தையே லட்சியமாக எண்ணக்கூடாது. இதை அனைவரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள்; ஆனால், மறந்துவிடுகிறார்கள். பிரகிருதியில் அமைந்திருக்கும் இந்த உடல் மகிழ்ச்சியைத் தம்பதிகள் ஜாக்கிரதையாக ஆண்டு, அது தமக்குள் நட்பை வளர்க்கக் கடவுளால் படைக்கப்பட்ட ஓர் அருமையான கருவி என்று நினைவில் வைத்து நடந்துகொள்ளவேண்டும். உடலின்பத்தைத் தாழ்வென்றும் பாவமென்றும் கருதவேண்டாம். ஆனால், சேர்ந்து வாழ்வதன் பயனே அதுதான் என்று கருதல்கூடாது. அது நட்பைவளர்த்து ஒற்றுமையைப் பூரணமாக்குவதற்குரிய ஓர் அற்புதமான பிரகிருதி சக்தி. அறிவுடையாருக்கும் அல்லாதாருக்கும் உதவும் ஒரு மேன்மையான கருவி அது. சாதனம் என்பதை மறந்து அதுவே இன்பம் என்று எண்ணிவிடக்கூடாது. அவ்வாறு ஏமாந்தால் வாழ்க்கை முழுதும் பயனற்றுப்போய்த் துன்பமாகவே முடியும்.

எவ்வளவோ காலத்திற்கு முன் நமது திருவள்ளுவர், மனைவிக்கு 'வாழ்க்கைத் துணை' என்ற அருமையாகப் பெயரிட்டார். அப்பெயரின் முழுப்பொருள் தம்பதிகளின் வாழ்க்கையில் மலர்ந்து மணம் வீசச் செய்ய வேண்டும். புருஷனும் மனைவியும் தோழமை பயில

வேண்டும். எவ்விஷயத்தையும் இருவரும் கலந்து பேசி முடிக்கவேண்டும். வீட்டு விஷயங்களில் மனைவியின் இஷ்டப்படி விட்டுவிடுதல், உலக விவகாரங்களில் புருஷன் இஷ்டப்படி நடத்தல் என்று பங்குபோட்டுக் கொண்டு வாழ்க்கை நடத்தல் கூடாது. கலந்து பேசிச் செய்வதில் பயிலப் பயிலக் கஷ்டம் தோன்றாது. இருவருடைய அறிவும் உணர்ச்சியும் சக்தியும் விசாலமடைந்து அன்பும் சுகமும் உண்டாகும். பலவிதப் பள்ளிக்கூடப் படிப்புக்களைக் காட்டிலும் இவ்வித வாழ்க்கைப் பயிற்சியில்தான் அதிகப் பயன்.

### காதல் ஒரு ஜுரமன்று : விவாகம் ஒரு மருந்தன்று

காதல்கொண்டு கூடிய தம்பதிகளானால் மிகவும் சிரேஷ்டம். அதுபோக, கடவுள் படைத்த இருவர், 'நாம் சேர்ந்து அன்புடன் இல்லற வாழ்க்கை நடத்துவோம்' என்று காதலின் வேகமின்றிச் சாதாரணமாய்க் கூடினவர்களானாலும் சரி, அவ்வாறு வாழ்ந்து உலகத்தில் அன்பென்னும் செல்வத்தைப் பெருக்கலாம். காதல் என்பது ஒரு ஜுரமாகவும், விவாகம் என்பது அதற்கு ஒரு மருந்தாகவும் எண்ணக்கூடாது. அவ்வாறு கொண்டால், விவாகம் முடிந்ததும் ஜுரம் தணிந்துபோகும். மருந்தும் ஜுரமும் கணக்குத் தீர்ந்துபோகும். காதல் என்பது ஒரு ஜுரமன்று. பூவின் மணம்போல் அது ஓர் இயற்கை சக்தி, ஆறாத சக்தி. சில சமயம் அது தானாகப் பொங்கும். இல்லாவிட்டால் மின்சார சக்தியைப்போல் நாம் உண்டாக்கி வளர்த்துக்கொள்ளலாம்.

## காதலும் கலியாணமும்

காதல் என்பதும் மற்றப் பிரகிருதி சக்திகளைப் போல் ஆண்டவனுடைய சொரூபமேயாகும். அதை எந்தக் கோயிலிலும் ஆராதித்துத் தரிசிக்கலாம். ஆனால் பக்தி வேண்டும்; சிரத்தை வேண்டும். பக்தி இருந்தால் எந்தக் கோயிலிலும் ஈசுவரன் இருக்கிறான்: உன் மனைவி, உனக்கென்று கட்டப்பட்ட காதல் தெய்வத்தின் கோயிலாவாள். நோன்பிருந்து வந்தித்தாயானால், காதல் என்னும் பராசக்தியின் அவதாரத்தை அக்கோயிலில் தரிசிப்பாய். இல்லையானால், கல்லைத்தான் காண்பாய். அது கல்லின் குற்றமல்ல; உன் குற்றமே.

### காதலும் காத்தலும்

காதலை முதலிலே காண்பது பெரிதல்ல; கண்டோம் என்று நினைத்தவையெல்லாம் உண்மைக் காதலல்ல. தேகத்திலுள்ள பூதத் தொகுதிகள் தங்கள் அன்னகோச வேகத்தையெல்லாம் உயர்ந்த காதலாகக் காட்டிக்கொள்ளும். பகுத்தறிவுடன் பொய்யைத் தள்ளி, உண்மைக் காதலை ஒருவன் கண்டறிந்தாலும், விரும்பினவளிடம் அதற்கொத்த காதல் உண்டாகாமலிருப்பதையும் காண்கிறோம். இருபக்கமும் இயல்பாகவும் பலாத்காரமற்றதாகவும் காதல் உண்டானாலல்லவோ அது வாழ்வைத் தாங்கும் மேடையாகும்? இந்தப் பெரும்பேறு அனைவரும் பெறுதலரிது. ஆனால், தன்பாய்ச்சல் இல்லாத வயல்களையெல்லாம் தண்ணீர் பாயவில்லை என்று விட்டுவிட முடியுமா? கிணறு வெட்டியோ, வானத்தை வேண்டியோ சாகுபடி செய்கிறோம். இவ்வாறு பயிர்செய்து, இனிய காய் கனி

கிழங்குகளும், மணமும் அழகுங்கொண்ட பூக்களும் உண்டாக்கலாம். ஆனால் சோம்பலின்றி மனத்தைச் செலுத்திப் பக்தியுடன் பயிர்செய்யவேண்டும். உண்மைக் காதல் ஏற்படுதல் அரிதுதான்; கண்டாலும் அதற்கு இணையாகப் பிரதிகாதல் பெறுவது அதனிலும் அரிது. இரண்டும் பெற்றாலும் அக்காதலைக் காப்பது எல்லாவற்றிலும் அரிது. ஏற்பட்ட காதலைக் காத்தலும், அதுபோகச் சர்வ வியாபகமாய் மறைந்து கிடக்கும் அவ்யக்த காதற் செல்வத்தை வெளிப்படுத்தி வளர்த்து வாழ்க்கைத் துணையாக மனைவியை ஆக்கிக்கொள்ளப் பயில்வதுமே இளைஞனுடைய தர்மம். இதற்குப் பகவானுடைய அருள் வேண்டும்; நாமும் பாடுபடவேண்டும்.

காதல் என்பது சாதல். நான் என்பது சாகவேண்டும். ‘காதல் இன்றேல் சாதல்’ என்று பாரதியாருடைய குயில் பாடிற்று. ஆனால், சாதல் இல்லையேல் காதல் இல்லை என்பது மந்திரம்.

ஏற்றிய விளக்கைக் காக்கவேண்டும்

விவாகத்துடன் காரியம் முடிந்தது என்று எண்ணுவது அறியாமையாகும்.

காதல் மணமாயினும் சரி, சம்பிரதாய மணமாயினும் சரி, யுத்தம் பின்னால்தான். அதில் வென்றாலொழிய வெற்றியில்லை, சுகமுமில்லை.

மணஞ் செய்த பின்தான் குருக்ஷேத்திரம். வாழ்க்கை முழுதும் ஒரு யுத்தகளம். மனத் தூய்மைக்

குப் பல சோதனைகள் நேரிடும். தெருவிலும், வண்டி களிலும், பலர் கூடி விருந்து கொள்ளும்போதும் காத லுக்குத்தக்க உயர்ந்த பாத்திரங்கள்போல் முகங்களும் குணங்களும் பல தோன்றும். கொண்ட மனைவியைத் தாழ்த்தும் பல எண்ணங்களும் தோன்றும். அவை களைக் கவசம் பூண்டு எதிர்த்து வெல்லவேண்டும்.

உண்மையில், பூதத் தொகுதிகள் அனைத்தும் ஒன்று. அதில் ஆண்குலம் முழுதும் ஒன்று ; பெண் குலம் முழுதும் ஒன்று. இரண்டும் அத்வைதமாக ஒன்றுகூட இடைவிடாமல் பொங்குகிறது. அதுவே காதல் சக்தி. ஆனால் இந்தச் சக்திக்கு வரம்பு மீறி இடம் கொடுத்தோமானால் அனைத்தும் ஒன்றாக வெந்து சாம்பலாகிவிடும். அவ்வளவு நெருப்பைத் தாங்கமுடியாத நமக்குத் தனி அடுப்பும் தனி விளக்குந் தான் வாழ்க்கை. ஆகையால் அடுப்பை மூட்டி, விளக்கை ஏற்றி, அதைக் காத்து வாழ்வோமாக !

தேனீயின் காதல்

காதலின் பூரண விளக்கத்தைத் தேனீக்களின் வாழ்க்கையில் காணலாம். தேனீக்களின் வாழ்க்கை யில் பல அற்புதங்கள் ; அவைகளில் பேராச்சரி யத்தைத் தருவது, அவற்றின் காதல்முறைதான். தனி உயிர் என்ன பயனுக்கென்பதும், காதல் என்ற பிர கிருதி மகிழ்ச்சி என்ன பயனுக்கென்பதும், இந்தச் சிறு பிராணிகள் அறிந்திருப்பதாகவே தோன்று கிறது. பருவமடைந்தவுடன் பெண் ஈ கூண்டைவிட்டு வெளியே பறக்கும். பின்னே ஆண் ஈக்கள் தொடர்ந்து

செல்லும். பறந்து பறந்து சென்ற ஒன்றின் காதலைக் குமரி ஒப்புக்கொள்ளும். இந்தக் காதலுக்கு ஆண் ஈ கொடுக்கும் விலை என்னவென்று எண்ணுகிறீர்கள்? தன் உயிரையே காதலிக்குத் தத்தம் செய்துவிடுகிறது! ஆணும் பெண்ணும் கலந்து மகிழ்ந்ததும் மணவாள னுடைய உயிரையே பெண் ஈ கவர்ந்து தன் வயிற்றுக் குள் அடக்கிக்கொண்டு போய்விடுகிறது. பெண் ஈ கூண்டுக்குத் திரும்பிப் போய்த் தன் ஆயுள் முழுதும் முட்டைகள் இடும். ஆயுளுக்கு ஒரே ஒரு தடவை தான் தேனீக்குக் காதலும் சேர்க்கையும்! அந்த ஒரு சேர்க்கையின் பயனாக ஆண் ஈ இறந்து போகிறது. பெண் ஈக்கு மறுபடி எந்த ஆணுடனும் சேர்க்கை கிடையாது. ஆயிரக் கணக்கான முட்டைகளிட்டுத் தன் குலத்தின் நலனுக்கு வேண்டியவாறு இஷ்டம் போல், ஆண்களையோ, பெண்களையோ அல்லது இரண்டுமில்லாத சுத்த கன்னித் தொண்டர் கூட்டத் தையோ உண்டாக்கிக்கொள்ளும்.

காதல், இறப்பு, பிறப்பு என்பவற்றின் பொரு ளும் பயனும் பரஸ்பர சம்பந்தமும் இந்தத் தேனீக்க ளின் வாழ்க்கைச் சரித்திரத்தினால் ஒருவாறு நாம் அறியக்கூடும். காதல் என்பது இன வளர்ச்சியைத் தூண்டும் பிரகிருதி சக்தியின் உருவம். அது உயி ருள்ள உலகம் முழுதும் பரந்து கிடக்கிறது. உயிரற்ற தென்று நாம் எண்ணும் ஜட அணுக்களுங்கூடக் காதல் வேகத்துடன் மணந்துதான், பிரகிருதி நடை பெறுகிறது. இறப்பென்பது துக்கமோ நாசமோ துய ரப்படவேண்டிய விஷயமோ அன்று. இறப்பு என்பது

பிறப்பே. ஓர் ஆண் ஈயின் உயிர் பல்லாயிரம் ஈ சமூகத்திற்கு உயிர் தந்து அவற்றிலேயே மறைந்து விடுகிறது. அதைத்தான் இறப்பென்கிறோம். பரிபூரணத் தியாகத்திற்குச் சித்தமா யில்லாதவர்கள் மண வாழ்க்கையில் பூரண இன்பம் காண மாட்டார்கள்.

### விவாகமும் விவேகமும்

இந்த ஆகாயச்சித்திரம் இருக்கட்டும். நடைமுறையில் பயனுள்ள விஷயம் ஏதும் இல்லையா, எவ்வளவோ சிக்கலான கேள்விகள் கிடக்க வெறும் மனச் சஞ்சாரம் பண்ணுகிறீரே என்று வாசகர்கள் நினைக்கலாம். பயனற்ற சித்திரப் பேச்சுகள் நான் பேசவில்லை. வாழ்க்கையில் எந்த விஷயத்தை எடுத்துக் கொண்டாலும் பல கேள்விகள் எழுகின்றன. அவற்றிற்கு அந்தந்த சந்தர்ப்பத்தையொட்டித் தனித்தனிப் பதில் சொல்லவேண்டியதே தவிர, ஒரே பதிலாய்ச் சொல்லுவது பயனற்றது. உதாரணம்: எந்த வயதில் விவாகம் செய்ய வேண்டியது? இதற்கு விடையாக எந்த வயதைக்குறிப்பிட்டாலும், சில குடும்பங்களுக்கு, சில பேர்வழிகளுக்கு அது சரியானதாகாது. ஒரு விவாகத்திற்கு யார் சம்மதம் வேண்டும்? தாயா, தகப்பனா, பந்துக்களா, சமூகமா, அல்லது பெண்ணா, யார் சம்மதத்தால் முடிக்க வேண்டும்? இதுவும் ஒரு விடைக்குள் அடங்காத விஷயம். ஒரு நிலைமையைப்போல் மற்றொரு நிலைமையிராது; சாதிக் கலப்பு மணம் செய்யலாமா, கூடாதா? சில சந்தர்ப்பங்களில் செய்யவேண்டியது, வேறு சில சமயங்களில் கூடாது. அடிப்படை

யான தத்துவத்தை அறிந்து இல்லற வாழ்க்கையின் பொருளும் பயனும் சரியாக உணர்ந்தோமானால், கிளம்பும் பல கேள்விகளுக்கு விடைகள் தாமாகவே வரும். இதுதான் சரியான முறை. இப்படிச் செய், அப்படிச் செய் என்று பல புத்திமதிகள் சொல்லப் புகுந்தால் ஒவ்வொன்றுக்கும் பல ஆக்ஷேபணைகள் கிளம்பும். எதையும் எதிர்ப்பதே கல்வி கற்ற மனிதனது மூளையின் சுபாவம். தாமாக யோசித்துத் தனி விஷயங்களைத் தீர்த்துக்கொள்ள விட்டுவிடுவதுதான் நலம். ஆயினும், இவ்வளவு தூரம் சொல்லிய பிறகு, சில கேள்விகளுக்காவது என் அபிப்பிராயத்தை எழுத வேண்டுமென்று எண்ணுகிறேன்.

கலப்பு மணம்

வயதுவந்த இருவர் தீவிர உணர்ச்சியுடன் புருஷன் மனைவியாக வாழவேண்டுமென்று ஆசைப்பட்டால், பெற்றோர்களே! 'குலம்' 'பணம்' 'வழக்கம்' முதலிய காரணங்களைக்கொண்டு தடை செய்யாதீர்கள். உண்மைக் காதலைத் தடுத்தால் மனநிலை தேகாரோக்கியம் இரண்டும் கெட்டுவிடும். பெற்றோர்களாகிய நீங்கள் விரும்புவது, உங்கள் மக்களின் சந்தோஷம். அதை உத்தேசித்தால் காதலைத் தடுக்கக் கூடாது. உங்கள் கடமை என்னவென்றால், கஷ்டங்களையும், தடைகளையும் சரியாய் எடுத்துக் காட்டுவதும், அவர்கள் உணர்ச்சியைச் சோதித்துப்பார்ப்பதும், அவர்கள் புத்தியை விசாலப்படுத்துவதுமேயாகும். இவ்வெல்லாப் பரீக்ஷையிலும் தேர்ந்தார்களானால், அதன்

மேல் அவர்களுக்கே விட்டுவிடுங்கள். தெய்வம் உண்டு; மக்களின் க்ஷேமத்திற்கு நீங்களே சாசுவத காவல் என்று எண்ணுதீர்கள்.

தவிர, நன்றாய்ப் பழகித் தெரிந்து இரு பக்கத்தி லும் சம்மதம் கண்டு, வெவ்வேறு சாதிப் பிரிவைச் சேர்ந்தவர்கள் மணம் புரிவது நாட்டிற்கு நன்மையே பயக்கும். ஏற்றத் தாழ்வு புகுத்தாத தொழில் வரம்பு களை நான் ஆட்சேபிக்கவில்லை. சிறு வயதிலேயே பழ கிக் கற்கவேண்டிய தொழில் வரம்புகளுக்குச் சம்பந் தப்படாத சாதிப் பிரிவினைகளை ஒழிப்பது அத்தியாவசி யம். சமய வேறுபாடுகளை உத்தேசித்தும் சில பிரிவுகள் உண்டாயின. அச்சமய வேறுபாடுகள் முற்றிலும் மறந்து போய், வெறும் உடுப்புகள், ஆசாரங்கள், முகத்திலிடும் குறிகள் முதலியனமட்டும் வேறுபட்டு, வீண் பிரிவினைகளும் சமூகத் துவேஷங்களும் எஞ்சி நிற்கின்றன. இவற்றையெல்லாம் ஒழிப்பதற்கு, விவா கத் தடைகளை வர வர ஒழிக்கவேண்டும். சாதியை ஒட்டிநிற்கும் பிரத்தியேக உணர்ச்சி போகவேண்டும். 'நம்மவர் நம்மவர்' என்கிற மோகம் தீரவேண்டும். இல்லாவிடில் பாரத சாதிக்கு விடுதலையில்லை.

### நிதானித்து நடக்க

வாலிபர்களே! வழக்கம், சமூக வாழ்க்கை என் பனவெல்லாம் பொய்யல்ல; லேசாகத் தள்ளிவிடக் கூடிய விஷயங்களல்ல. தலைமுறை தலைமுறையாகத் தோன்றிய மனோபாவங்கள், பேசிவந்த மொழிகள்,

வழங்கிவந்த வழக்கங்கள், செய்துவந்த காரியங்கள், இவற்றின் திரண்ட உருவந்தான் நாம். காதல்வேகத்தினுல் இதை நாம் மறந்துவிடக்கூடாது. மறந்தோமானுல் அபாயம். பம்பரம் சுழலும் வரையில் நின்று கொண்டிருக்கும்; சுழல்வது நின்றதும், பழையபடி தலைகீழாக விழுந்து தரையில் உருளும். ஆகையால், குலத்தையும் மதத்தையும் பாஷையையும் பழக்க வழக்கங்களையும் விட்டு வெகுதூரம் ஓடி அலையாதீர்கள். அதனுல் துயரங்கள் விளையும்; உண்மைச் சுகம் கிடையாமற் போய்விடும்.

ஒவ்வொரு வேகத்தையும் உண்மையான காதல் வேகம் என்று மோகங் கொள்ளாதீர்கள். உண்மையான காதல்வேகம் திடீர் என்று தோன்ருது. அப்படித் தோன்றுவது, கேவலம் உடல் வேகம்தான். உள்ளத்தில் உண்டாகும் உடலுணர்ச்சியெல்லாம் யாரோ எழுதிய கதைப் புத்தகங்களில் படித்த 'காதல்' என்று எண்ணுதீர்கள். அடக்கிப் பார்த்து, மறந்து பார்த்து, மாற்றிப் பார்த்து, பிறகுதான் தீர்மானிக்கவேண்டும்.

காதலுக்கு ஒத்த பிரதிகாதல் பெருத வேகத்தை உடனே அடக்கி மறந்துவிடவேண்டும். வழக்கத்திற்கு மாருன மணங்கள், வாழ்க்கையில் நற்பயன் பெற வேண்டுமானுல், இரு பக்கத்திலும் ஒத்த காதல் வேகம் மிகவும் அவசியம். வெறும் ' சம்மதம் ' போதாது. இரண்டு உயிர்களும் ஒன்றிக் கலந்தாலொழிய உண்மையான காதல் - மணம் ஆகாது. நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து சம்பவங்களில் உண்டா

கும் வேகம் உண்மையான காதல் அல்ல; நிலையில்லாத பிரமைதான். அதன் தூண்டுதலைவிட, நிதான யோசனையும், பெரியோர் சொல்லும், விவேகமுமே மேலானவை.

எச்சரிக்கை

சாதிக்குள் அடங்கிய மணமானாலும், கலப்பு மணமானாலும், நன்கு தெரிந்த குலம், குடும்பம் இவற்றில் இருவர் மனமொத்து மணம் செய்துகொண்டால் தான் சந்தோஷமாக இல்வாழ்க்கையை நடத்த முடியும். முன்பின் நன்றாக அறியாத இடங்களில் தோன்றும் உருவத்தின் அழகும், அறிவின் பிரகாசமும், உணர்ச்சி வேகங்களும் பிந்தி மாறிவிடும். இது பல பேருடைய அனுபவம்.

உலகத்தின் சீர்திருத்தத்திற்கென்றாவது பாரதசாதியின் முன்னேற்றத்திற்கென்றாவது, மணம் செய்ய யோசிப்பதோ அல்லது செய்யப்போவதை நிராகரிப்பதோ; நன்மை தராது. விவாகம் என்பது, தனியொருவனையும் ஒருத்தியையுமே அதிகமாகப் பொருத்தது. சமூகத்தின் நன்மைக்காக நாம் மணம் புரிவோமென்பது வீணான ஆகாயக்கோட்டை.

வயதும் சம்மதமும்

நம்முடைய நாட்டில் ஆணுக்கு இருபத்திரண்டு முதல் முப்பது வயதுக்குள்ளும், பெண்ணுக்குப் பதினெட்டு முதல் இருபத்தைந்துக்குள்ளும் இள வயதிலேயே விவாகம் முடித்தல் நலம் என்பது என்

அபிப்பிராயம். இதில் பிற நாடுகளை நாம் பின்பற்ற வேண்டியதில்லை. மேற்குறித்த வயதில் இருபாலாருக்கும் சுதந்திர புத்தியிருக்கும்; பதினெட்டு வயதுக்கு முந்திய பெண்குழந்தைகளுக்கு விவாகம் முடிப்பது, அவர்களது தேக ஆரோக்கியத்தை என்றென்றைக்கும் கெடுப்பதாகும். வழக்கம் என்று சொல்லி, பெற்ற குழந்தைகளைப் பலி கொடுக்காதீர்கள்.

தாய் தகப்பன்மார் ஆலோசனை வெகு முக்கியமானது. ஆனால் இன்றியமையாதது, வதூவரர்களுடைய சம்மதம். காதல் உற்சாகம் வேறு; சம்மதம் வேறு. காதல் உற்சாகம் இல்லையாயின், தாய் தகப்பன்மார்களின் யோசனை தான் மிகவும் அவசியம். பெற்றோர்கள் எடுத்த ஓர் உத்தேசத்திற்குப் பெண்ணின் சம்மதமோ அல்லது மகனுடைய சம்மதமோ இல்லையாயின், அந்த உத்தேசத்தை விட்டுவிடுவது நலம். பலாத்காரம் உபயோகித்தலும் கூடாது; அதற்கு உடன்படுதலும் கூடாது.

சாஸ்திரம்

நம்மைப்போல் பழைய வழக்கங்களையும் சாஸ்திரங்களையும் கௌரவிப்பவர்கள் உலகத்தில் வேறு யாருமில்லை. இது மிகவும் சரியே. ஆனால் உண்மையில் நம்முடைய சாஸ்திரங்கள் நமக்குக் கொடுக்கும் சுதந்திரத்தைப்போல் வேறு எந்த மதமும் கொடுக்கவில்லை. இதற்குப் பிரமாணம் மகாபாரதம் ஒன்று போதும். அதில் நடந்த திரௌபதி விவாகத்தை எடுத்துக்

கொள்ளுங்கள். அக்காலத்தில் அனைவரும் அந்த விவாகத்தை மிகவும் தவறென்று கருதினார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆயினும் பெரியோர்கள்கூடி, சந்தர்ப்பத்தை உத்தேசித்துத் தீர்ப்புச் சொன்னார்கள். ஆகாத காரியம் என்று முதலில் தோன்றியதைத் தருமத்திற்கு இயைந்தது என்று எவ்வளவு தைரியமாக முடிவு கூறினார்கள்! விவாகத்திற்குச் செய்யும் சடங்குகளையே மாற்றி ஒரு கன்னிகைக்கும் ஐந்து புருஷர்களுக்கும் அமைய முடித்துவிட்டார்கள். புராணங்களில் இதைப்போல் பல சம்பவங்களைக் காணலாம். சந்தர்ப்பத்தையொட்டியும் காலத்தின் மாறுதல்களைக் கருதியும், விதிகளை மாற்றவும் வழக்கங்களைப் புறக்கணிக்கவும் பூரண சுதந்திரம் நம்முடைய சாஸ்திரங்களில் கொடுத்திருக்கிறது. அனேக துறைகளில் நாம் சர்வ சாதாரணமாய் இந்தச் சுதந்திரத்தை உபயோகித்து வருகிறோம். எல்லாத் தருமங்களுக்கும் மேலான சக்தி கொண்டது தூய்மையான காதல். அதைத் தடுத்தும், எதிர்த்தும் இல்லறம் நடத்துவது தருமமாகாது.

செல்வ நிலை

தரித்திரம், பணக்கஷ்டம் இவற்றை அதிகமாய்ப் பொருட்படுத்தல்கூடாது. வறுமைப் பிசாசைக் கண்டு பயப்பட வேண்டாம். தனித் தனியாகப் படும் கஷ்டத்தை, அன்புடன் கூடி வாழும் இருவர் ஒன்று சேர்ந்து சமாளித்தல் எளிதாகும். இருவரும் பங்கு போட்டுக்கொண்டு சிரித்துவிட்டால் எல்லாக் கஷ்டங்களும் கரைந்துபோகும். காதலின் அழகு வறுமையில்

அதிகமாகவே பிரகாசிக்கும். தைரியமும் உண்மையான உள்ளக் கலப்பும் இருந்தால் வறுமையைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை.

முடிவுரை

நான் சொன்ன பேச்சுக்களை மேலெழுந்த வாரியாகப் படித்தால் சிலவிடங்களில் ஒன்றுக்கொன்று முரண்படுவதாகத் தோன்றும். உண்மையில் அவ்வாறில்லை. ஒரு முக்கியமான விஷயத்தின் எல்லா அம்சங்களையும் யோசித்துப் பல சந்தர்ப்பங்களுக்கும் பொருந்தும்படி முடிவு காணவேண்டுமானுல் இப்படித்தான் சொல்லக்கூடும்: யுவர்களும், யுவதிகளும், பெற்றோர்களும், வைதிகப் பற்றுள்ளவர்களும், சீர்திருத்தக்காரர்களும், நான் வெளியிட்டிருக்கும் கருத்துக்களை ஆழ்ந்து சிந்திக்கவேண்டுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

# 13

## வசன நடை

தமிழ் வசன நடையைப்பற்றிப் பலர் ஆராய்ந்தும் வாது செய்தும் வருகிறார்கள். தமிழன்பர்கள் தற்கால ஆங்கிலப் புத்தகங்களைப் படிக்கும்போது, "ஐயோ, இத்தகைய அழுத்தமும் புதுமையும் பொருந்திய எழுத்து நம்முடைய தமிழில் யாரும் எழுதமாட்டேன் என்கிறார்களே!" என்று வருந்தப்படுகிறார்கள்.

வசன நடை எப்படிப் பொருந்தியிருக்கவேண்டும்? எவ்வித மொழிகள் உபயோகப்படுத்த வேண்டும்? என்ன இலக்கணம் கொண்டதாக இருக்கவேண்டும்? இந்தக் கேள்விகளுக்கு ஒரு சாரார், பேசும் பேச்சாகவே எழுதவேண்டும், அதுதான் வசனத்திற்கு உரிய நடை என்கிறார்கள். வேறு சிலர், முக்கியமாகப் பண்டிதர்கள், "அப்படி எழுதினால் அது இலக்கியமாகுமா? ஆழ்ந்த கருத்துக்களுக்கும் பேசும் பேச்சுக்கும் வெகு தூரமாயிற்றே? பேசுவதுபோல் எழுதுவதென்றால், அதில் நடை வித்தியாசங்களுக்கே இடமில்

லாமல் போகுமே? எல்லாப் பாஷைகளிலுமே பேச்சு வேறு, எழுத்து வேறு; மற்றப் பாஷைகளில் எவ்வாறிருந்தாலும், கட்டாயம் தமிழில் எழுத்து வேறு, பேச்சு வேறு" என்று சொல்லுகிறார்கள்.

இவ்விஷயத்தில், நான் பேச்சு நடைக் கட்சியைச் சேர்ந்தவன். பேச்சைப் பின்பற்றினால்தான் வசன நடையானது அழகும் ரஸமும் வலிவும் வாடாப் புதுமையும் கொண்டு விளங்கும். அவ்வாறில்லாமல் இலக்கியத்திற்கென்று தனியாக அமைக்கப்பட்ட மொழிகளைத் தொடுத்து எழுதினால், அதில் உயிர் இராது. கூழாங்கற்களை மண்ணெண்ணெய் டப்பாவில்போட்டு ஆட்டினவாறுதான் என்று சொல்லலாம். மக்கள் பேசும் பேச்சு, மாட்டின் கழுத்தில் கட்டிய மணி ஓசை போல், எவ்வாறு கூடிக் கலந்தாலும் காதுக்கு இனிமையும் மனதுக்கு மகிழ்ச்சியும் தரும். உயிர் கொண்ட மனிதர்களுக்கு ஏற்படும் சுகம் துக்கம் மகிழ்ச்சி கவலை கோபம் பொறுமை இவைகளுக்கிடையில் தாமாகக் கிளம்பும் மொழிகளில்தான் ரஸம், வளைவு, வண்ணம், வடிவம், அழகு, சக்தி எல்லாம் கொண்ட நடைபேதங்கள் கிடக்கும். அந்தப் பேச்சு நடைகளைச் சரியாகப் பிடித்துத் தாங்கள் எழுதும் எழுத்தில் பதியச் செய்வதே எழுத்தாளர்களின் சாமர்த்தியம்.

'வசனம்', 'உரை நடை' என்ற மொழிகளிலேயே பேச்சு என்பது கண்டிருக்கிறது. எந்த விஷயத்தை யாவது அதைப் பேசத் தகுந்தவர்கள் எவ்வாறு தங்க

ளுக்குள் பேசுவார்களோ, அதுவே நல்ல வசன நடையாகும். எல்லா விஷயங்களையும் எல்லாரும் பேச மாட்டார்கள். பேசுகிறவர்களும் சந்தர்ப்பத்துக்குத் தக்கவாறுதான் பேசுவார்கள். எல்லாரும் எப்போதுமே ஒரே மாதிரியாகப் பேசமாட்டார்கள். இதுவே உரைநடை பேதங்களுக்கு மூலாதாரம். நூல்களின் அரும்பத அகராதியிலில்லை.

பள்ளிக்கூடங்களிலுங்கூட, குழந்தைகளை வியாசங்கள் எழுதிப் பயிலச் செய்வதற்குப் பதில் வாயால் விஷயங்களை எடுத்துப் பேசச் செய்வதே நல்ல பயன் தரும் என்றும், ஒரு குழந்தையை மற்றக் குழந்தைகளுக்கு நன்ருய்ப் புரியுமாறு கதையோ சரித்திரமோ விஷயமோ சொல்லச் செய்வதே எழுத்து நடை கற்பிப்பதற்கு நல்ல வழி என்றும் மேலைநாட்டுப் போதனு முறை ஆராய்ச்சிக்காரர்கள் இப்போது எழுதி வருகிருர்கள்.

*    *    *    *

பேசுவதுபோலவே எழுதிவிடலாமா என்ற கேள்வி தமிழில்தான் இவ்வளவு சந்தேகத்திற்கு இடம் கொடுக்கிறது. பிற பாஷைகளில் இதைப் போன்ற சந்தேகமே கிளம்பாது. இதற்குக் காரணம் அந்தப் பாஷைகளில் பேச்சு கெட்டுப் போகவில்லை; தமிழில் அது கெட்டுப் போயிருக்கிறது. தமிழ்நாட்டில் எழுதப் படிக்கக் கற்றவர்கள் பேசும் பேச்சு சரியான நிலையிலில்லை. ஆகையினுல்தான் பேச்சுக்கும் இலக்கியத்திற்கும் உள்ள இணைப்பே மறைந்துபோய்ப்

பண்டிதர்களுக்குள் விவாதம் உண்டாக இடம் ஏற்பட்டது.

தமிழில் பேச்சு கெட்டுப் போயிருப்பது மூன்று விதத்தில். ஒன்று, கொச்சைப் பதங்களுக்கு அளவுக்கு மிஞ்சி இடம் கொடுத்து வருவது; இரண்டாவது, ஆங்கில மொழிகளைத் தயக்கமின்றி எல்லாக் காரியங்களுக்கும் எல்லாச் சமயங்களிலும் கலந்து பேசும் வழக்கம்; மூன்ருவது, பேசும்பொழுது கையையும் தலையையும் ஆட்டி, பேச்சுக்குப் பதிலாக உடலை உபயோகித்துச் சம்பாஷணை நடத்தும் வழக்கம்.

இவை மூன்றும் பேச்சை அவலக்ஷணமாகச் செய்வதை எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். ஆனல், அது நம்முடைய இலக்கிய வளர்ச்சியைத் தடுத்துவரும் ரகசியத்தை அனைவரும் காணமாட்டார்கள். இரண்டாவதாகச் சொன்ன காரணம் மிகவும் முக்கியமான விஷயம். பல வேறு விஷயங்களை அறிந்தும் ஆராய்ந்தும் வரும் தமிழர், தாங்கள் சாதாரணமாகப் பேசும் போது முழுதும் தமிழ் மொழிகளாகவே பேசினல் தமிழுக்கு வளர்ச்சி ஏற்படும். விஷயங்களைப் பேசும் போது தமிழ்மொழி தெரியாத இடத்திலும், மறந்து போன இடத்திலும், புதுத் துறைகளில் ஆராய்ச்சி செய்யும் போதும், வாதப் பிரதிவாதம் செய்யும் போதும், அறிவையும் நினைவையும் செலவழித்துத் தமிழ் மொழிகளைத் தேடி உபயோகிப்பதற்குப் பதில், எளிதில் கிடைக்கக்கூடிய ஆங்கில மொழிகளை, அதாவது பிறதேசத்தார் கஷ்டப்பட்டுத் தங்களுக்கென்று

உண்டாக்கியிருக்கும் மொழிகளை, எவ்விதக் கூச்சமு மின்றி இடை இடையே கலந்து பேச்சை நடத்திவிட்டு, தமிழுக்குச் சோறுபோடாமல் கொல்லுகிறோம். சோம்பேறிகளைப் பெற்ற தாயைப்போல் தமிழ் அவதிப்பட்டு வருகிறது. அன்னம் ஊட்டாத தேகம் எப்படி வளரும்? நுட்பமான பொருட்பேதங்களும் அவைகளுக்குத் தகுந்த மொழிகளும் நடையும் ஒரு பாஷையில் எவ்வாறு தோன்றும்? தோன்றியவை எவ்வாறு உயிருடன் நிற்கும்? பொருளைப் புகுத்திப் பேசிப் பழகி வந்தால்தானே பாஷை வளம் பெறும்? கிடைத்த புல்லையும் தவிட்டையும் ஆங்கில மாட்டுக்கே போட்டு வந்தால் நம்முடைய பசு எவ்வாறு பால் கொடுக்கும்? கொஞ்சம் தடை தோன்றிய இடங்களிலெல்லாம் ஆங்கிலத்தைப் போட்டு நிரவிப் பேச்சை ஓட்டிக்கொண்டு போனால், தமிழ் எங்ஙனம் வளரும்? அறிஞர்களெல்லாம் தமிழைக் கொல்லுவதற்காகச் சதியாலோசனை செய்தால்கூட இதைவிட வேறு யுக்தி கண்டுபிடிக்க முடியாது!

*　　　*　　　*　　　*

இக்காலத்தில் தமிழ் பேசுகிறவர்கள் பேசும் நடைக்கு உதாரணம் பாருங்கள்:—தன்னைத் தான் அறியவேண்டும். அவ்வப்போது introspection செய்வது நல்லது. ஆனால் morbid ஆகப் போகக்கூடாது. பிடிவாதமாகத்தான் ஒரு கட்சியில் வேலை செய்ய வேண்டும். அதில் தவறு ஒன்றுமில்லை. ஆனால் செட்டியார் வரவர ரொம்ப narrow - minded ஆகப் போய் விட்டார் அல்லவா? அதுதான் என்னுடைய

objection. ராதாகிருஷ்ணன் ரொம்பக் கெட்டிக் காரன்; யோக்கியன். ஆனால் steadiness போதாது அவன் failure க்கு அதுதான் explanation. காதல் மணம் எல்லாம் ரொம்ப சரிதான். ஆனால் நம்ம தேசாசாரத்தில் love க்கு எங்கே இடம்? Sex-feeling எல்லாம் love ஆய்விடுமா? Indian Art ஐப் பற்றித் தமிழில் எழுதுவதைவிட இங்கிலீஷில் எழுதுவது எனக்குச் சுலபமாய்த் தோன்றுகிறது; இதற்குக் காரணம் என்ன? சீதம்மாள் நன்ருய்த்தான் பேசுகிருள். ஆனால் ஒவ்வொரு சமயம் ரொம்ப boring ஆகப் போய் விடுகிருள். மனித வாழ்க்கைத் தருமங்கள் எல்லாம் imitation பேரில்தான் உண்டானது என்று psychologists சொல்லுகிருர்களே, உங்கள் opinion என்ன? ஜெர்மனிக்காரன் யமன், propaganda விலேயே பாதி யுத்தம் முடித்து விடுகிருன். உங்களுடைய மகள் health இப்போ எப்படி? ஒரு வாரமாகக் கொஞ்சம் set-back ஆயிற்று. ஆனாலும் பரவாயில்லே. டாக்டர் hopeful ஆகத்தான் சொல்லுகிருர்.........

* * * *

பேச்சில் நாம் தலையையும் கையையும் ரொம்ப ஆட்டுகிருேம். நுட்பமான மனோபாவங்களையும், இலக்கியத்தில் எங்கே மிகவும் ரசம் கிடக்குமோ அத்தகைய உணர்ச்சிகளையும் வெளிப்படுத்தவேண்டிய இடங்களில், பேசும்போது கைச் சைகைகளையும் முகக் கோணல்களையும் உபயோகப்படுத்தி விடுகிருேம். ஆகையால், அந்தக் கட்டங்களெல்லாம் மொழியைப்

பொறுத்த வரையில் பேச்சுத் தமிழில் இடம் பெருமல் எழுத்தாளருடைய தனி பாஷையாகவே ஏற்படவேண்டியதாகிறது. சுபாவமாகக் கிளம்பும் பேச்சில் அந்த மாதிரிக் கட்டங்களுக்கு ஊற்று இல்லாமல்போகிறது. வசனநடை இலக்கியத்தின் வறட்சிக்கு இது ஒரு பெரிய காரணம். பேச்சில் அபிநயக் கூத்து அதிகமாக நடத்துவது நமக்குப் புதிதாக வந்த வியாதியல்ல. பழைய வியாதிதான். ஆனால் பேச்சு நடைக்கும் எழுத்து நடைக்கும் பேதம் அதிகமாகக் கிடப்பதும் எழுத்து நடை வறண்டு உயிரற்றுக் கிடப்பதும் பழைய சங்கதியேதான்.

யாருடைய பேச்சிலும் ஓரளவு அபிநயம் கலந்துதானிருக்கும். அது வாய்ப்பேச்சின் சிறப்பு என்றும் சொல்லலாம். ஆயினும் அளவுக்கு மிஞ்சினால் அமிருதமும் நஞ்சாகும். முக்கியமான மனோபாவ நுட்பங்கள் கைகால் முக வளைவுகளில் முடிந்துபோனால், உரம்போடாத வயலைப்போல் மொழி வறண்டு போகும். நம்முடைய 'கதகளி' வழக்கம் அளவுக்கு மிஞ்சிப் போனபடியால், அது மொழி வளர்ச்சிக்குப் பகையாகப் போயிற்று. அவசியமிருந்தால்தான் எந்தப் பொருளும் உண்டாகும். மொழியிலும் நடையிலும் தமிழ் வசனம் வளம் நிறைந்து, வளைவும், அழகும், வேகமும் பெறவேண்டுமானால், நாம் பேசுகிற பேச்சில் அங்க சேஷ்டைகளை நிறுத்திவிட்டு, மொழிகள் வழியாகவே பொருளை வெளிப்படுத்தும் வழக்கம் ஏற்படவேண்டும். பேசுகிறவர்கள் அபிநயக் கச்சேரியே நடத்துவது என்பதும், எழுத்தாளர்கள் மட்டும் தங்கள் மூளையைத் தோண்டியும் பழைய புத்தகங்களைப்

புரட்டியும் மொழிகளையும் நடைகளையும் தேடவேண்டியது என்பதும் சரியான முறையாகாது. இதனால் வர வர மொழிகள் செத்துப் போகும். பிற தேசத்தாரின் பேச்சில் அபிநயங்கள் குறைவு. தங்களுடைய கோபம், தாபம், ஐயம், மகிழ்ச்சி முதலிய மனோ வேகங்களையும் மனதிலுள்ள எண்ணங்களையும் கைகால்களை அதிகமாய் ஆட்டாமல் மொழிகள் மூலமாகவே தெரிவிப்பது அவர்கள் வழக்கம். அவர்களுடைய இலக்கியம் இதைத் தொடர்ந்து வளம் பெற்று வருகிறது.

தமிழ்நாட்டில், படித்த மேதாவிகளும் அனுபவம் கண்ட பெரியோர்களும் தங்களுடைய சாதாரணச் சம்பாஷணைகளில் ஆங்கிலம் கலக்காமலும் அங்க சேஷ்டைகள் இல்லாமலும் இரண்டு ஆண்டு தவம் இருந்தார்களானால்–அதனுடன் வயல்களிலும், கடைத் தெருவிலும், ஏழைகள் வீட்டிலும், பாமர மக்கள் பேசும் பேச்சில் நன்றாய்க் கலந்துகொள்ளவும் கற்றார்களானால், தமிழ் வசன நடை தானாக வளம் பெறும். வசனம் என்றால் பேச்சா எழுத்தா என்ற கேள்வியே கிளம்பாது.

# 14

## தமிழும் இசையும்

சூரிய மதியும் போதிய அறிவும் படைத்தவர்கள், ஒரு விஷயத்தைப்பற்றிப் பேதப்படவேண்டிய காரணமில்லை. விஷயமும் பொது, உணர்ச்சியும் பொது, விஷயத்தைப் பொருந்திய நியாயங்களும் பொது, உண்மையும் பொது. ஆயினும் அறிவும் நற்குணமும் படைத்த தமிழர்கள் வெவ்வேறு முடிவுகளுக்கு வருவதன் காரணம் என்ன? ஒருவருடைய நோக்கம் மற்றவருக்கு விளங்காமலிருப்பதனாலும், ஐயத்துக்கு இடம் தருவதனாலுமே இந்தச் சிக்கல் உண்டாயிருப்பதாக எண்ணவேண்டும்.

பழையதும் சிறப்பு வாய்ந்ததும் தென்னாட்டிற்கு உரிமையானதுமான கர்நாடக சங்கீதத்தை விட்டுவிட்டு வேறொரு சங்கீதமுறையைத் தனித்தமிழபிமானிகள் ஏதோ உண்டாக்கவோ, கண்டெடுக்கவோ பார்க்கிறார்கள் என்று சிலர் எண்ணுகிறார்கள். இது சுத்தத் தவறு. சங்கீத முறையைப்பற்றி அல்ல இந்த தமிழ் இயக்கம். கர்நாடக சங்கீதம் என்பது நமது தென்

ளுட்டினருடையது. கலையானது வளர்ச்சிபெற்று மற்ற வர்கள் அதைக் கையாண்டுவரும் காரணத்தினுல் அது அன்னியர் சொத்தாய்ப் போய்விடாது. வெள்ளைக் காரர் மோரை அதிகமாக உபயோகப்படுத்தி அதற்கு வேறு பெயர் கொடுப்பதால், மோர் என்பது நம்முடைய புராதன உணவுப் பொருளாக இருப்பது இல்லை யென்று ஆகிவிடுமா? அல்லது மோர் வடநாட்டிலும் உபயோகப் படுவதால் அது தமிழ்நாட்டிற்கு வட நாட்டிலிருந்து வந்த பொருளாகுமா? பல்லாயிர ஆண்டுகளாக தென்னுட்டில் மகிழ்ச்சி தந்துவரும் இசையும், சங்கீத முறையும் மோரைப்போல், தேனைப் போல், தமிழைப்போல் நம்முடைய பரம்பரைச் சொத்தேயாகும். மற்றவர்கள் அதை எடுத்துக் கொண்டு வழங்குவதால் நமக்கு யாதொரு குறையு மில்லை, நம்முடைய உரிமை அற்றுப்போய்விடாது. கர் நாடக சங்கீதமுறையானது தமிழராகிய தியாகய்யரோ அல்லது அக்காலத்திய வேறு பெரியாரோ உண் டாக்கி விட்டதல்ல. இந்த நாட்டிற்கு அது வெளி நாட்டிலிருந்து வந்ததல்ல. பாரதநாட்டில் முக்கிய மாகத் தென்னுட்டில் பல்லாயிர ஆண்டுகளாக வளர்ந்த கலை. அரிசியும் பாலும் சமையலும் சாப்பாட்டு முறையும் உண்டானமாதிரி இசையும் உண்டாகியது. இந்த முறையைப்பற்றி அல்ல இந்தத் தமிழ் இயக்கம். வாய்ப்பாட்டுக்களின் மொழிகளைப் பற்றியே.

பாஷையைப் பற்றிய வாதமும், தமிழ் தெலுங்கு கன்னடம் மலையாளம் ஹிந்துஸ்தானி சம்ஸ்கிருதம் இந்த பாஷைகளில் எது உயர்ந்தது, எது தாழ்ந்தது

என்கிறதல்ல. எது நமக்குத் தாய்மொழி? மனிதனுடைய மனோதத்துவங்களில் தாய்மொழியின் இடம் என்ன? இவையே கேள்விகள்.

மனிதன் குரலில் தோன்றும் சங்கீதம் பூரணத் தன்மை அடைவதற்கு, கருத்தும், மொழியும், ராகமும், தாளமும் நான்கும் ஒன்றில் ஒன்று சரியாகப் பொருந்தி ஒன்றை ஒன்று பூரணப்படுத்தி நிற்க வேண்டும். வெறும் தாளத்தை மிருதங்கத்தில் கேட்டு மகிழ்ச்சி அடையலாம். ராகத்தையே தனியாகக் கேட்டும் இன்பம் பெறலாம். இசையில்லாமல் பாட்டைத் தனியாகக் கேட்டு, கருத்தும் மொழிகளும் சந்தோஷம் தரப்பெறலாம். கருத்தும் கவி உருவமின்றியே அறிவாளிக்குத் திருப்தி தரக்கூடும். ஆனால் கருத்து, மொழி, ராகம், தாளம் நான்கும் பொருத்தம் பெற்றால், பாமரரையும், கல்வி கற்ற பெரியோர்களையும் ஒருங்கே பரவசப்படுத்துகிறது.

மொழியைப்பற்றி என்ன கேள்வி என்று சிலர் வாதிப்பதெல்லாம், தெரியாத மொழியில் கோத்த பாட்டுக்களை இவ்வளவுநாள் கேட்டுப் பழக்கப்பட்டதன் பயனேயாகும். மொழிகளின்றி வாத்தியக் கருவிகளின் வாயிலாகவே இசை உண்டாக்கலாம். ஆனால் மக்கள் குரலின் வழியாக இசை பிறக்கும்போது மொழிகள் சேருகின்றன. கருத்தற்ற எழுத்துக்களை, அல்லது நமக்குக் கருத்து விளங்காத மொழிகளைக் கோத்துப் பாடிய வாய்ப்பாட்டானது மனிதன் குரலை



க. 8

வெறும் வாத்தியக் கருவியாகச் செய்வதேயாகும். வழக்கத்தினால் எதையுமே ரசிக்கலாம். ஆனால் அவ் வித அனுபவம் ஒரு பிரமாணமாகாது.

தமிழ்நாட்டில் பாடிவரும் தியாகய்யருடைய கீர்த்தனங்களில் தெய்வீகமான சங்கீதம் பொருந்தி யிருப்பதில் சந்தேகமில்லை. ஆனால் தமிழ்நாட்டில் சங்கீதத்தைத் தமிழ்ப் பாட்டுக்களின் மூலம் பரப்ப வேண்டும் என்னும் கடமையும் அவாவும் குறைவதற்கு இது ஒரு காரணமல்ல.

பக்தியினாலும், ஆர்வத்தினாலும் உண்டாகிறது உண்மையான் இசை. அத்தகைய இசையோடு உயி ரும் உடலும்போல் கலந்த கருத்துக்களும், மொழி களும், வாய்ப்பாட்டின் இன்றியமையாத அங்கங்க ளாகும். இவ்வாறு உண்டான இசை, கேட்போன் அந்தராத்மாவைத் தாக்கவேண்டுமானால் தாய்மொழி அவசியமாகிறது.

பழைய சங்கீத உருப்படிகளே உயர்ந்தவை. தற் காலத்தில் செய்யப்படுவன எல்லாம் திருட்டுச் சாமான் கள், அல்லது பல குற்றங் குறைகள் கொண்டவை என்று சிலர் அபிப்பிராயப்பட்டு வாதிக்கிறார்கள். திருட்டு என்பது விதண்டாவாதம். அப்படிப் பார்த் தால் வித்துவான்கள் பாடுவது எல்லாம் திருட்டே யாகும். நாம் பேசுவது, எண்ணுவது எல்லாம் திருட்டே. கலை வளர்ச்சி என்பது செடி அபிவிருத்தி

யைப்போல். ஒவ்வொரு சமயமும் புதுச் செடி வகை உண்டாக்க முடியாது. ஒன்றைப்போல் மற்றொன்று உண்டாகும். ஆனல் வேறுபாடுகளும் தோன்றும்.

புது உருப்படிகள் எப்போதுமே இரண்டாம் பக்ஷமாகவே இருக்கும் என்பதும் உண்மையல்ல. ஒரு காலத்தில் தியாகய்யர் செய்ததும் புதியதாகத்தான் தோன்றியதல்லவா? கடவுளின் அருளானது முடிந்து தீர்ந்துபோன திரவியமல்ல!

புதுச் சிருஷ்டிகள் காணுத ஒரு தேசத்தில் கலை உணர்ச்சியே நாளடைவில் செத்துப்போகும். புதியன புகுதலால் பழையன கழிந்துபோகும் என்று பயப்பட வேண்டியதில்லை. பழைய பொருளின் பெருமை அதன் பண்பில் நிலைபெற்றிருக்கிறது. போட்டி இல்லாமலே அதைக் காப்பாற்றும் அவசியமில்லை. சங்கீதத்தி லாவது இலக்கியத்திலாவது நாணயச் செலாவணியில் சொல்லப்படும் 'கிரஷாம்ஸ் லா' கிடையாது. சங்கீதத் தில் போலிப் பொருள் உண்மைப் பொருளைத் தோற் கடித்துவிடும் என்று பயப்பட வேண்டியதில்லை. உண்மையான இன்பத்தை உண்டாக்கும் சக்தி இருந் தால்தான் சங்கீதம் போற்றப்படும். எவ்வாருயினும், மனிதனுக்காகக் கலையே ஒழிய, கலைக்காகவும் கலை நிபுணர்களுக்காகவும் மனிதர்கள் இருப்பதாகஎண்ணி, பழையதே சரி, புதியனவெல்லாம் மட்டம் என்று தீர்மானித்துவிடக் கூடாது.

பாமரரும் வித்துவான்களும் ஒருமிக்க இன்பம் அடையும் கலை சங்கீதம். இதற்கு வாத்தியக் கருவி களும் மனிதன் குரலும் பயன்படுகின்றன. குரலுக்கு இசைந்தது தாய்மொழியே ; அன்னியர் மொழியல்ல. நெருங்கியமொழியும் அடுத்த நாடும் நம்முடையதைப் போலவே இருக்கலாம். ஆயினும் நம்முடைய மொழி யும் நம்முடைய நாடும் ஆகாது. துவேஷம் வேண்டிய தில்லை. ஆனால் அன்பு வேண்டும். தாய் மொழியில் அனைவரும் அன்பு வளர்ப்பாராக.

## 15

# விசுவரூப தரிசனம்

சேஷா சாஸ்திரிகள் பி. ஏ., எல். டி. : வாருங்கள் தீக்ஷிதர்வாள். இன்று கொஞ்சம் வேதாந்தம் பேசலாம். நீங்கள்தான் வேதாந்தத்தில் நிபுணராச்சே. விசுவரூப தரிசனம் என்பதைக் கொஞ்சம் விளக்கிச் சொல்லுங்கள்.

தீக்ஷிதர் : உலக மெல்லாம் பரமேசுவரனுடைய சொரூபம் அல்லவா ? அதை அருச்சுனனுக்கு உணர்த்தும் பொருட்டு பகவான், ஆயிரம் சூரியன்கள் ஒரே சமயத்தில் உதயமானாற்போல் கண் கூசும்படியான ஜோதிப் பிரகாசத்தோடு விளங்கினான். இது கீதையில் பதினோராவது அத்தியாயத்தில் விவரமாகச் சொல்லப்பட்டிருக்குறது. அதைத்தான் விசுவரூப தரிசனம் என்று சொல்வது. வேறு ஒன்றுமில்லே.

சே : சுலபமாகத்தான் சொல்லிவிட்டீர்கள். என்னுடைய அபிப்பிராயம், தற்காலத்தில் விசுபரூப தரிசனத்தை உண்மையில் கண்டு வேதாந்த உணர்ச்சியைப்

பெற்றவர்கள் யார் என்றால் பௌதிக ஆராய்ச்சிப் பண்டிதர்கள்தான். தொலைநோக்கிகளும், நுண் நோக்கிகளும், நிறச்சேதிகளும் வைத்து நட்சத்திர ஆராய்ச்சியிலும், பரமாணுக்கள் சோதனையிலும், சத்திய பராயணர்களாக ஈடுபட்டிருக்கும் பௌதிக ஆராய்ச்சியாளர்களே விசுவரூப தரிசனம் கண்ட வர்கள்.

தீ: தாங்கள் எப்போதுமே என்னைக் கேட்கிறது போல முதலில் காட்டிப் பிறகு உங்களுடைய புதுச் சாஸ்திரப் புகழ்ச்சியே நடத்திவிடுகிறீர்கள். முந்தியும் ஒருநாள் இதே பொருள்பட தற்காலப் படிப்பை ரொம்பப் புகழ்ந்து பேசினீர்கள். புதுச் சாஸ்திரங்களில் ஆராய்ச்சி செய்கிறவர்கள் எல்லோரும் ரிஷிகளுக்குச் சமானம் என்றுகூடச் சொன்னீர்கள். இது கொஞ்சம் அதிசயோக்தியாகத்தான் எனக்குத் தோன்றுகிறது. பரம்பொருளைப்பற்றிய தியானத்திலும் தபசிலும் ஈடு பட்ட மகரிஷிகளுக்குச் சமானம் என்று யாரையாவது, அதிலும் கேவலம் பௌதிக ஆராய்ச்சிக்காரர்களை, எப்படிச் சொல்லலாம்?

சே: பரம்பொருளின் சொரூபமே யல்லவோ பூதப் பொருளும்? பூதப் பொருளின் அடி ரகசியத்திற் குப் போனோமானால் எல்லாம் பரம்பொருளாகவே முடிகிறது. ஒன்றை ஆராய்ந்தால் மற்றொன்றையும் ஆராய்ந்தவாறே ஆகிறது.

தீ: தாங்கள் வாதத்தில் நிபுணர். ஆனாலும் இது வேறு அது வேறு. சகல பொருள்களிலும் நான்

இருக்கிறேன் என்று பகவான் சொன்னதிலேயே கேவலம் பௌதிகப் பொருளாராய்ச்சியும் சுத்த பிரம்ம சொரூபத்தைப்பற்றிய வேதாந்தமும் ஒன்ருகி விடுமா? இராக் காலத்தில் வெளியே உட்கார்ந்து ஆகாயத்தில் மின்னும் நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டு மௌன மகிழ்ச்சியில் மூழ்கித் திளைத்து உலகங்கள் அனைத்தையும் தாங்கும் பராசக்தியை மனம் எட்டிய அளவு தியானித்தோமாளுல், நம்முடைய கவலைகளையும் துக்கங்களையும் ஓரளவு மறப்போம் என்று சொன்ளுல் நான் ஆட்சேபிக்கவில்லை. நம்முடைய கோபம், பொருமை, துவேஷம் முதலிய அற்ப விகாரங்களும் கொஞ்சம் தணியலாம்; இது உண்மையே. ஆளுல் அதுவே வேதாந்தமாகிவிடுமா? சாஸ்திரம் படித்துப் பிரஸ்தானத் திரயங்களைக் குருமுகமாய்க் கேட்டுக் கிரகித்தால்தான் வேதாந்தி ஆக முடியும்.

சே: ஆகாயத்தின் அழகைக் குடித்தே மனம் ஓரளவு சாந்தி அடையும். கணிதத்திலும் வான்நூலிலும் கண்ட உண்மைகளை அறிந்து தியானித்தோமாளுல், அதைவிட நிலையான சாந்தியைப் பெறலாம். இது அனுபவத்தில் கண்டறிந்த உண்மை. பக்தி செய்ய இதைவிட மேலான வழி கிடையாது. வேதாந்த நூல்களைப் படிப்பதளுலும் வெறும் ஸ்நான ஜபங்களிளுலும் வேதாந்த உணர்ச்சியை உண்மையில் அடைவது கஷ்டம். அகங்காரத்திற்கு அது மருந்தாகாது என்பது என் அபிப்பிராயம்.

தீ: கணிதமும் ஜோதிஷமும் ஞானத்திற்கு உதவும் என்கிறீர்கள். கணிதமும் ஜோதிஷமும் நம்முடைய சாஸ்திரங்கள்தானே? சூரிய சந்திரக் கிரகணங்களையெல்லாம் நம்மவர்கள் கணக்குப் போட்டுச் சொல்லவில்லையா?

சே: வான்நூலும் கணிதமும் நம்முடைய முன்னோரின் அறிவால்தான் முதன்முதலில் தோன்றின என்பது உண்மை. ஆனால் அந்த அறிவுத் தொகையின் வெள்ளம், நம்முடைய நாட்டில் ஓடாமல் மேற்கு முகமாய்த் திரும்பிவிட்டது. அங்கே அது பாகீரதிப் பிரவாகமாய்ப் பெருகியும் பரவியும் தற்போது மிக்க அற்புதமான நிலை அடைந்து விளங்குகிறது. மேலைநாட்டு ஆராய்ச்சியாளரின் ஊக்கமும் தளராத முயற்சியும் இடைவிடாத சோதனைகளுமே இந்தப் பெருக்கத்திற்குக் காரணம்.

தீ: எப்போதும் மேலைநாட்டாரைப் புகழ்ந்து பேசுவது உங்கள் வழக்கம். இவர்கள் நட்சத்திரங்களை எண்ணிவிட்டார்களா, சொல்லுங்கள்.

சே: எண்ணப்படாத எண்ணிக்கைக்குச் சாதாரணமாகச் சொல்லும் உதாரணம் விண்ணில் மின்னும் நட்சத்திரங்கள். ஆயினும், ஆகாயத்தில் கண்ணுக்குத் தென்படும் நட்சத்திரங்களையெல்லாம் வான்நூலறிஞர்கள் எண்ணியதல்லாமல் அட்டவணையும் போட்டிருக்கிறார்கள்.

தீ: எத்தனை நட்சத்திரங்கள் என்று எண்ணியிருக்கிறார்கள்?

சே: கண்ணுலேயே காணக்கூடியது சுமார் ஆறுயிரம். ஆனுல் அதற்குமேல் கண்ணுக்குத் தென்படாத புதிய புதிய நட்சத்திரங்களைத் தொலைநோக்கி வைத்துப் பார்த்திருக்கிருர்கள். இவ்வாறு ஆராய்ந்து ஆராய்ந்து சுமார், ஐந்து லட்சம் நட்சத்திரங்களைப் படமாகக் குறித்து அட்டவணை செய்திருக்கிருர்கள்.

தீ: என்ன சொல்லுகிறீர்கள் ?

சே: ஆமாம் தீக்ஷிதர்வாள், உண்மை. அப்படியே செய்திருக்கிருர்கள். எவ்வளவுக்கெவ்வளவு பலமான தொலைநோக்கிக்குழாய் அமைத்துக்கொண்டு பார்க்கிருேமோ, அவ்வளவுக்கவ்வளவு புதிய புதிய நட்சத்திரங்கள் திருஷ்டியில் சிக்கிக்கொண்டே வருகின்றன. அவைகளைக் கண்ணுல் பார்ப்பதோடு பதிவுப் படம் எடுத்துப் பதியவும் வைக்கலாம். இவ்வாறு கண்டும் ஆராய்ச்சி செய்தும் லட்சக்கணக்கான ஜோதிகளைப் பதிவுப் படத்தில் பதித்தும் இருக்கிருர்கள். இப்போதுள்ள தொலைநோக்கிகளைவிடப் பலமான ஆராய்ச்சியந்திரங்களை அமைத்துக்கொண்டால் காட்சிக்குச் சிக்கக்கூடிய நட்சத்திரங்களின் எண்ணிக்கை பதினெரு சுழிகளிட்ட ஓர் எண்ணிக்கையாகும்.

தீ: அப்படித்தானிருக்கும். ஜகத்து அனந்தமோ இல்லையோ ?

சே: வேதாந்தத்தில் அனந்தன் அப்பிரமேயன் என்றெல்லாம் ஈசுவரனைப்பற்றிச் சொல்லுவதற்கு அடுத்தாற்போல் உள்ளது. இந்த நட்சத்திர எண்ணிக்

கையும் அவை கிடக்கும் பிரம்மாண்ட பாழுமே. புள்ளி வடிவங்களாக மின்னும் நட்சத்திரங்களைத் தவிர, புகைப் படங்களாகச் சில மண்டலங்கள் வெறுங் கண்ணுக்கும் தொலைநோக்கி மூலமாகவும் காணப்படுகின்றன. புகைப்படலங்களெல்லாம் பிரம்மாண்ட தொலையிலுள்ள நட்சத்திரக் கூட்டங்கள். ஒவ்வொரு புகைப் படலமும் லட்சக்கணக்கான நட்சத்திரங்களின் கூட்டம் என்பது ஆராய்ச்சிக்காரர்களின் அபிப்பிராயம். ஐந்து லட்சம் ரூபாயில் எத்தனை தம்பிடிகள் உண்டு? அத்தனை நட்சத்திரங்கள் ஒரு புகைப் படலத்தில் இருப்பதாக அபிப்பிராயப்படுகிறார்கள். இவ்வாறு ஒவ்வொரு புகைப் படலமுமானால், பார்த்துக்கொள்ளுங்கள், ஒட்டு மொத்தம் என்னவாகும்? தொலைநோக்கியில் கண்ட புகைப் படலங்களே இருபது லட்சம்.

தீ: கணக்குக்கு எல்லையே இல்லை. ஒன்றைப் போலவே மற்றொன்று. எத்தனை இருந்தாலென்ன? இத்தனை நட்சத்திரங்களுக்கு இடமெங்கே?

சே: நமக்கு நீலமாகவும் வட்டமாகவும் தென்படுகிறது ஆகாயம். ஆனால் அதற்கு இவ்வளவு நீட்டம் அகலம் ஆழம் என்பது கிடையாது. அதில் இத்தனை கோடானுகோடி ஜோதிக்கோளங்களும் ஒன்றோடொன்று மோதிக்கொள்ளாமல் புகைவண்டி வேகத்திற்கு இரண்டாயிரமடங்கு அதிக வேகமாய்ச் சுழன்றோடிக்கொண்டிருக்கின்றன—ஏன் திகைக்கிறீர்கள்?

தீ : சொல்லுங்கள், கேட்டுக்கொண்டுதானிருக்கிறேன். நம் பெரியவர்கள் கோடி, அற்புதம், நிற்புதம், கர்வம், பத்மம், சங்கம், சாகரம் என்றெல்லாம் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். அவர்களுக்குத் தெரியாத கணக்கா ?

சே : பெரிய எண்ணிக்கைகளுக்கு இவ்வாறு பெயர்களிட்டுச் சொல்வதற்குப் பதில் சுருக்கமான ஒருமுறை உண்டு.

தீ : அதெவ்வாறு, சொல்லுங்கள் பார்ப்போம்.

சே : ஒன்றுக்குப்பின் இரண்டு சுழி வைத்தால் நூறு, மூன்று சுழி வைத்தால் ஆயிரம். இவ்வாறே பெரிய எண்ணிக்கைகளை எத்தனை சுழிகள் அடுக்க வேண்டுமென்று சுருக்கமாகச் சொல்லிவிட்டால் எண்ணிக்கை இன்னதென்பது, திட்டமாகத் தெரிந்து விடும். 'ஏழடுக்கு' என்றால் ஏழு சுன்னங்கள் கொண்ட கோடி. அற்புதம் என்பது 'பத்தடுக்கு' அதாவது பத்துச் சுழிகள் அடுக்கிய எண். பத்மம் என்பது 'பதினாலடுக்கு'. இவ்வாறே எல்லா எண்ணிக்கையும். வெறும் சங்கேதமாக வைத்துக்கொண்ட பெயர்கள் அழகாகத்தானிருக்கின்றன. ஆனால் பெயரைக்கொண்டு பொருளையறிவது கடினம். சிலசமயம் சந்தேகமும் ஏற்படும். எழுதும்போது எல்லாச் சுழிகளையும் வரைந்து அடுக்குவது சவுகரியக்குறைவாகும். இத்தனை அடுக்கு என்று குறிப்பது புது முறை. அதில் சந்தேக விபரீத அர்த்தங்களுக்கு இடமிராது. சுருக்கமாகவும் எழுதமுடியும். சிலேட்டில் எழுதிக் காட்டுகி

றேன் பாருங்கள். $10^6$ என்றால் பத்து லட்சம். $2 \times 10^6$ என்றால் 2க்குப் பின் ஆறு சுழி அதாவது இருபது லட்சம். $3 \times 10^{12}$ என்றால் மூன்றுக்குப்பின் 12 சுழிகள். ஒன்றை மற்றொன்றால் பெருக்கவேண்டுமானால் அடுக்கெண்களைக் கூட்டினால் தீர்ந்துவிடும். $10^6 \times 10^8$ என்றால் $10^{14}$.

தீ: சரிதான், என்னை மறுபடி பள்ளிக்கூடத்திலேயே சேர்த்துவிடுவீர்கள் போலிருக்கிறது!

சே: நீங்களே ஒருநாள் சொன்னீர்களே, படிப்புக்கு வயதின் வரம்பு கிடையாது என்று? புது விஷயங்களைப் படிப்பதில் அவமானமுமில்லை, சங்கோசமும் கூடாது. இத்தனை ஜோதிகள் விசுவவெளியில் ஜொலித்துக்கொண்டும் சுழன்று சுற்றிக்கொண்டுமிருக்கின்றன. அவற்றின் சொரூபம் என்னவெனக் கண்டறிய ஆராய்ச்சிக்காரர்கள் வெகு பாடுபட்டிருக்கிறார்கள்.

தீ: அதைச் சொல்லுங்கள், அதுதான் தெரிய வேண்டும்.

சே: நட்சத்திரங்கள் சூரியனைப்போல் சுயஞ் சோதிகள்.

தீ: சூரியன் உஷ்ணமாயிருக்கிறான், நட்சத்திரங்கள் அவ்வாறில்லையே?

சே: சூரியன் நமக்கு ரொம்பப் பக்கம். நட்சத்திரங்கள் வெகு தொலை. மலையில் எரியும் நெருப்பு நம்மைச் சுடுவதில்லை. தொலையின் காரணமாக உஷ்

ணம் எட்டுவதில்லை. ஓரளவு பிரகாசம் மட்டும் நம்மை வந்து சேருகிறது. தொலையைப்பற்றிச் சொன்னால் நம்பமாட்டீர்கள்.

நீ : எல்லாவற்றிற்கும் சிரத்தைதான் ஆதாரம். ஒரு சமயம் அப்பய்ய தீக்ஷிதர் யாகம் செய்தபோது யாகத்தில் நடந்த பசு வதையைப் பார்த்தார். பார்த்து நடு நடுங்கி, 'சாஸ்திரமே, உன்னை நம்பினேன். நீ விட்ட வழி!' என்றாராம். அவ்வாறே நீங்கள் சொல்லும் அற்புதப் பேச்சைக் கேட்டாலே மதி திணறுகிறது. ஆயினும் நம்பித்தான் தீரவேண்டும். சூரியன் பக்கத்திலிருக்கிறான் என்றும் நட்சத்திரங்கள் அதைவிட அதிகத் தொலை என்றும் சொன்னீர்களே, எல்லாம் ஓர் ஆகாசத்தில் அல்லவோ இருக்கின்றன?

சே : அப்படித்தான் தோற்றம் கொடுக்கிறது. குழந்தைத் தொட்டிலின்மேல் கட்டியிருக்கும் கிளித் தட்டுப்போல் அழகாகத்தான் தோன்றுகிறது. ஆனால் உண்மையில் நமக்கு வெகு தூரத்திலிருக்கின்றன. அவை யெல்லாம் ஒரு தொலையில் இல்லை. ஒன்றுக்கொன்று தொலையில் வெகு பேதம். சூரியன் தொலை பத்துக் கோடி மைல் என்று வைத்துக்கொள்ளலாம். அதாவது எட்டு அடுக்கு எண். நட்சத்திரத்தின் தொலையோடு ஒப்பிட்டால், இந்தப் பெருந் தொலை பக்கத்து வீடு போலாகிவிடும். சூரியன் தொலையைப் பக்கத்து வீடுபோல வைத்துக்கொண்டால், நட்சத்திரத்தின் தொலை காசிக்கும் ராமேசுரத்திற்குமுள்ள தொலையாகும். அவ்வாறே இன்னும்

வேறு சில நட்சத்திரங்களோடு ஒப்பிட்டால் இந்தக் காசித் தொலையும் பக்கத்து வீடுபோலாகிவிடும்.

தீ: சாஸ்திரிகளே, இன்று இவ்வளவு போதும். இதை எல்லாம் எண்ணிஞல் கிறுகிறுப்பு வரும்போலிருக்கிறது. நமோ நம:

௨

சே: வண்ணன் துணி தோய்ப்பதை தூரத்தில் மேட்டிலிருந்து எப்போதாவது தீக்ஷிதர்வாள், நீங்கள் கவனித்ததுண்டோ?

தீ: ஆகா, எத்தனையோ தடவை பார்த்திருக்கிறேன். அதில் என்ன விசேஷம்?

சே: கல்லின்மேல் துணி படுவதற்கும் சப்தம் வந்து காதில் படுவதற்கும் ஒரு இடை நேரம் உண்டு. அதைக் கவனித்திருக்கிறீர்களோ?

தீ: சாதாரணமாச்சே! இதில் என்ன ஆச்சரியம்? சப்தம் நம்மை வந்து எட்டுவதற்கு கொஞ்ச நேரம் பிடிக்கிறது. அதஞல் பார்ப்பதற்கும் கேட்பதற்கும் இடையில் ஒரு க்ஷணம் செல்லுகிறது.

சே: ஆச்சரியம் ஒன்றுமில்லை. இயற்கை நிகழ்ச்சிகளைக் கவனித்தால் எல்லாமே ஆச்சரியம்; இன்னொரு வழியாகப் பார்த்தால் எதிலுமே ஆச்சரியம் கிடையாது. ஒன்றைப்போல்தான் மற்றொன்று. இடியும் மின்னலும் ஒரே சமயத்தில் உண்டாகின்றன. ஆஞல் முந்தி மின்னல் தோன்றுவதைக் காண்கிறோம். இடியோசை கொஞ்ச நேரம் கழித்துத்தான் காதில் படுகிறது.

நீ: இடியும் மின்னலும் இரண்டும் கூடவே உண்டாகிறது என்கிறீர்களா? முந்தி மின்னல்; பிந்தி இடி உண்டாகுமென்றல்லவோ எண்ணி வந்தேன்.

சே: வண்ணான் தோய்க்கும் துணியானது கல்லின்மேல் படுவதால்தான் ஓசை உண்டாகிறது என்பது நமக்கு நன்ருகத் தெரிந்தபடியால் அந்த நிகழ்ச்சியில் காட்சி முந்துவதும் ஒலி பிந்துவதும் நமக்குத் தெரிந்து போயிற்று. இடியும் மின்னலும் ஒரே நிகழ்ச்சி யென்பது நம்முடைய பிரத்தியட்ச அனுபவத்தில் சேரவில்லை. ஆகையால் அதைப்பற்றி ஆராய்ந்து தான் தெரிய வேண்டியதாகிறது. மின்னலின் ஒளி வேகம் முந்தி நம்மை வந்து சேருகிறது. கூட உண்டான இடியின் ஓசை பிந்தி வருகிறது. பந்தயத்தில் ஒளி முந்திவிடுகிறது, ஒலி பிந்திவிடுகிறது.

நீ: சொல்லுங்கள்.

சே: சாஸ்திரம் படித்தவர்களுக்குக் கொஞ்சம் சொன்னல் போதும். ஒரு நிகழ்ச்சியோ, பொருளோ நம் கண்களின் மூலம் நமக்குப் புலனுகவேண்டுமானல் நிகழ்ச்சி ஸ்தானம் அல்லது பொருளின் நிலை இடத்தினின்று ஒளிக் கணங்கள் பறந்து நம் கண்களை வந்து சேரவேண்டும். அப்போதுதான் அந்த நிகழ்ச்சியோ பொருளோ நமக்குப் புலனுகும்.

நீ: சப்தம் வந்து சேர நேரம் பிடிக்கும். ஆனல் ஒளி அதைப் போலல்லவே? கண்ணைத் திறந்து பார்த்தால் உடனே வஸ்து தென்படுமல்லவோ?

சே : அப்படியல்ல. எல்லா இந்திரியங்களுக்குமே பொருள் அல்லது நிகழ்ச்சியின் ஸ்தானத்திலிருந்து சூட்சும அலைகளோ, பரமாணுக்களோ புறப்பட்டு நம் முடைய இந்திரியங்களை வந்து தாக்கவேண்டும். நம் முடைய கண்ணினின்று ஏதோ சக்தி புறப்பட்டுச் சென்று வஸ்துவை எட்டிப் பிடிக்கிறதாக நாம் எண்ணுவது தவறு. சூரியனை நாம் பார்க்கும்போது ஒளியலைகள் சூரியனிடமிருந்து நம்மை வந்து சேர வேண்டும். அவ்வாறு வந்து சேர எட்டேகால் நிமிஷம் பிடிக்கும்.

தீ : ஒன்றும் விளங்கவில்லை. கண்ணாடியில் என் முகத்தை நான் பார்த்துக் கொண்டால் அல்லது ஒரு மலையை இங்கிருந்து பார்த்தால் உடனுக்குடனே புலனாகிறது. இதற்கு நேரம் என்னத்திற்கு ? இடைவேளை என்னத்திற்கு ? காட்சிக்கு ஒரு பிரயாணத்தைப்போல் காலதேசக் கணக்கென்ன ?

சே : வில்லை விட்டு அம்பு பாய்ந்து குறியைத் தாக்கும்போது, அம்பு வெகு வேகமாகத்தான் செல்லுகிறது. ஆனாலும் தொலைக்கும் விசைக்கும் தக்கவாறு அம்பானது வில்லை விட்டதற்கும் அது குறிமேல் தாக்குவதற்கும் ஒரு இடைவேளை உண்டல்லவா ?

தீ : உண்டு. அதைப்பற்றி என்ன சந்தேகம் ?

சே : ஒரு துப்பாக்கியை விட்டுச் செல்லும் குண்டு கொஞ்ச நேரத்திற்குப் பிறகுதான் குறியைத் தாக்கும். மிக்க விசையுடன் சென்றாலும் இப்படித்தானே ?

தீ : ஆமாம்.

சே : வெகு வேகமாகச் செல்லும் அம்பும் குண்டும் குறியைத் தாக்குவதுபோலவே சூரியனுடைய ஜோதி மண்டலத்திலிருந்து ஒளிக்கணங்கள் அவை தோன்றிய இடத்தைவிட்டு வெகு விசையுடன் பறந்து நம்மை வந்து சேருகின்றன. அப்படிச் சேரும்வரையில் நமக்கு ஒன்றும் புலனாகாது. மலையைப் பார்க்கும் போது சூரிய வெளிச்சம் மலையைத் தாக்கி அங்கிருந்து நம்முடைய கண்களை வந்து தாக்குகிறது. அப்படித் தாக்கினால்தான் மலை திருஷ்டிகோசமாகிறது.

தீ : ஜோதிக் கணங்களின் விசை என்ன ?

சே : அப்படிக் கேளுங்கள். ஒரு வினாடியில் கொஞ்சம் குறைய இரண்டு லக்ஷம் மைல் பாயும், ஒரு நிமிஷத்தில் ஒரு கோடி மைலுக்குமேல் பாய்ந்துவிடும்.

தீ : இதெல்லாம் வெறும் ஊகம்தானே ?

சே : இல்லை, இல்லை. எல்லாம் திட்டமாக அளந்து சோதித்த விஷயம். புதுச் சாஸ்திரத்தில் எதையும் சும்மா அனுமானத்தில் விடுவதில்லை. ஊகத்தை மறுபடி நிகழ்ச்சிகள்மேல் ஏற்றி ஒன்றுக்குப் பத்தாக நன்றாய்ச் சோதித்துத்தான் எதையும் சொல்வார்கள். அதுவே பௌதிக சாஸ்திரத்தின் விசேஷம்.

தீ : சப்தத்தின் விசை என்ன ?

சே : சப்தமானது காற்றில் ஒரு வினாடியில் ஆயிரம் அடி செல்லும்.





ROJA MUTHIAH
KOTTAIYUR-623 106
TAMILNADU INDIA

தீ : இவ்வளவுதானு? ஆயிரம் அடியா, மைல்களா?

சே : ஆயிரத்து எண்பது அடி; மைல்களல்ல. ஒரு மைல் செல்ல ஐந்து விஞடிகளாகும்.

தீ : புகைவண்டி வேகமாய்ப் போகிறதே, அதன் விசையென்ன?

சே : தனி எஞ்சினை வேகமாக விட்டால் ஒரு மைல் போவதற்கு அறுபது விஞடி ஆகும். ஒலியானது காற்றில் அதற்குப் பனிரண்டு மடங்கு விசையில் செல்லும்.

தீ : ஒளிக் கணங்களின் விசை என்னவென்றீர்கள்?

சே : ஒரு விஞடியில் இரண்டு லட்சம் மைலுக்குக் கொஞ்சம் குறை. ஒலியின் விசைக்குப் பத்து லட்சம் மடங்கு அதிகம்.

தீ : ஒளியின் விசை இதனுல்தான் நிகழ்ச்சியோடே கண்ணுக்குப் புலனுய்விடுகிறது. ஒளி மாத்திரைகள் அளவிறந்த விசையில் பாயும் என்கிறீர்கள்?

சே : அதிவேகமாய்ச் செல்லும்; ஆனுல் அளவிறந்ததல்ல. ரொம்பத் திட்டமாக அளவிடக்கூடும். நூறு மைல் தொலையை ஒரு விஞடியில் இரண்டாயிரத்தில் ஒரு பங்கில் பறந்து தீர்த்துவிடும். சூரியனுடைய தொலையைத் தாண்ட எட்டு நிமிஷங்களுக்கு மேல் ஆகிறது.

தீ: சூரியனுக்கும் நமக்கும் என்ன தொலை என்கிறீர்கள்?

சே: அதை வேறுவிதத்தில் கணக்கிட்டு, தொளாயிரத்து முப்பது லட்சம் மைல் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

தீ: இங்கிருந்து காசி எவ்வளவு தூரம்?

சே: தொளாயிரத்து முப்பது மைல் என்று வைத்துக்கொள்ளலாம்.

தீ: சூரியன் அதற்கு லட்சம் மடங்கு என்கிறீர்கள். இருக்கலாம். அவ்வளவு தூரத்திலிருந்து இவ்வளவு வெப்பத்தோடு கொளுத்துகிறான்!

சே: இப்போதுள்ளதற்குக் கொஞ்சம் கிட்ட வந்து விட்டானானல் நாம் அனைவரும், சகல ஜீவராசிகளுமே, சாம்பலாய்ப் போவோம். உயிர் நசித்துப் போகாமல் அவன் உஷ்ணத்தைக்கொண்டே சுகமாகப் பிழைத்து வாழும்படியான தூரத்தில் நிற்கிறோம்.

தீ: என்ன ஆச்சரியம்! கொஞ்சம் கிட்டினால் நசித்துப் போவோம். கொஞ்சம் எட்டிப் போனால் குளிரில் செத்துப் போவோம். இதற்கிடையில் சரியான தூரத்தில் நம்மை வைத்துக் காப்பாற்றுகிறான். ஈசுவரனுடைய கருணையை எவ்வாறு சொல்லுவது. வியப்பே வியப்பு!

சே: அப்படியே வைத்துக்கொள்ளலாம்.

தீ: ஏன் சந்தேகமாகச் சொல்கிறீர்கள்?

சே : சந்தேகமொன்றும் இல்லை. இந்தத் தொலையி லிருப்பதால் உயிர்கள் தோன்றின. தோன்றிய உயிர் கள் காப்பாற்றப்பட்டும் வருகின்றன. தொலை வேருக இருந்திருந்தால் உயிரும் இல்லை, காப்பும் இல்லை, கரு ணையுமில்லை. கருணை என்ன, குரூரம் என்ன? குளத் தில் நீர் இருந்தால் மீன் உண்டாகி வளர்கிறது. மேட்டில் மீன் இல்லை. தண்ணீர் தங்கி அழுகிஞல் கொசுக்கள் தோன்றும். இல்லையாஞல் கொசு உண் டாகாது. நமக்காகச் சூரியன் ஒரு தொலையிலிருக் கிருஞ அல்லது அவன் ஒரு தொலையிலிருப்பதனுல் நாம் உண்டாஞேமா? இது சந்தேகப்பட வேண்டிய கேள்விதானே?

தீ : நீங்கள் மீமாம்ஸம் படித்திருக்கவேண்டும். ஆனல் உங்கள் படிப்பு அதற்கு ஏதேனும் குறைவா? நம்முடைய சாஸ்திரமெல்லாம் தோற்றுப் போச்சுப் போங்கள்.

சே : இப்போது அங்கே பாருங்கள், அக்கினி நட்சத்திரம் மின்னுகிறதே; அதுவே வானத்திலுள்ள நட்சத்திரங்களிலெல்லாம் அதிகப் பிரகாசமானது. அதன் ஒளி நம்மைச் சேர எவ்வளவு காலம் பிடிக் கிறது? அது எவ்வளவு தூரத்திலிருக்கிறது என்று எண்ணுவீர்கள்?

தீ : எத்தனை ஆனல் நமக்கென்ன?

சே : அப்படியல்ல தீக்ஷிதர்வாள். சொல்லுங்கள் பார்க்கலாம்.

தீ : பரீட்சை செய்கிறீர்கள். சூரியன் எட்டு நிமிஷத்துத் தொலே என்றீர்கள். நட்சத்திரங்கள் அதற்கு மேல் அதிகத் தொலே என்றீர்கள். இருபது நிமிஷத் தொலேயாயிருக்கலாமோ ?

சே : அக்கினி நட்சத்திரத்திலிருந்து ஒளி நம்மை வந்து சேர எட்டரை வருஷங்கள் ஆகும்.

தீ : அக்கினி நட்சத்திரமும் சூரியனும் ஒரே தொலே என்கிறீர்கள்.

சே : ஒன்று எட்டு நிமிஷம் ; மற்றொன்று எட்டு வருஷம்.

தீ : என்ன சொல்கிறீர்கள் ? வேடிக்கை செய்ய வேண்டாம்.

சே : வேடிக்கையில்லே தீக்ஷிதர்வாள். சில நட்சத்திரங்களின் தொலே ஒளி அங்கிருந்து இங்கு வர நூறு வருஷங்கள் கூட ஆகும்.

தீ : இதென்ன எல்லாம் வருஷக் கணக்காகவே சொல்லுகிறீர்கள் ? நட்சத்திரங்களின் பிரகாசம் கொஞ்சம் மெதுவாகத்தான் செல்லுமோ ?

சே : இல்லே, இல்லே. எல்லா ஒளியலேகளுமே விஞடி ஒன்றுக்கு ஒரு லட்சத்து எண்பத்தாறுயிரம் மைல் பாயும். நம்முடைய விளக்கின் ஒளியும் அதே விசை ; சூரியன் ஒளியும் அதுவே ; மரம், மலே இவைகள்மேல் பட்டு நம்மை வந்து சேரும் விசையும் அதுவே ; நட்சத்திரங்களின் ஒளி விசையும் அதுவே ; எல்லா ஒளிக் கிரணங்களும் இந்த விசையோடுதான்

பரவும். நட்சத்திரங்களின் தொலை இவ்வளவு அதிகம். அங்கிருந்து இங்கு அந்த விசையில் வந்தாலுங்கூட வந்து சேர வருஷக்கணக்காகும். சில நட்சத்திரங்களின் ஒளி நம்மை வந்து சேர எட்டு சுழி எண்ணிக்கை வருஷங்கள் ஆகும்.

தீ : நீங்கள் சொல்லுவது நம்பமுடியாமலிருக்கிறது. தொலைநோக்கி வைத்துப் பார்த்தால் அவ்வளவு காக்கவேண்டியதில்லையே? உடனே தெரியுமோ இல்லையோ ?

சே : நம்முடைய கண்ணுக்குத் தொலை நோக்கி உதவியாகுமே தவிர ஒளியின் வேகத்தைத் தொலைநோக்கி ஒன்றும் மாற்றமுடியாது. வலையில் மீன் பிடிக்கிறமாதிரி, வெகு தூரத்திலிருந்து வரும் ஒளியை நம்மிடம் வந்தபின், தொலைநோக்கியானது பிடித்து ஒருமுகப்படுத்திக் கண்ணில் செலுத்துகிறது. அவ்வளவே. அனேக வருஷங்களுக்குமுன் புறப்பட்ட ஒளியை இன்று பார்க்கிறோம்.

தீ : இந்த நட்சத்திரங்கள் எல்லாமே இப்படித் தானோ ?

சே : நமக்கு அதிக சமீபத்திலிருக்கும் நட்சத்திரம் நாலரை வருஷ காலம் ஒளியின் பாய்ச்சல் தூரம். கிராமத்தில் சொல்லும் வழக்கம் உங்களுக்குத் தெரியுமே. அந்த கிராமம் எத்தனை தூரம் என்றால், இரண்டு நாழி தூரம் என்பார்கள். காலத்தைக் கொண்டு தொலையை அளப்பார்கள். கிராமவாசி

களின் முறையே வான்நூலாரின் முறையும். காலால் நடந்து தீர்க்கும் தொலைகளை கிராமவாசிகள் இத்தனை நாழித் தொலையென்பார்கள். வான் நூலார். விநாடி ஒன்றுக்கு ஒரு லட்சத்து எண்பத்தாறுயிரம் மைல் பாயும் ஒளி எத்தனை காலத்தில் நட்சத்திரத்தின் தொலையைக் கடக்குமோ அதைச் சொல்லி அதன் தொலையைக் குறிப்பார்கள். அது வருஷக்கணக்காக இருக்கும். நட்சத்திரத்தின் தொலைக்கு மைல் கணக்கு உதவாது. இத்தனை ஒளி வருஷங்கள் என்று சொல்ல வேண்டும்.

தீ : இந்த நட்சத்திரங்கள் எல்லாம் இவ்வளவு பிரம்மாண்டமான தொலையில் ஏன் இருக்கவேண்டும்?

சே : யாரைக் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம் ? இருப்பது அவ்வாறு. தவிர யாருடைய நன்மையையோ பிரயோசனத்தையோ இதற்கு வைத்துப் பார்ப்பது ? எல்லாம் பகவான் லீலை என்றுதான் வைத்துக்கொள்ள வேண்டும். அவன் லீலையின் அளவுகள் இம்மாதிரி.

தீ : இதேது, சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட லீலா விபூதிகளைப்போலவே உங்கள் புதுச் சாஸ்திர மும் முடிவு கட்டிவிட்டதா என்ன ?

சே : ஆமாம் தீக்ஷிதர்வாள். அப்படியேதான். வான் நூலில் சொல்லப்படும் காலதேச அளவுகள் நம்முடைய சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட பிரம்ம கல்பங்களைப்போலவே. பழைய சாஸ்திரத்தில் வெறு

மனே சொல்லப்பட்டதெல்லாம் இப்போது ஆராய்ச்சியில் கண்ட பயனுக முடிகிறது.

தீ: நம் பெரியவர்களுடைய வாக்குப் பொய்யாகப் போகுமா ? நீங்கள் சொல்வதிலிருந்து புதுச் சாஸ்திரமும் நம் பழைய சாஸ்திரங்களுக்கு அனுசரணையாகத் தானிருக்கும் போலிருக்கிறது. நட்சத்திரங்கள் இத்தனை தூரத்திலிருக்கிறதாகச் சொல்லுகிறீர்களே. தூரத்தை எவ்வாறு நிச்சயம் செய்கிறுர்கள் உங்கள் ஆராய்ச்சிக்காரர்கள் ?

சே : அதற்குப் பலவழிகள் உண்டு. முக்கியமாகத் திரிகோண கணிதத்தின்படி கணக்கிட்டிருக்கிறுர்கள். சூரியனைச் சுற்றிப் பூமி ஒரு பெரிய வட்டம் இடுகிறது அல்லவா ? அந்த வட்டத்தில் சித்திரை மாதத்தில் ஒரு இடத்தில் பூமியானது இருக்கும். புரட்டாசி மாதத்தில் வேறு இடத்திலிருக்கும். இந்த இரண்டு ஸ்தானங்களினின்று பிரத்தியேகமாக நட்சத்திரத்தின் நிலையை நுட்பமான யந்திரங்களைக் கொண்டு குறித்துக் கொண்டு ஆராய்ந்தால் நட்சத்திரத்தின் தொலையைத் திரிகோண கணக்கில் அடையலாம்.

தீ : எல்லாம் கணித சாஸ்திரப்படி கணக்கிடுகிறுர்கள், வெறும் ஊகம் அல்ல என்கிறீர்கள் ?

சே : அப்படியே தான். நாமும் நம்முடைய பூகோளமுமே உலகிற்கு மையம் என்றும், நம்முடைய உயிரும் வாழ்க்கையுமே பிரதானம் என்றும் வைத்துக் கொண்டு நட்சத்திரம் இவ்வளவு தூரத்தில் ஏன்

இருக்கவேண்டும் என்று கேட்கிறோம்: ஏன் அவை களுக்கு இவ்வளவு தூரத்தில் நாம் இருக்கவேண்டு மென்று தலைகீழாக மாறியும் கேட்கலாம். எந்த இடத்தில் எது உற்பவமாக முடியுமோ அங்கே அது உண்டாகிறது. அவ்வளவேதான். நமக்காக நட்சத் திரங்கள் உண்டானதாக வைத்துக்கொள்ளக்கூடாது.

தீ: எல்லாம் லீலை. நம்முடைய சாஸ்திரமாகவே முடிந்தது. சரி, அதோ சுக்கிரன் இருக்கிறானே, அவன் எவ்வளவு தூரத்திலிருக்கிறான்?

சே: சுக்கிரனிடமிருந்து ஒளி நம்மை வந்து சேர இரண்டரை நிமிஷம் தான் ஆகும்.

தீ: நட்சத்திரங்களெல்லாம் சூரியனைவிடத் தொலை அதிகம் என்றீர்களே?

சே: சுக்கிரன் ஒரு கிரகம்தான். நட்சத்திர மல்ல. கார்த்திகை, திருவாதிரை, ரோகிணி இவை யெல்லாம் சுயஞ்சோதிகள். அக்கினி நட்சத்திரமும், துருவ நட்சத்திரமும், சப்தரிஷிகளும் எல்லாம் சுயஞ் சோதிகள். சுக்கிரன் சூரியனுடைய ஒளியைக் கொண்டு பிரகாசிக்கிறான். சந்திரனைப்போல் எல்லாக் கிரகங்களும் அவ்வாறே. சந்திரனும், சுக்கிரனும் நமக்கு வெகு பக்கம்.

தீ: கிரகத்திற்கும் நட்சத்திரத்திற்கும் என்ன வித்தியாசம்? கிரகம் இடம் விட்டு இடம் மாறும். ஒரு மாதத்திலிருந்த மாதிரி இன்னொரு மாதத்தில் இல்லை. நட்சத்திரங்களின் பரஸ்பர அமைப்பு ஒரே விதமாக

இருக்கும். இவ்வளவுதானே? மற்ற விஷயங்களில் எல்லாம் ஒன்றுதானே ?

சே: அப்படியல்ல தீக்ஷிதர்வாள். நட்சத்திரங்களின் வெளிச்சத்திற்கும் கிரகங்களின் வெளிச்சத்திற்கும் வித்தியாசம் உண்டு. பாருங்கள், நட்சத்திரங்கள் வைரக்கல்போல மின்னுகின்றன. கிரகங்களின் பிரகாசத்தில் மினுமினுப்புக் கிடையாது. அசைவற்ற பிரகாசம். கிரகத்திற்கு சுயமாகப் பிரகாசம் கிடையாது. சூரியனுடைய ஒளி அதன்மேல் வீசுவதுதான் அதன் பிரகாசம். அவை எல்லாம் சூரியனைச் சுற்றிப் பூமியைப்போல் வட்டமிடுகின்றன. பூமியைப்போலவே அவை சூரிய தாசர்கள் என்று வைத்துக்கொள்ளலாம். தொலைநோக்கி வைத்துப் பார்த்தால் அவை புள்ளி வடிவம் மாறி அகன்று கொஞ்சம் விவரங்களுடன் காணப்படும். நட்சத்திரங்கள் அவ்வாறல்ல. எந்தத் தொலைநோக்கிக்கும் அவை வெறும் புள்ளிகளே. நீங்கள் சொன்னது முக்கியமான விஷயம். கிரகங்கள் மாதத்திற்கு மாதம் வருஷத்திற்கு வருஷம் தினத்திற்குத் தினம்கூட இடப் பெயர்ச்சி பெறும். ஒவ்வொன்று ஒவ்வொரு விசையாகச் சூரியனைச் சுற்றி வருவதால் இம்மாதிரி இடப்பெயர்ச்சி ஏற்படுகிறது. நட்சத்திரங்கள் கிரகங்களைவிடப் பிரம்மாண்டமான தூரத்திலிருப்பதால் அவற்றின் பரஸ்பர இடப் பெயர்ச்சி மிகக் குறைவு. மிக நுட்ப ஆராய்ச்சி செய்து ஆயிரக் கணக்கான வருஷங்களில் ஓரளவு மாறுவதை கண்டிருக்கிறார்கள். அவ்வளவுதான். அசுவனி, பரணி,

கார்த்திகை, ரோகிணி, சப்தரிஷிகள், அக்கினி நட்சத்திரம் முதலியவைகளெல்லாம் ஒரே சித்திர அமைப்பாக எத்தினமும் பார்க்கலாம். கிரகங்கள் அவ்வாறல்ல. மாறி மாறிப் போவதைக் காணலாம்.

தீ: ஜோதிஷர்களுக்கு இதெல்லாம் தெரிந்த விஷயம்தானே! சரி, சந்திரனும் சூரியனும் ஒரே தொலைதானே? ஏன் சிரிக்கிறீர்கள்? நீங்கள் சொல்வதில் எனக்குக் கொஞ்சம் கலவரமாய்ப் போயிற்று. நம்முடைய சாஸ்திரம் கூட மறந்துபோயிற்று.

சே: சூரியன் வெகு தூரத்திலிருக்கிறான். சந்திரன் வெகு சமீபம். சந்திரனிடமிருந்து ஒளி நம்மை வந்து சேர ஒண்ணேகால் விநாடிதான் பிடிக்கும்.

தீ: இவ்வளவுதானா? இது ஒரு தொலையே யல்லவே?

சே: ஒண்ணேகால் விநாடியென்றால் இரண்டரை லட்சம் மைல் தூரம் என்று பார்த்துக்கொள்ளுங்கள். சுக்கிரன் அதற்கு நூறு மடங்கு தூரம். சூரியன் தொலை சந்திரன் தொலைக்கு நானூறு மடங்கு அதிகம்.

தீ: நீங்கள் சொல்வதெல்லாம் ஆச்சரியமாகத் தானிருக்கிறது. அக்கினி நட்சத்திரம் எவ்வளவு அழகாகப் பிரகாசிக்கிறது பாருங்கள். அது எத்தனை தூரம் என்கிறீர்கள்?

சே: நீங்களே கணக்குப் போடலாமே. எட்டரை ஒளியாண்டு தொலை. ஒரு வருஷத்தில் மூன்று கோடி விநாடிகளுக்குமேல் அடங்கும். ஒளியானது ஒரு

விஞடியில் கொஞ்சம் குறைய இரண்டு லட்சம் மைல் பாய்ந்துவிடும். ஆகையால் ஒரு வருஷத்தில் கோடி மைல் கோடி மைலாக ஆறு லட்சம் பாயும். இதுவே ஒரு ஒளியாண்டு. நான் முந்திச் சொன்ன முறையில் சொன்னல் இது ஆறுக்கு பன்னிரண்டு சுழி அடுக்கு. இதைப்போல் எட்டரை ஆகும். அக்கினி நட்சத்திரத்தின் தொலே. அதாவது ஐந்துக்குப் பதிமூன்று சுழி அடுக்கு மைலாகும்.

தீ: இதுவே ரொம்பப் பக்கமான நட்சத்திரம் என்கிறீர்கள்?

சே: ஆமாம், எட்டரை வருஷம்தானே அதன் தொலே? லட்ச வருஷங்கள் பிடிக்கும் தொலேயிலும் பல நட்சத்திரங்கள் இருக்கின்றன.

தீ: வேதாந்த மெல்லாம் தோற்றது போங்கள். நமோ நம:

௩

சே: வான் நூல் என்பது சூட்சும யந்திரங்களும், தொலே நோக்கிகளும், நிறச்சேதிக் குழாயும் அமைத்துக்கொண்டு நுட்பமான கணக்கும் கணித்து சோதனே யும் செய்து அறிஞர்கள் ஒப்புக்கொண்ட அறிவுத் தொகை. அதில் நான் சொன்னதெல்லாம் மிகச் சிறிய பாகம். இன்னும் எவ்வளவோ பெரிய விஷயங்கள் இருக்கின்றன. தொலேநோக்கி வைத்துப் புகைச்சோதிகள் இருபது லட்சம் கண்டிக்கிருர்கள். அவைகளில் மிகத் தொலேயிலுள்ளவை ($10^8$) எட்டடுக்கு ஒளி வருஷத் தொலே. எட்டடுக்கு ஒளி வருஷங்கள் என்

ருல் மைல் கணக்கில் இருபது அடுக்கு எண்ணிக்கை யாகும். இதற்கப்பாலுங்கூட விசுவ வெளி உண்டு, ஜோதிகளும் உண்டு. நம்முடைய தொலைநோக்கியி னுடைய வரம்பு பலத்தின் அளவே தொலையிலுள்ள புகைச் சோதியிலிருந்து ஒளிக் கிரணங்கள் நம்முடைய தொலைநோக்கியினுள் பாய்ந்து அதை நாம் காண்கி ரோம். இன்று நம் கண்ணுக்குள் பிரவேசிக்கும் கிர ணம் தன் தோற்றகத்திலிருந்து புறப்பட்டு $10^8$ வரு ஷங்களாயிற்று. அதன் விசையோ நிமிஷம் ஒன்றுக்கு ஒரு கோடி மைல். அதற்கும் அதிகமேயொழிய குறை வில்லை. அந்த விசையுடன் ஒவ்வொரு வினடியும பறந்து வந்த பிரகாசம் எட்டடுக்கு வருஷங்களுக்குப் பின் நம்மை வந்து சேர்ந்தது. இவ்வாறு அந்த ஒளி யாற்றின் ஒவ்வோர் ஒளிக்கணமும் ஒன்றை அடுத்து ஒன்று வந்துகொண்டிருக்கிறது. இன்று ஒரு சமயத் தில் நாம் தொலைநோக்கி வைத்துப் பார்க்கும் வெளிச்ச மானது நட்சத்திரத்தை விட்டகாலத்தில் இந்தப் பூவுல கத்தில் மனித சாதியே உற்பத்தியா யிருக்கவில்லை. அதன் யாத்திரா காலத்தில் இந்தப் பூமண்டலத்தில் முதலிலிருந்து கடைசி வரையில் எல்லாம் நடை பெற்றது.

தீ : சாஸ்திரிவாள், என்ன சொல்லுகிறீர்கள்? மனிதசாதி எப்போது உற்பத்தியானதென்கிறீர்கள்? அதற்கும் கணக்குப் போட்டுவிட்டார்களா?

சே : ஆகா, போட்டிருக்கிறார்கள். மனிதசாதியின் உற்பவம் மூன்று லட்ச வருஷங்களுக்கு முன்தான்

ஆனதாக ஆராய்ச்சி ஊகம். அதற்குமுன் வேறு உயிர்ச்சாதிகள் பல கோடி ஆண்டுகளாக இருந்தன.

தீ: போகட்டும் போங்கள். நம்முடைய பெரியவாள் கணக்கு கொஞ்சம் சரியாகத்தான் போயிற்று. கிறிஸ்தவர்கள் என்னவோ இது 1944-ம் வருஷம் என்கிறார்களே, அது தப்புத்தானே?

சே: அவர்கள் சொல்லும் கணக்கு கிறிஸ்து நாதர் பிறந்து இத்தனை ஆண்டு என்கிறார்கள். உலக சிருஷ்டி அவர்கள் வேதத்தில் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஒரே காலத்தில் ஆனதாகச் சொல்லப்படுகிறது.

தீ: அது தவறுதானே?

சே: ஆமாம், அதை அவர்கள் இப்போது ஒருவாறு தள்ளிவிட்டார்கள்.

தீ: தங்களுடைய மதம் பொய்யாய்ப் போச்சு என்று அவர்கள் இப்போதாவது ஒப்புக்கொள்ளுகிறார்களா?

சே: அந்த விஷயத்தில் மட்டும் ஒப்புக்கொள்கிறார்கள். ஆனால் மதத்தை அதனால் விட்டுவிடவில்லை.

தீ: அப்படித்தான் பிடிவாதம் செய்வார்கள். ஒன்று பொய்யானால் எல்லாம் பொய்தானே?

சே: அப்படி வாதித்தால் நம்முடைய சுருதிகளும் பொய்யாகிப் போமே.

நீ: சரி, விஷயம் சொல்லுங்கள். ஜகத்து முழுதும், உயிர்களும் நட்சத்திரங்களும் சூரிய சந்திராதிகளும் ஒரே சமயம்தானே சிருஷ்டிக்கப்பட்டன?

சே: இல்லை, இல்லை. இந்தப் பூமண்டலத்தில் உயிர் தோன்றியது முப்பது கோடி ஆண்டுகள் என்றும் பல தாவரங்களும் பல சாதி ஜந்துக்களும் உண்டாகிப் பிறகு பலகோடி வருஷங்களுக்குப் பின் மூன்று லட்ச வருஷங்களுக்கு முன் தான் மனிதசாதி தோன்றியதாகவும் தற்கால ஆராய்ச்சி ஊகம். நட்சத்திரங்கள் பூமியில் உயிர் தோன்றுவதற்குப் பல்லாயிர கோடி யாண்டுகளுக்கு முன்னரே இருந்துவந்தன.

நீ: சொல்லுங்கள்.

சே: இன்று தொலைநோக்கியின் வழியாக ஒரு புகைச் சோதியைப் பார்க்கும்போது அந்தக் காட்சிக்குக் காரணமான ஒளிக்கணங்கள் தம் தோற்றகத்தை விட்டுப் புறப்பட்ட நாளில் இந்தப் பூவுலகத்தில் உயிர் என்பதே கிடையாது. அதன் நெடும் யாத்திரையில் தொண்ணூற்றொன்பது பாகம் தீர்ந்து ஒரு பாகம் பாக்கி யிருந்தபோதுதான் மனிதசாதி உற்பவமாயிற்று. உற்பவமாகி, குரங்கு வாழ்விலிருந்து மனித வாழ்க்கைக்குத் தேறுவதற்குப் பல ஆண்டுகள் ஆயின. பிறகு நாகரிக வாழ்க்கைக்கு வேண்டிய சாதனங்களை மனிதன் அமைத்துக்கொண்டான். இன்னும் நாம் பேசிய அந்த ஒளிக் கிரணத்தின் யாத்திரை முடியவில்லை. நாகரிகம் வளர்ந்து அறிவு வளர்ந்து தொலைநோக்கிகளும் மற்ற நுண் கருவிகளும் பூவுல

இல் தோன்றின. பதினாயிரக்கணக்காக மானிடத் தலை முறைகள் உண்டாகி வாழ்க்கை நடத்திய பின்னர் தான் அந்தக் கிரணம் தன் யாத்திரையை முடித்து நம்முடைய தொலைநோக்கிக்குள் பிரவேசித்து நம் முடைய கண்ணை எட்டிற்று. அந்த யாத்திரையின் விசையோ, நிமிஷத்திற்கு ஒரு கோடி மைல். அதன் மேல் யாத்திரையின் தொலையைக் கற்பனை செய்து கொள்ளுங்கள்.

தீ : சுவாமி, போதும். இனிக் கேட்டுக்கொண்டே போனால் பைத்தியம்தான் பிடித்துவிடும்.

சே : இவ்வாறு கற்பனைக்கும் தாண்டிப்போன தொலைகளில் பிரம்மாண்டமான பரிமாணம்கொண்ட கோளங்கள் மகா வேகத்துடன் இயங்கிக்கொண்டே யிருக்கின்றன. ஒரு பானைக்குள் உளுந்து போட்டு மூடுவதுபோல் ஒரு சூரியனுக்குள் லட்சக்கணக்கான பூமண்டலங்களை அடைக்கலாம். அத்தகைய சூரியனைப் போல் பல சூரியன்களை ஒரு நட்சத்திரத்தில் போட்டு அடைக்கலாம்.

தீ : சொல்லுங்கள்.

சே : இந்தப் பூமண்டலம் சூரியனுக்கு ஒன்பது கோடி மைல் தூரத்தில் இருந்துகொண்டு மணிக்கு ஆயிரம் மைல் விசையில் சுழன்றுகொண்டு அதை விட எழுபது மடங்கு வேகத்தில் சூரியனை மையமாக வைத்து வட்டமிட்டுக்கொண்டு மிருக்கிறது. சுற்று வட்டத்தின் அளவு அறுபது கோடி மைல்கள். அறு பது கோடி மைல் பிரயாணம் ஒரு வருஷத்திற்குள்

முடிகிறது. மணி ஒன்றுக்கு எழுபத்திரண்டாயிரம் மைல் விசை.

தீ : எங்களையும் தூக்கிக்கொண்டு?

சே : ஆம் எங்களையும் ஹிமோத்கிரி, கங்கா, காவேரி, நான்கு திக்கிலுமுள்ள மகா சமுத்திரங்கள் எல்லாவற்றையுமே தூக்கிக்கொண்டு, ரயில் வண்டியில் நம்முடைய கூசா, பெட்டி, மூட்டை, மூட்டுப் பூச்சி, எறும்பு எல்லாவற்றையும் தூக்கிப் போவது போல், போகிறது. தினம் ஒரு சுழல் சுழன்று, கூடவே நெடும் பிரயாணமும் செய்கிறது. பூமி வட்டமிடும் இந்த அறுபது கோடி மைல் வட்டத்தையும் அதன் மையத்தில் நிற்கும் சூரியனையும் கிரகங்களையும் சேர்த்து ஒரு கடுகளவாகக் கற்பனை செய்துகொள்ளவும்.

தீ : ஏன் அப்படிச் செய்யச் சொல்லுகிறீர்கள்?

சே : ஒன்றுமில்லை. சொல்லுகிறேன் கேளுங்கள். இத்தனையும் சேர்ந்து ஒரு கடுகளவாகச் சுருங்கிப் போனதாக வைத்து, அதே வீதாசாரப்படி நட்சத்திரப் பிரதேசமும் குறுகிப் போனால் அது நம்முடைய பூமண்டலத்தளவாகவே நிற்கும். இந்தப் பிரம்மாண்ட விசுவ மண்டலத்தில் ஒரு கடுகளவுபோலாகும், அறுபது கோடி மைல் வட்டம்.

தீ : பூமண்டலத்துக்கும் ஒரு கடுகுக்கும் உள்ள வீதாசாரம் இந்த நட்சத்திரப் பிரதேசத்திற்கும் பூ

மண்டல கதி வட்டத்திற்கும் என்கிறீர்கள். ஆகா, அப்பிரமேயம் என்றால் இதுவே!

சே: சோதிக் கோளங்களின் எண்ணிக்கைக்குப் போனாலோ, அதுவும் இவ்வாறே அளவிட முடியாதது; தூசி நிறைந்த ஒரு பெரிய நகரத்தில் ஒவ்வொன்றாக எண்ணினால் எத்தனைத் தூசியணுக்கள் காற்றில் பறக்குமோ அத்தனையாகும். அத்தனைத் தூசி மொத்தத்தில் ஒரு தூசிக்கணமாகும் சூரியனும் அதற்குள்ளடங்கிய இந்தப் பூமண்டலமும் அதன் கதி வட்டமும். அந்தத் தூசியணுவினுக்குள் ஒரு லட்சத்தில் ஒரு பங்குகூட இல்லை, இந்தச் சாகரமும் மலையும் நதிகளும் நிறைந்த பூகோளத்தின் பரிமாணம். விசுவ மண்டலத்திலுள்ள சோதிக் கோளங்களின் மொத்த எண்ணிக்கைக்காகப் பெரியதொரு நகரத்தில் காற்றில் பறக்கும் தூசியணுக்களின் எண்ணிக்கையை உவமானமாகச் சொன்னேன். ஆனால் காற்றில் உள்ள தூசியணுக்கள் ஒன்றுக்கொன்று மிக நெருங்கிக் கிடக்கின்றன. விசுவ வெளியில் அம்மாதிரி நெருக்கடி கிடையாது. இத்தனைக் கோளங்களும் பைத்தியக்கார வேகத்துடன் ஒவ்வொன்றும் இயங்கிக்கொண்டிருக்க, ஒன்றோடொன்று யுகாந்தரத்திலும் மோத முடியாத அளவு ஒன்றுக்கொன்று அகன்று கிடக்கின்றன. நமக்கும் சூரியனுக்கும் ஒன்பது கோடி மைல் இடைவெளியென்றால் பார்த்துக் கொள்ளுங்கள். மற்ற இடைவெளிகளும் இதற்கு மேலேயே. ஒரு பெரிய நகரத்திலுள்ள தூசியணுக்

களின் எண்ணிக்கை ஆகும் நட்சத்திரங்களின் எண்ணிக்கை. இந்தத் தூசித்திரளை ஒரு தூசியணுவுக்கும் மற்றொரு தூசியணுவுக்கும் ஒரு பர்லாங்கு இடைவெளிவைத்து அமைத்தால் எல்லா தூசித் துகள்களும் அடங்க நிலையிடம் எவ்வளவு பரிமாணமாகும்? இது விசுவ மண்டலப் பாழின் பரிமாணம். கற்பனை செய்யப் பார்த்தோமானால் அப்பிரமேயத்துவம் என்றால் என்ன என்பது ஒருவிதமாக உணர்ச்சிக்கு வரலாம்.

தீ: ஆகா! இது வேதாந்தம் என்று நீங்கள் முதலில் சொன்ன சொல் முழுதும் உண்மை. சொன்னாலும் கேட்டாலுமே இதில் புண்ணியம் உண்டு.

சே: இந்தப் பூமண்டலத்தின் பாரத்தையும் அளந்திருக்கிறார்கள்.

தீ: பாரம் கூடவா எடைபோட்டு விட்டார்கள்? சொல்லுங்கள்.

சே: ஆமாம், சூரியனுடைய பாரத்தையும் ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள். எல்லாம் வெகு நுட்பமான கணித சாஸ்திர முறையில் செய்து முடித்திருக்கிறார்கள். வெறும் பேச்சல்ல.

தீ: சொல்லுங்கள். நீங்கள் சொல்லுவதையெல்லாம் நம்பித்தான் தீரவேண்டும்.

சே: நிறையைப்பற்றிச் சோதனை செய்திருப்பதில் பூமியின் நிறை ஒரு கால்ரூபா எடையாக வைத்துக்கொண்டால், தாரதம்மிய வீதாசாரப்படி சூரியன் ஒரு

டன் பாரமாகும். ஒரு டன் என்ருல் தெரியுமோ இல்லையோ?

தீ: ஆகா! ரயில் வண்டியில் பாரம் ஏற்றுகிருர்களே, அதுதானே?

சே: ஆமாம், ஒரு டன் எங்கே? ஒரு கால் ரூபாய் எடை எங்கே? இரண்டு மாடுகள் பூட்டிய ஒரு வண்டியில் ஐந்து பேர்கள் உட்கார்ந்தால், மனிதர்கள், மாடுகள், வண்டி எல்லாம் சேர்ந்து ஒரு டன் பாரமாகலாம். பூமியின் பாரம், டன் கணக்கில் சொன்னுல், ஆறுக்குப் பின் இருபத்தொரு சுழிகளிட்ட எண்ணிக்கை. இவ்வளவு பாரமான பூமி ஒரேஒரு கால் ரூபாய் எடையானுல், சூரியன் ஒரு டன் பாரமாகும். அக்கினி நட்சத்திரம், அந்த வீதாசாரத்தில் மூன்று டன் பாரமாகும்.

தீ: எல்லாம் மாயைபோல்தான் சொல்லுகிறீர்கள்!

சே: மாயையல்ல, தீக்ஷிதர்வாள், எல்லாம் மிக்க சாதுரியமாக நிருமாணிக்கப்பட்ட யந்திரங்களை அமைத்துக்கொண்டு கணித சாஸ்திரத்தின் நுட்பங்களைப் பயன்படுத்தி மிக்க கவனத்தோடு சோதித்துச் சொல்லப்பட்ட விஷயங்கள். பூர்வீகர்கள் கிரகணங்களைக் கணித்துச் சொல்லவில்லையா? இப்போது தொலைநோக்கிகளும், நுண் நோக்கிகளும், நிறச்சேதிக் குழாயும் வைத்துச் சோதித்து நம்முடைய கண்களைக் காட்டிலும் சூட்சுமமாகப் பதிவுசெய்யும் ஒளிப்பதிவுக் கருவிகளையும் அமைத்துக்கொண்டு பிரம்மாண்ட தொலைகளி

லுள்ள பொருள்களின் ரகசியங்களையும் கண்டு வரு கிறார்கள். பௌதிக சாஸ்திர ஆராய்ச்சிக்காரர் கள் அவசரப்படுவதில்லை, மயங்குவதில்லை, அகங்காரப் படுவதில்லை, தாம் எண்ணியதே மெய் என்று அவர் களில் ஒருவரும் பிடிவாதம் செய்வதுமில்லை, கோப மில்லை, துவேஷமில்லை. இதனால் அறிவுத் தொகையின் பிரவாகம் சுத்த கங்கைபோல் பெருகி வருகிறது. நம் முடைய சிற்றறிவுக்கு அடங்கவில்லை என்று ஜகத்தைப் பொய் அல்லது மாயை என்று சொல்லிவிடலாமா?

தீ: எறும்பு தன்னறிவுக்கு எட்டாத யானையைப பற்றிச் சொல்லக் கேட்டு யானையே பொய் என்று சொல்லுவதுபோல் என்கிறீர்கள்.

சே: சரியாகச் சொன்னீர்கள். உலகத்திலுள்ள கடற்கரைகளையெல்லாம் ஒன்றுகூட்டி அந்தக் கடற் கரை மணலையெல்லாம் குவித்தால், அந்த மணற் குவியலில் ஒரு மணலின் ரவையாகும் இந்தப் பூமண்ட லம். அதைத் தொத்திக்கொண்டு நிற்கின்றன மனித சாதியும் பறவை மிருக பூச்சி புழு வர்க்க கோடிகளும் கடலிலுள்ள நீர்வாழுயிர்களும். இவ்வளவு அற்பமான மனிதன் உலகத்தையே அளக்கப் பார்க்கிறான். ஈசு வர ரகசியத்தையும் ஓரளவு கண்டு மீதியையும் காண ஆசைப்படுகிறான். உலகமே தனக்காக ஆன சிருஷ்டி என்றும் எண்ணுகிறான்.

தீ: இதன் மத்தியில் நம்முடைய சந்தோஷம், சுகம், துக்கம், பொறாமை, கோபம், துவேஷம், கலகம்!



ROJA MUTHIAH
KOTTAIYUR

சாஸ்திரிவாள்! வான் நூலும் பௌதிகமும், தாங்கள் சொன்னபடியே விசுவரூப தரிசனம்தான். அதிசயோக்தியல்ல. நமோ நமஃ இந்தச் சித்திரையிலாவது வேங்கடராமனுக்கு முகூர்த்தம் நிச்சயம் செய்துவிட வேண்டும். பெண்ணுக்கும் வயதாய்விட்டது. இனித் தள்ளி வைக்கக்கூடாது. வீட்டில் ரொம்ப நிர்ப்பந்தம் செய்கிறாள். உங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. நமோ நம:

# 16

## ஊருக்கு நல்லது*

எனக்குப் படிக்கத் தெரியும். படிக்கத் தெரியாதவனை அழைத்து, படிக்கக் கற்றுக் கொடுப்பேன்.

முதலில் சிறிய புத்தகம் படி, பிறகு நீயாகவே எதையும் படிப்பாய் - என்று சொல்லுவேன்.

திண்ணைகளெல்லாம் சின்னச் சின்ன பள்ளிக் கூடங்களாக வேண்டும்.

படிக்கத் தெரிந்த எவனும் சும்மா இருக்கக் கூடாது. மற்றவர்களுக்குச் சொல்லித் தரவேண்டும்.

* * * *

உழைப்பு தேகத்திற்கு பலம் கொடுக்கும். உழைப்பைப் போலவே விளையாட்டும் வேடிக்கையுங்கூட அவசியம். உழைப்பும் உற்சாகமும் நிறைந்த ஊர் எல்லா விதத்திலும் செழிக்கும்.

---

* வயது வந்த கிராமவாசிகள் எழுதப் படிக்கக் கற்றபின் படிப்பதற்காக எழுதி கொட்டை எழுத்தில் அச்சிட்ட ஒரு புத்தகம்.

ஒழிந்த வேளைகளில் ஏதாவது ஒரு வேலை செய்து கொண்டிருக்க வேண்டும். புழைக்கடையில் இடம் இருந்தால், காய்கறித் தோட்டம் போட்லாம்.

தேன்கூடு வைத்து வளர்க்கலாம். நூல் நூற்கலாம், கீற்று முடையலாம், கயிறு திரிக்கலாம். இன்னும் பல வேலைகள் உண்டு. எதையாவது உண்டாக்க வேண்டும். காலத்தை வீணுக்கக்கூடாது.

* * * *

நோய்களுக்குக் காரணம் அழுக்கு. உடம்பும் துணியும் அழுக்கு இல்லாமல் வைத்துக் கொள்ளவேண்டும்.

வீட்டையும் வாசலையும் புழைக்கடையையும் சுத்தமாக வைத்துங்கொள்ள வேண்டும். ஊரின் சுத்தத்தையும் நாம் ஒவ்வொருவரும் கவனிக்கவேண்டும்.

குப்பையும் மலமும் கண்ட இடத்தில் போடக் கூடாது. போட்டால் காற்றைக் கெடுத்துவிடும். குறிப்பிட்ட இடத்தில் குழி தோண்டி அதிலேயே போட வேண்டும்.

இப்படிச் செய்தால் அது நல்ல உரமாகும். அதை வயலில் போட்டு உழுதால் நல்ல பயிர் உண்டாகும்.

வீட்டிலுள்ள அழுக்கைத் தெருவில் போடுவது நமக்கும் நஷ்டம், மற்றவர்களுக்கும் கஷ்டம்.

* * * *

அரிசியை அதிகம் தீட்டுவதால் அதன் சத்து போய்விடுகிறது. மில் அரிசியில் சத்து இல்லை.

குத்தின் அரிசிதான் சாப்பாட்டுக்கு உபயோகப்படுத்த வேண்டும்.

உலக்கைக்குப் பதில் சில ஊர்களில் ஏற்றம்போல ஒரு யந்திரம் அமைத்து மிதித்துக் குத்துவது உண்டு.

அப்படிச் செய்வதனால் கை உலக்கையைக்கொண்டு உரலில் குத்துவதைவிட அதிகமாகக் குத்தலாம்.

*      *      *      *

கேழ்வரகு, சோளம், கம்பு முதலிய தானியங்களை ஒரு வேளையாவது போஜனத்தில் சேர்த்துக்கொண்டால் தேகத்திற்கு பலம் உண்டாகும்.

தேக ஆரோக்கியத்திற்குப் பாலோ, தயிரோ, அல்லது மோரோ, சாப்பாட்டில் சேரவேண்டும்.

சாதாரணமாகக் காய் கிழங்குகளை வேகவைத்துக் குழம்பு கறியாக்கிச் சாப்பிடுகிறோம்.

சில காய் கிழங்குகளைப் பச்சையாகவே சாப்பிடலாம். அவைகளைப் பச்சையாகச் சாப்பிடுவதே தேகத்திற்கு நல்லது.

*      *      *      *

அழுக்கடைந்த நீரைக் குடிப்பதால் பல வியாதிகள் உண்டாகும்.

குடிதண்ணீருக்கு உபயோகப்படும் கிணற்றில் யாரும் கால் வைக்கக்கூடாது. அதில் துணி தோய்க்கக்கூடாது. அழுக்குப்பட்ட பாத்திரத்தைவிட்டு ஜலம் மொள்ளக்கூடாது.

ஆற்றுக்கும்குளத்துக்கும் பக்கத்தில் மல ஜலம் கழிப்பது பெரும்பாவம்.

இப்படிச் செய்வதால் நரம்புச் சிலந்தி, காலரா, சீதபேதி முதலிய வியாதிகள் உண்டாகும்.

அழுக்கானது தண்ணீருக்குள் கலந்து கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து போகும். ஆனாலும் அது வியாதியை உண்டாக்கும்.

ஊர் தெருக்களில் அல்லது நடக்கும் பாதைகளில் மல ஜலம் கழிப்பது அநாகரிகம். மறைவான இடங்களில் இருந்து கழிக்கவேண்டும். துர்நாற்றம் உண்டாகாதபடி உடனே மண்ணைப்போட்டு மூடிவிட வேண்டும்.

ஒவ்வொருவரும் இந்த ஆசாரத்தை அனுசரித்து ஊரின் நாகரிகத்தையும் ஆரோக்கியத்தையும் காப்பாற்றவேண்டும்.

குழந்தைகளுக்கும் இவ்வாறு செய்யும்படிச் சொல்லித் தரவேண்டும்.

நம்முடைய வீடும் நம்முடைய ஊரும் அழகாக இருக்கவேண்டும்.

* * * *

சாப்பிடும் பொருள்களின்பேரில் ஈக்கள் உட்கார விடக்கூடாது. மூடிவைக்க வேண்டும்

கண்ட இடங்களில் ஈ உட்காருவதால் அதன் கால்களிலும் அதற்கிருக்கும் சிறு தும்பிக்கையிலும் வியாதிப் புழுக்கள் படிந்த அழுக்கு இருக்கும்.

அது கண்ணுக்குத் தெரியாது. ஆனால் அது நாம் உண்ணும் பண்டங்களில் சேர்ந்தால் வியாதி பரவும்.

## ஊருக்கு நல்லது

சாக்கடை ஜலம் முதலிய அசுத்தமான நீரைத் தேங்கி நிற்கவிடக் கூடாது. அதை உடனே தோட்டத்திற்கு உபயோகித்துவிட வேண்டும். அல்லது புது மண்ணோடு நன்றாய்க் கலந்து வெயில்பட்டு உலர்ந்துபோகச் செய்யவேண்டும்.

தேங்கி நிற்கும் நீரில் கொசுக்கள் வளரும். அவை நம்மைக் கடித்து, பல வியாதிகளை ஒருவரிடமிருந்து இன்னொருவர் உடலில் புகுத்தும்.

ஆகையால் கொசுக்கள் விருத்தியாகாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். இதற்கு, முக்கியமாக, வீட்டுக்குப் பக்கத்தில் எங்கேயும் ஜலம் தேங்கி நிற்காமல் பார்த்துக்கொள்ளவேண்டும்.

உடுக்கும் துணிகளை தினமும் தோய்த்து வெயிலில் உலர்த்திச் சுத்தமாக வைத்துக்கொள்ளவேண்டும்.

ஒருவர் துணியை மற்றொருவர் உடுத்துவது பிசகு. உடுக்கும் துணிகளைப் போலவே படுக்கைத் துணிகளையும் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும்.

அவைகளைக் காற்றும் வெயிலும் படும்படியாக அடிக்கடி வெளியில் போடவேண்டும். கூடியவரை தோய்க்கவும் வேண்டும்.

வீடுகளுக்குச் சுண்ணாம்பு அடிப்பது மிகவும் நல்லது. வீட்டில் மூலை முடுக்குகளில் தூசி குப்பை தங்காமல் பார்த்து வருவது நன்மை தரும்.

வீட்டிலுள்ள சாமான்கள் கண்டபடி கிடக்க விடக்கூடாது. ஒழுங்காக வைக்கவேண்டும்.

அளவுகள்

ஒரு அடியைப் பன்னிரண்டு பாகமாகப் பிரித்தால் ஒவ்வொரு பாகத்திற்கும் ஓர் அங்குலம் என்று பெயர். ஆகையால் பன்னிரண்டு அங்குலம் ஓர் அடி. ஒரு சாண் நீளத்தில் ஒன்பது அங்குலம் இருக்கும். ஒரு முழத்தில் பதினெட்டு அங்குலம் இருக்கும். மூன்று அடி நீளம் ஒரு கெஜம். ஒரு மைலுக்கு 1760 கெஜம்.

நிலப்பரப்பு அல்லது மரப் பலகை முதலியவைகளைச் சரியாக அளவிட நீளம், அகலம் இரண்டையும் கவனிக்கவேண்டும்.

ஒரு அடி நீளம் ஒரு அடி அகலம் கொண்ட பரப்புக்கு ஒரு சதுர அடி என்று பெயர். இரண்டு அடி நீளம் இரண்டு அடி அகலத்தில் நான்கு சதுர அடி இருக்கிறது. இதைக் கீழே பாருங்கள்.



ஒரு சதுர கெஜத்தில், மூன்று அடி நீளம் மூன்று அடி அகலம். ஆகையால் ஒரு சதுர கெஜத்தில் ஒன்பது சதுர அடி சேரும்.



வயல் எப்போதும் நேர் வடிவம் கொண்டதாக இருக்காது. ஒரே பரப்பளவுகொண்ட இரண்டு வயல்களில் வடக்கு-தெற்கு அளவு அதிகமாகக் கொண்ட வயலின் கிழக்கு-மேற்கு அளவு குறைந்திருக்கும்.

ஒரு ஏகரா என்ருல் என்ன?

நல்ல சதுரமான வடிவம்கொண்ட ஒரு ஏகரா நிலத்தை வரப்புப் போட்டுப் பத்து சமபாகமாகப் பிரித்தால் ஒவ்வொரு வயலும் 22 கெஜ நீளமும், 22 கெஜ அகலமும் உள்ளதாகும்.

கன அளவு என்ருல் கிணறு அல்லது குழி வெட்டும் கணக்கு. 4 அடி நீளம், 5 அடி அகலம், 2 அடி

ஆழம் வெட்டினால், மூன்றையும் பெருக்கி, 40 கன அடி ஆகும்.

6 அடி நீளம், 3 அடி அகலம், 3 அடி ஆழம் வெட்டினால், 54 கன அடி ஆகும்.

குழி பறித்து எடுத்த மண்ணுக்கும் இவ்வாறே கணக்கு.

அணா ஒன்றுக்குப் பன்னிரண்டு பைசா, பதினாறு அணா ஒரு ரூபாய் என்பது எல்லாருக்கும் தெரியும்.

ஒரு ரூபாய் எடை ஒரு தோலா
மூன்று தோலா ஒரு பலம்
எட்டு பலம் ஒரு சேர்
ஐந்து சேர் ஒரு வீசை
எட்டு வீசை ஒரு மணங்கு
இருபது மணங்கு ஒரு பாரம்

தமிழ் நாட்டில் ஒரு சேர் என்றால் 24 ரூபாய் எடை; வட நாட்டில் 80 ரூபாய் எடையை ஒரு சேர் என்பார்கள்.

ஆகையால் வட நாட்டுச் சேர் ஒன்றுக்கு நம்முடைய சேர் மூன்று ஆகி எட்டு தோலா கூடவும் இருக்கும். வடநாட்டுச் சேர்தான் ரயில் கணக்கு.

60 விநாடி கொண்டது ஒரு நிமிஷம்
60 நிமிஷம் கொண்டது ஒரு மணி

இரவு 12 மணி
பகல் 12 மணி

ஆக ஒரு நாளில் 24 மணி

## ஊருக்கு நல்லது

ஒரு வருஷத்தில் 365 நாட்கள்

ஜனவரி மாதம் 31 நாட்கள்
பிப்ரவரி மாதம் 28 நாட்கள்.
மார்ச்சு மாதம் 31 நாட்கள்
ஏப்ரல் மாதம் 30 நாட்கள்
மே மாதம் 31 நாட்கள்
ஜூன் மாதம் 30 நாட்கள்
ஜூலை மாதம் 31 நாட்கள்
ஆகஸ்டு மாதம் 31 நாட்கள்
செப்டம்பர் மாதம் 30 நாட்கள்
அக்டோபர் மாதம் 31 நாட்கள்
நவம்பர் மாதம் 30 நாட்கள்
டிசம்பர் மாதம் 31 நாட்கள்

ஆக 12 மாதங்களில் 365 நாட்கள்

இது ரோமானிய பஞ்சாங்க முறை. இதுவே இப்போது வழங்கும் அரசாங்க முறை.

தமிழ் வருஷத்திலும் 12 மாதங்கள்

| | | |
|---|---|---|
| சித்திரை | வைகாசி | ஆனி |
| ஆடி | ஆவணி | புரட்டாசி |
| ஐப்பசி | கார்த்திகை | மார்கழி |
| தை | மாசி | பங்குனி |

ஒரு மாதத்தில் உள்ள தனித்தனி நாட்களுக்குத் தேதி என்று பெயர்.

வெள்ளைக்காரருடைய வருஷம் ஜனவரி முதல் தேதியில் ஆரம்பம். தமிழ் வருஷம் சித்திரை முதல்

தேதியில் ஆரம்பம். வெள்ளைக்கார வருஷ ஆரம்பம் அனேகமாகத் தமிழ் மார்கழி பதினெட்டோடு சேரும்.

* * * *

வைத்தியர்கள் 'ஒரு சிறு கண்ணாடிக் குழாய் வைத்திருப்பார்கள். அந்தக் குழாயில் கோடுகள் கீறப்பட்டிருக்கும். உள்ளே பாதரசம். உடலின் சூடுபட்டவுடன், குழாய்க்குள்ளிருக்கும் பாதரசம் பொங்கி மேலே ஏறும். சூட்டின் அளவுக்கு ஏறும். இதைக் கொண்டு சுரத்தின் வேகத்தைத் திட்டமாக வைத்தியர்கள் அளந்து தெரிந்து கொள்ளுவார்கள். ஆரோக்கிய நிலையில் எல்லாருடைய உடம்பும் ஒரே அனல் பதன் காட்டும். இது ஓர் ஆச்சரியமான விஷயம். அதற்குமேல் கொஞ்சம் ஏறினாலும் சுரம்.

விவசாயம்

பாடு பட்டால்தான் விவசாயம் பயன் தரும். ஒரு நிலத்தைப்போல் ஒரு நிலம் இல்லை. ஒவ்வொரு மண்ணில் ஒவ்வொரு பொருள் நன்றாக விளையும். வண்டல் பூமியில் நெல் நன்றாக விளையும். கரிசல் நிலம் பருத்தி, சோளம், கோதுமை இவைகளுக்கு ஏற்றது. செவ்வல் நிலத்தில் சாதாரணப் புஞ்சை தானியங்களும் கடலைக் கொட்டையும் நன்றாக விளையும். மணல் பூமியில் தென்னை, பனை, சவுக்கு மரம் இவை நன்றாக வளரும்.

மனிதனுக்கு வியாதிகள் இருப்பதுபோல் பயிர்களுக்கும் நோய்கள் உண்டு. நோய்ப்பட்ட பயிர்களை அடியோடு அழித்துவிட வேண்டும். இல்லாவிட்டால் அடுத்த மகசூலும் கெட்டுவிடும்.

## ஊருக்கு நல்லது

ஒரு நிலத்தில் எப்பொழுதும் ஒரே பயிரைச் சாகுபடி செய்தால் நிலத்தின் சாரம் குறைந்து போகும். பயிர் மாற்றிச் சாகுபடி செய்வது நலம்.

தன் நிலத்தின் தன்மையை அறிவது குடியானவனுக்கு அவசியம். சொந்த அனுபவத்தோடு விவசாய இலாகா உத்தியோகஸ்தர்களிடம் கேட்டும் அறிந்து கொள்வது நல்லது. விவசாயத்தையே ஒரு படிப்பாகச் சொல்லித்தர கோயமுத்தூரில் ஒரு பெரிய பள்ளிக்கூடம் நடத்துகிறார்கள். அதில் படித்துத் தேர்ந்தவர்கள் விவசாய இலாகாவில் உத்தியோகம் பார்க்கிறார்கள்.

* * * *

விதை கலப்பில்லாமலும் சத்துள்ளதாகவும் இருக்க வேண்டும். விதைக்காகவே தனியாகப் பயிர் செய்வது நல்ல முறை. அதில் கலப்புப் பயிர்களைக் கவனித்துப் பிடுங்கி எறிந்துவிட வேண்டும். நோய்ப்பட்ட பயிரிலிருந்து விதை எடுக்கலாகாது.

ஒரு ஊரிலிருப்பவர்கள் கூட்டாக விதை தயார் செய்துகொள்ளலாம். அல்லது சிலர் ஒன்று சேர்ந்து நல்ல விதை பயிர் செய்து மற்றவர்களுக்கு விலைக்குக் கொடுக்கலாம்.

விதைக்கென்று வைத்திருக்கும் தானியத்தை என்ன கஷ்டம் வந்தாலும் விற்றுவிடக் கூடாது. பெற்ற பிள்ளையைப்போல் அதை மதித்துக் காப்பாற்ற வேண்டும். தானியம் நன்றாய்க் காய்ந்த பிறகுதான்

விதைக்கு எடுத்து வைக்கவேண்டும். ஈரம் கூடாது. பூச்சி வரவிடக்கூடாது.

விதையை வயலில் மிதமிஞ்சித் தெளிப்பதில் பய னில்லை. வீண் நஷ்டம்.

* * * *

பயிரானது மண்ணிலிருந்து சத்தை உறிஞ்சிக் கொள்ளுகிறது. சத்தை ஈடு செய்யாவிட்டால் நிலத் தின் வளம் குறைந்துபோகும். ஒவ்வொரு அறுவடைக் குப் பிறகும் வயலுக்கு உரம் போடவேண்டும்.

நமக்கு வேண்டாதனவெல்லாம் வயலுக்கு நல்ல எருவாகும். சீனுவிலும், ஜப்பானிலும் மலத்தைப் பொன்னுகக் கருதிச் சேகரித்துவைத்து வயலில் போடு கிறுர்கள். மாட்டின் சாணி மட்டுமல்ல, மூத்திரமும் உயர்ந்த எருவாகும். எதையும் வீணுக்கலாகாது. மாடு கட்டும் இடங்களில் மணலையும் வைக்கோலையும் நன்ருகப் பரப்பி அவைகளை தினசரி குப்பைக் குழி யில் சேர்க்க வேண்டும். குப்பையில் அதிக வெயில் படாமலும் தண்ணீர் தேங்காமலும் இருந்தால் நல் லது. பச்சைத் தழைகள் நல்ல உரம். அவைகளைச் சேர்த்துக் குப்பைக் குழியில் போடவேண்டும்.

* * * *

புண்ணுக்கு மிக நல்ல உரம். எள், கடலை, கொட்டை முத்து, வேப்பங்கொட்டை முதலிய புண் ணுக்குகள் மிகவும் நல்லது. எலும்புத் தூள் மேன்மை யான உரம். எலும்பை அசுத்தமென்று ஒதுக்குவது

சரி, ஆனால் அதை வீணாக்கக்கூடாது. எருவாக்கி உப யோகிக்க வேண்டும்.

இயற்கை உரங்களைத் தவிர ஆலைகளில் செய்யப் பட்ட உரங்களையும் வாங்கி உபயோகிக்கலாம். ஆனால் இயற்கை உரங்களே மேலானவை.

கைத்தொழில்

விவசாயமும் கிராமக் கைத்தொழில்களும் செழிக் காமல் போனால் நாம் கெட்டுப் போவோம்.

உணவுக்குப் பிறகு நமக்கெல்லாம் உடுக்கத் துணி மிக்க அவசியமானது. உடைக்கு வேண்டிய துணியை கிராமத்திலேயே நெய்துகொண்டால் ஏழைக் குடும் பங்களுக்குத் தொழில் உண்டாகும். ஒழிந்த நேரங் களில் குடியானவர்கள் நூல் நூற்கவேண்டும். அந்த நூலை நெசவுக்காரனிடம் கொடுத்து, துணி நெய்து கொள்ளலாம். சீமைத் துணி வாங்கிக் கட்டுவதில் பணம் வீணாகிறது.

*　　*　　*　　*

வீடு கட்டுவதற்கும், கலப்பை பண்ணுவதற்கும், வண்டி சீர் செய்வதற்கும், இராட்டை பழுது பார்ப் பதற்கும், தச்சன் அவசியம். உள்ளூர்த் தச்சனுக்கு வேலையும் சரியான கூலியும் இல்லாமல் போனால் ஊரைவிட்டுப் போய்விடுவான். பிறகு அவசரத்திற் குத் தச்சன் கிடைக்கமாட்டான். கொத்தனும் அப்படியே.

சமையல் செய்வதற்குப் பித்தளைப் பாத்திரங்களை விட மண்பாண்டங்களை உபயோகப்படுத்துவது மேலானது. ஊர்க் குயவனை ஆதரிக்கவேண்டும். அப்படியே ஊரிலுள்ள கொல்லன், தட்டான், பாய் முடைபவன், கயிறு திரிப்பவன், கூடை பின்னுகிறவன் முதலிய தொழிலாளர்களையும் ஆதரிக்கவேண்டும்.

அன்னிய நாட்டுச் சாமான்களை வாங்கி உள்ளூர்த் தொழிலாளிகளைப் பட்டினி போடுவது பெரிய தப்பு.

* * * *

தொழில் செய்பவனுக்குத் தகுந்த கூலி கொடுக்க வேண்டும். தொழில் செய்பவனும் மனம் செலுத்தி மோசமில்லாமல் வேலை செய்யவேண்டும். மேல்பார்வை இல்லாமல் யோக்கியமாக வேலைசெய்யும் வழக்கம் நமக்கெல்லாம் ஏற்பட வேண்டும். அப்போது தொழிலுக்குத் தகுந்த கூலியும் ஏற்படும். எந்தத் தொழிலிலும் மேல் பார்வைக்காக இப்பொழுது அதிக பணம் வீணாகச் செலவாகிறது. இதனால் தொழிலாளிகள் நஷ்டப்படுகிறார்கள்.

## இந்தியா

நமது தேசம் இந்தியா. பாரத தேசம் என்றும் ஹிந்துஸ்தான் என்றும் சொல்லுவதுண்டு. இந்தியாவுக்கு வடக்கு எல்லை இமாலய மலைத் தொடர். அது இங்கிருந்து 1500 மைல் வடக்கே இருக்கிறது. உலகத்திலுள்ள மலைகளிலெல்லாம் அது உயரமானது. இமயமலையிலிருந்து கங்கை, சிந்து, யமுனை, பிரம்ம

புத்திரி முதலிய பெரிய நதிகள் உண்டாகி ஓடுகின்றன. அந்த நதிகளின் கரைகளில் செழிப்புள்ள நாடுகளும் பல பெரிய நகரங்களும் இருக்கின்றன.

இந்தியாவின் வடக்கு எல்லை இமயமலை. மற்றப் பக்கங்களில் கடல். கல்கத்தா, சென்னை, பம்பாய், கராச்சி இவை பெரிய துறைமுகங்கள். வியாபாரக் கப்பல்கள் இந்தத் துறைமுகங்களில் சரக்குகள் ஏற்றவும் இறக்கவும் செய்யும்.

தமிழ் நாடு

நாமிருக்கும் தமிழ் நாடு இந்தியாவின் தெற்குக் கோடி. இந்தியாவின் தென் பாகத்தில் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், இந்த பாஷைகள் பேசுகிறோம். வடக்கே அனேகமாக ஹிந்துஸ்தானியும் அதைச் சார்ந்த வேறு சில பாஷைகளும் பேசுகிறார்கள்.

சென்னை மாகாணத்தில் வடக்கு ஜில்லாக்கள் தெலுங்கு தேசம். தெற்கே தமிழ் நாடு. சென்ன பட்டணம் ஒரு பெரிய நகரம். அங்கே சென்னை மாகாண சர்க்காரின் தலைமை உத்தியோகஸ்தர்கள் இருந்து வேலை பார்க்கிறார்கள்.

* * * *

தமிழ் ஜில்லாக்கள் செங்கற்பட்டு, வட ஆற்காடு, தென் ஆற்காடு, தஞ்சாவூர், திருச்சினாப்பள்ளி, மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி, சேலம், கோயமுத்தூர், நீலகிரி.

தமிழ் நாட்டின் முக்கிய நதிகள் காவேரி, தென் பெண்ணை, பாலாறு, வைகை, தாம்பிரபரணி. காவேரியாறு குடகு நாட்டில் உற்பத்தியாகி, காவேரிப்பட்டினத்தருகில் கடலில் சேருகிறது.

தமிழ் நாட்டில் பல கோயில்களும் அழகான ஊர்களும் இருக்கின்றன. காஞ்சீபுரம், திருவண்ணுமலை, சிதம்பரம், பழனி, மதுரை, ராமேசுவரம், ஸ்ரீரங்கம், தஞ்சாவூர், கும்பகோணம், திருவாரூர், வில்லிபுத்தூர் இன்னும் பல உண்டு.

தமிழ் நாடு பல்லாயிரம் வருஷங்களாக நாகரிகமடைந்த நாடு. முன்காலத்தில் மூன்று பாகமாகப் பிரிவு பட்டிருந்தது. வடபாகம் சோழநாடு. மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்கள் பாண்டிய நாடு. திருவனந்தபுரம், கோயமுத்தூர், சேலம், மலையாளம் இவை சேரநாடு.

*     *     *     *

சேர சோழ பாண்டிய அரசர்களுக்குப் பின், நானூறு வருஷங்களுக்குமுன் வரையில் தமிழ் நாட்டை விஜயநகரத்து அரசர்கள் தெய்வ பக்தியும் தேச பக்தியும் கொண்டு நியாயமாக அரசு புரிந்தார்கள். பிறகு பாளையக்காரர்கள் அல்லது சிற்றரசர்கள் மதுரை முதலிய இடங்களில் அரசாங்கம் நடத்தி வந்தார்கள். அதன் பிறகு, மகம்மதிய நவாபுகள் தமிழ் நாட்டை ஆண்டார்கள். அவர்களுக்குப்பின் ஆங்கிலேயருடைய ஆதிக்கம் வந்தது.

## ஊருக்கு நல்லது

சென்ற நூற்றைம்பது வருஷங்களாக இந்தியா முழுதுமே ஆங்கிலேயர் ஆதிக்கத்திற்குள் இருந்து வருகிறது. இனி நாமே நம்முடைய நாட்டைக் குடியரசு முறையில் சுதந்தரமாக நடத்திக்கொள்ள வேண்டும். கலகமில்லாமல் அமைதியாக நம்முடைய நாட்டை நாமே ஆள ஆரம்பிக்கவேண்டும்.

### அரசாங்கம்

அரசாங்கம் இல்லாமல் ஜனங்கள் வாழ முடியாது. கலகம் கொள்ளை முதலியன நடவாமல் தேசத்தைச் சரியாகக் காக்க வேண்டும். ஜனங்களுக்குள் ஏற்படும் வழக்குகள் நியாயமாகத் தீரவேண்டும். பொது நன்மைக்காகச் செய்யவேண்டிய பல காரியங்கள் உண்டு. அவை தனியாட்களால் செய்யமுடியாது. அதையெல்லாம் கவனிக்க அரசாங்கம் வேண்டும்.

* * * *

அரசாங்கம் நல்ல முறையில் நடத்தப்படாவிட்டால் ஜனங்கள் கஷ்டப்படுவார்கள். குடிகளின் சம்மதத்தின்பேரில் நடக்கும் அரசாங்கமே இந்தக் காலத்திற்குத் தகும்.

எல்லோரும் சேர்ந்தாற்போல் கும்பலாக அதிகாரம் செலுத்த முடியாது. அதற்காகப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்பவேண்டும். நல்ல பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தால் நல்ல வழியில் அரசாங்கம் நடக்கும்.

### பத்திரிகைகள்

பத்திரிகைகளைப் படித்தால் உலகத்தில் நடக்கும் சமாசாரங்கள் தெரியும்.

பத்திரிகைகளிலாவது புத்தகத்திலாவது சொன்னதெல்லாம் உண்மை என்று எடுத்துக்கொள்ளக் கூடாது. விவேகத்தை உபயோகித்து எது பொய் எது உண்மை என்று ஆராய்ந்தே முடிவுக்கு வர வேண்டும். பத்திரிகைகளில் விளம்பரங்கள் நிறைய இருக்கும். வியாபாரிகள் தங்கள் சரக்குகளை விளம்பரம் செய்துகொள்வார்கள். அதைப் படித்து ஏமாந்து போகக்கூடாது. நல்லசரக்கு எது, அது எங்கே கிடைக்கும் என்று அறிந்துகொள்ள விளம்பரங்கள் உபயோகப்படும். நம்முடைய விவேகத்தை உபயோகித்து எது நல்ல சரக்கு, எது ஏமாற்றம் என்று கண்டு கொள்ளவேண்டும். போடும் விளம்பரங்களுக்கெல்லாம் பத்திரிகை நடத்துகிறவர்கள் பொறுப்பு இல்லை. பணம் பெற்றுக்கொண்டு, வியாபாரிகள் எழுதிக் கொடுக்கிற மாதிரி அச்சிடுவார்கள். பத்திரிகை படிக்கும்போது எது விளம்பரம், எது விஷயம் என்று பிரித்துத் தெரிந்துகொள்ள வேண்டும். விஷயத்திலும் எது தவறு, எது உண்மை என்று ஆலோசித்து அறிந்து கொள்ளவேண்டும்.

### தேர்தல்கள்

தேர்தல்களில் பணத்திற்கும் தாட்சணியத்திற்கும் ஆதரவுச் சீட்டுப் போடக்கூடாது. யோக்கியமாக

நடப்பவர்களுக்கே ஆதரவு கொடுக்கவேண்டும். யாரை யாவது கண்டு பயந்தோ அல்லது லஞ்சம் பெற்றுக் கொண்டோ, அல்லது கண்ணை மூடிக்கொண்டு யோசனையில்லாமலோ, பெட்டியில் ஆதரவுச் சீட்டுப் போடுவது ஊரைக்கெடுத்த பாவமாகும். தேர்தலுக்கு முன் கூட்டங்கள் கூடி விஷயங்களை ஆலோசித்து, தைரியமாகவும் நியாயமாகவும் ஆதரவுச் சீட்டுகள் போடும் வழக்கம் ஏற்பட்டால்தான் நாம் சரியான அரசாட்சி அடைவோம்.

சீட்டைப் பெற்று அரசாங்க சபைகளுக்குப் போகிறவர்கள் தைரியமாகவும், விவேகமாகவும், யோக்கியமாகவும் காரியங்களை நடத்தவேண்டும். மக்களின் பொது நன்மையையே எப்போதும் கவனித்து வரவேண்டும். சிலருடைய ஆதரவைப் பெறுவதற்காகப் பலருக்கு நஷ்டம் உண்டாகும் காரியங்களை அவர்கள் செய்யக்கூடாது. துஷ்டர்களைக் கண்டு பயப்பட்டு நியாயத்திற்கு விரோதமாக எதுவும் செய்யக்கூடாது.

குடியரசு

குடிகள் தேர்ந்தெடுத்த பிரதிநிதிகளைக் கொண்டு அரசாங்கம் நடைபெற்று வந்தால் அதற்குக் குடியரசு என்று பெயர். நன்மை தீமை, லாப நஷ்டம் எல்லாம் யோசித்து எப்படிப் பெரும்பாலோர் முடிவு செய்கிறார்களோ அதை மற்றவர்கள் சமாதானமாக ஒப்புக் கொண்டால்தான் குடியரசு நடைபெறும். இல்லா

விட்டால் கலகங்களும் குழப்பங்களும் உண்டாகி பலாத்காரம் தலையெடுத்து யாராவது சிலர் எதேச்சாதிகாரம் நடத்துவார்கள். அப்போது அனைவரும் சுதந்திரம் இழந்துவிடுவார்கள். வாழ்க்கையானது நரகம் போலாகும்.

* * * *

அரசாங்கத்தை நான்கு பாகங்களாகப் பிரித்துக் கொள்ளலாம். (1) சட்டங்களைச் செய்யவும், யார் மந்திரிகளாக இருக்கவேண்டும் என்று தீர்மானிக்கவும் சட்டசபை வேண்டும். (2) அரசாங்கக் காரியங்களை இடைவிடாமல் கவனித்து நடத்திவர ஒரு மந்திரி சபை வேண்டும். (3) மந்திரி சபை தீர்மானித்த காரியங்களை நிறைவேற்ற உத்தியோகஸ்தர்கள் வேண்டும். (4) வழக்குகளைத் தீர்க்கும் கோர்ட்டுகள் வேண்டும்.

ஒவ்வொரு சட்டமும் விவாதம் செய்யப்பட்டுக் கடைசியில் பெரும்பாலோரின் இஷ்டப்படி சட்ட சபையில் முடிவு செய்யப்படும். அபிப்பிராயங்களெல்லாம் தடையில்லாமல் சொல்லி வாத விவாதம் செய்து தீர்மானித்த பின், தீர்மானித்த சட்டத்தை எல்லோரும் ஒப்புக்கொண்டு நடத்த வேண்டும். ஆட்சேபித்தவர்களுங்கூடக் கீழ்ப்படிய வேண்டும்.

இம்மாதிரி நடந்து கொண்டால்தான் குடிகளின் பிரதிநிதிகள் குடிகளின் க்ஷேமத்திற்காக ஒழுங்காய் வேலைசெய்ய முடியும். நாட்டில் அமைதியும் நல்ல அரசாட்சியும் நிலையாக நிற்கும்.

# ஊருக்கு நல்லது

## வழக்குகள்

வழக்குகள் தீர்மானிப்பதற்காகக் கோர்ட்டுகள் வேண்டும். வழக்குகள் நியாயமாகத் தீர்க்கப்பட வேண்டும். சட்டங்களையும் மனிதர்களுடைய சுபாவங்களையும் நன்ருக அறிந்த யோக்கியர்கள் நீதிபதிகளாக அமரவேண்டும். அவர்கள் இருபக்கத்தில் சொல்லப் படும் விஷயங்களையும் கவனித்துத் தீர்ப்புச் சொல்லுவார்கள். அதை இருபக்கத்தாரும் ஒப்புக்கொண்டு சமாதானமாக வாழவேண்டும்.

நாமனைவரும் நியாயாதிபதிகளுக்கு உதவி செய்ய வேண்டும். பயமாவது தாட்சணியமாவது இல்லாமல் உண்மையைச் சொல்வதற்குச் சாட்சிகள் முன்வர வேண்டும். பொய்ச் சாட்சியம் சொல்வது கொலை பாதகத்தைவிடப் பெரிய பாவம். 'எனக்கு என்னத்திற்கு இந்தத் தொல்லை' என்று உண்மையை மறைத்துவிடக்கூடாது. பணத்திற்காகப் பொய்ச் சாட்சியம் சொல்லக்கூடாது. வீண் வழக்குகள் தொடரக் கூடாது.

## வரிகள்

வரிப்பணம் வசூல் செய்யாமல் அரசாங்கம் நடத்த முடியாது. ஜனங்களின் பிரதிநிதிகள் அடங்கிய சட்டசபையில் விதிக்கப்பட்ட வரிகளை அனைவரும் சரியான காலங்களில் செலுத்தினுல்தான் அரசாங்கம் சரியாக நடைபெறும். அவரவர்கள் கொடுக்கவேண்டிய வரி என்ன என்று அறிந்து

கொண்டு, கொடுத்துவிட்டு. கொடுத்ததற்கு ரசீது பெற்றுக்கொள்ள வேண்டும்.

உத்தியோகஸ்தர்கள்

போலீஸ்காரர்கள் ஊருக்குக் காவல். பலசாலிகளும் மோசக்காரர்களும் மெலிந்தவர்களுக்குத் தொந்தரவும் நஷ்டமும் பயமும் உண்டாக்காமலிருக்கப் போலீஸ்காரர்கள் அவசியம். ஊரில் சண்டை சச்சரவு இல்லாமல் இருக்க வேண்டுமானால் போலீஸ்காரர்களுக்கு எல்லாரும் உதவி செய்யவேண்டும். குறைந்த சம்பளம் வாங்கினாலும் போலீஸ்காரர்கள் மிகவும் யோக்கியர்களாக இருக்கவேண்டும். யோக்கியர்களே போலீஸில் சேரவேண்டும். அவர்களுக்கு ஊரிலுள்ள எல்லாரும் உதவி செய்யவேண்டும்.

* * * *

நீர்ப்பாசனம், கல்வி, விவசாயம் முதலிய இலாகா உத்தியோகஸ்தர்கள் குடிகளின் நன்மைக்காக அமைக்கப்பட்டிருக்கிறார்கள். குடிகளின் ஒத்துழைப்பால் தான் இந்த உத்தியோகஸ்தர்கள் தங்கள் வேலையைச் செய்யமுடியும். உத்தியோகஸ்தர்களிடம் குடிகள் தங்கள் குறைகளைச் சொல்லிக்கொள்ள வேண்டும். அவர்கள் சொல்லும் புத்திமதிகளைக் கேட்கவேண்டும்.

குடிகள் எல்லாருக்கும் சேர்ந்து பொதுவாகவும் பாரபட்சமில்லாமலும் வேலைசெய்ய உத்தியோகஸ்தர்கள் அமைக்கப்பட் டிருக்கிறார்கள். அவர்களைக் கொண்டு ஒருவன் சொந்த லாபம் பெறுவதற்காக

அவர்களுக்கு லஞ்சம் கொடுக்க முயற்சி செய்யக் கூடாது. உத்தியோகஸ்தர்களைக்கண்டு அஞ்சவேண்டியதில்லை. அவர்களை அவமதிக்கவும் கூடாது. அவர்களுக்கு வேண்டிய ஆதரவு கொடுத்துத் தைரியமாக அவர்களிடம் விஷயங்களை எடுத்துச் சொல்ல வேண்டும்.

பொதுநலம்

உண்மை பேசுவதும், பேசியபடி செய்வதும் வீரனுக்கு அடையாளம். எந்த மனிதனும் தனியாகச் சுகமடைய முடியாது. சமூகம் செழித்தால்தான் தன் குடும்பமும் செழிக்கும். ஆதலால் பிறர் சுகத்தையும் கவனித்து வாழவேண்டும்.

ஊர் நன்றாக இருந்தால் எல்லாருக்கும் நல்லது. ஒவ்வொருவரும் குடும்பத்திற்கு உழைப்பதுபோல் ஊருக்கும் உழைக்கவேண்டும். இதுவே நல்ல குடித்தனத்திற்கு அடையாளம். ஊருக்கு நல்லது எனக்கும் நல்லதே என்று எல்லாரும் நடந்துகொள்ள வேண்டும்.

# 17

## புலையன் தண்ணீர்

**பா**ரத யுத்தம் முடிந்த பிறகு, துவாரகைக்குப் போகும் வழியில் கண்ணபிரான் உதங்கர் என்ற பிரா மணரைக் கண்டான். கண்டதும் தேரை நிறுத்தி அவ ருக்கு நமஸ்காரம் செய்து பூஜித்தான். பிராமணர் கண்ணன் செய்த மரியாதையை ஏற்றுக்கொண்டு கேட்கிறார் :

"மாதவா! நீ பாண்டவ கௌரவர்களிடையில் வெகு நாள் இருந்துவிட்டு வருகிறாய்; அவர்களுக்குள் சகோதர வாஞ்சையைப் பலப்படுத்தினாயா? எல்லா ரும் சுகமாக இருக்கிறார்களா?" என்று கேட்டார்.

கண்ணன் என்ன சொல்லுவான்! "ஐயா! கௌர வர்களைச் சமாதானம் செய்ய முயன்றேன். அவர்கள் கேட்கவே மாட்டோம் என்றார்கள். யுத்தம் நடந்து எல் லாரும் மாண்டார்கள். புத்தியும் பலமும் விதியை மீற முடியாது" என்று சொல்லி நடந்த வரலாற்றையெல் லாம் சொன்னான். இந்த வார்த்தையைக் கேட்டதும், உதங்கர் மிக்க கோபாவேசமடைந்தார். அவருடைய

கண்கள் சிவந்தன. அவர் மாதவனைப் பார்த்துச் சொன்னார் :

"வாசுதேவனே! நீ கௌரவ குலத்தைக் காப்பாற்றாமல் போனாய்! வலுவிலாவது அவர்களை யுத்தத்திலிருந்து தடுத்துக் காப்பாற்றியிருக்க வேண்டியது உன் பொறுப்பு. நீ கபடமாக இருந்துகொண்டு அவர்கள் அழிந்துபோக விட்டுவிட்டாயே! நான் உன்னைச் சபிக்கப் போகிறேன்."

இவ்விதம் உதங்கர் கோபாவேசமாய்க் கூறிய வார்த்தைகளைக் கேட்ட வாசுதேவன், புன்னகை புரிந்து, "சாந்தம்! சாந்தம்! நீர் தபஸ்வி! உம்முடைய தவத்தின் பயனைக் கோபத்தில் இழந்துவிட வேண்டாம். முதலில் நான் சொல்லுவதைக் கேளும், பிறகு வேண்டுமானால் சாபத்தைக் கொடும்" என்று சமாதானப்படுத்தினான்.

*　　　*　　　*　　　*

கண்ணன், தான் ஈசுவர அவதாரம் என்பதை உதங்கருக்குக் காட்டினான். "நான் உலகத்தைக் காப்பதற்காகவும் தர்மத்தை நிலைநிறுத்துவதற்காகவும் பல பிறவி எடுக்கிறேன். நான் எந்த அவதாரத்தை எடுக்கிறேனோ, அந்த அவதார தருமத்தை அனுசரிக்கிறேன். தேவ ஜாதியில் பிறக்கும்பொழுது தேவன் போல எல்லாவற்றையும் செய்கிறேன். யக்ஷனாகவோ ராக்ஷஸனாகவோ பிறந்தால் யக்ஷனைப் போல் அல்லது ராக்ஷஸனைப் போல் எல்லாக் காரியங்களையும் செய்வேன். மனிதனாகப் பிறந்தாலும் மிருகமாக அவதரித்தாலும் அவ்வாறே

அவிவேகிகளான கௌரவர்களைக் கெஞ்சினேன். அவர்கள் மதி மயக்கம்கொண்டு என்னுடைய வார்த்தையை ஏற்றுக்கொள்ளவில்லை. பயமுறுத்திப் பார்த்தேன். அதற்கும் அவர்கள் இணங்கவில்லை. கோபங்கொண்டு என் விசுவரூபத்தையும் அவர்களுக்குக் காட்டினேன். அதுவும் வீணாயிற்று. அதர்மம் புரிந்து அவர்கள் யுத்தத்தில் மாண்டு மேலுலகம் சென்றார்கள். பிராமண சிரேஷ்டரே! நீர் என்மேல் அபராதம் சொல்லக்கூடாது" என்று கண்ணன் விளக்கிய பிறகு உதங்கர் சமாதானமடைந்தார்.

* * * *

கண்ணன் மகிழ்ச்சி யடைந்து உதங்கரை நோக்கி "உமக்கு வேண்டிய வரம் ஒன்று கேளும்" என்றான். உதங்கர் வாசுதேவனைப் பார்த்து, "அச்சுதா! உன்னை நான் பார்த்ததே பெரிய வரம். வேறொன்றும் வேண்டாம்" என்றார். கண்ணன் மறுபடியும் வற்புறுத்த, உதங்கர், "பிரபுவே, அவசியம் எனக்கு ஏதேனும் கொடுக்கவிரும்பினால், நான் எப்போது எந்த இடத்தில் தண்ணீர் வேண்டினாலும் கிடைக்குமாறு வரம் தருவாயாக" என்றார்.

பாலைவனத்தில் திரிபவரும் ஆசையற்றவருமான உதங்கர் இந்த வரத்தைக் கேட்டதும், "அப்படியே ஆகட்டும். நீர் தண்ணீர் வேண்டுமென்று எந்தச் சமயத்தில் எங்கே எண்ணினாலும் என்னை நினைத்துக் கொள்ளும்" என்று சொல்லிவிட்டுக் கண்ணன் துவாரகைக்குச் சென்றான்.

* * * *

## புலையன் தண்ணீர்

பிறகு ஒரு சமயம், உதங்கர் தாகம் மிகுந்து தண்ணீரை விரும்பிக் காட்டில் இங்குமங்கும் அலைந்தும் கிடைக்காமையால், அச்சுதனை நினைத்தார். அப்போது ஒரு புலையன் தோன்றினான். அவன் உடம்புக்குப் போதிய ஆடையில்லை. உடுத்தியிருந்த கந்தல் துணியும் அழுக்குப் படிந்து அவலட்சணமாக இருந்தது. கூட, ஒரு நாய்க்கூட்டம்; கையில் வேட்டைக்கு வேண்டிய வில்லும் அம்பும்; தோளில் கட்டித் தொங்கிய ஒரு தோற்பையில் ஜலம் வைத்திருந்தான். புலையன் நகைத்துக்கொண்டு உதங்கரைப் பார்த்து, "வாரும், பிருகு குல சிரேஷ்டரே, தாகத்தால் வருந்துகிறீர் போலும்! உம்மைப் பார்க்க ரொம்பவும் பரிதாபமாயிருக்கிறது. ஜலம் பெற்றுக்கொள்ளும்" என்று சொன்னான்.

தன் தோற்பையிலிருந்த தண்ணீரை அப்புலையன் அவருக்கு ஊற்றப்போனான். உதங்கர் மிக்க அருவருப்படைந்து, "வேண்டாம்" என்றார். மனத்தில் கண்ணனை நிந்தித்தார். "இதுவா உன் வரம்?" என்று கோபித்தார்.

புலையன், ஜலத்தைப் பெற்றுக்கொள்ளும்படி தோற்பையைக் காட்டி உதங்கரைப் பலமுறை வற்புறுத்தினான். அவர் கோபமாக மறுத்துவிட்டார். புலையன் தன் நாய்களோடு அவ்விடத்திலேயே மறைந்தான்!

* * * *

புலையன் மறைந்த அதிசயத்தைக் கண்ட உதங்கர் யோசிக்கலானார்: "நான் என்ன செய்தேன்? என் ஞானம் என்னவாயிற்று! புலையன் கொடுத்ததை மறுத்தது பாவமல்லவா?" என்று வருந்தினார்.

கொஞ்ச நேரம் கழித்து, சங்கமும் சக்கரமும் ஏந்திய பகவான் தோன்றினான்.

"புருஷோத்தமா! நீ இவ்வாறு புலையனுடைய தோற்பையிலுள்ள அசுத்த ஜலத்தைப் பிராமணனாகிய எனக்குக் கொடுக்கச் செய்தது தருமமா?" என்று உதங்கர் நிந்தித்துக் கேட்டார்.

ஜனார்த்தனன் புன்னகை புரிந்தான். "உதங்கரே! உமக்காக இந்திரனிடம் போய், ஜலரூபத்தில் அமிருதத்தைக் கொடுக்கச் சொன்னேன். இந்திரன் முதலில் ஒப்புக்கொள்ளவில்லை. 'மனிதன் ஒருவனைத் தேவனாகச் செய்வது எனக்குப் பிடிக்கவில்லை. வேறு ஏதேனும் வரம் தருவது நலம்' என்று என்னைப் பலமுறை தடுத்தான். நான், 'கூடாது, அமிருதமே கொண்டு போய்க்கொடு' என்று வற்புறுத்தினேன். இந்திரன், 'உதங்கருக்கு அவசியம் அமிருதம் தரவேண்டுமானால், அப்படியே செய்கிறேன். ஆனால் நான் சண்டாள வேஷம் தரித்துக்கொண்டு போவேன். அந்த வேஷத்தில் உதங்கர் என்னிடம் தண்ணீர் பெற்றுக்கொள்வாரானால் சரி, அவர் என்னை அவமதித்தால் நான் கொடுக்க மாட்டேன்' என்றான். உம்முடைய ஞானத்தை நம்பி நான் ஒப்புக்கொண்டேன். நீர் இவ்

விதம் நடந்துகொண்டீர். சண்டாளனைக் கண்டு நீர் வெறுப்படைந்தது பெரிய குற்றமல்லவா? அமிருதத்தை மறுத்துவிட்டீரே" என்று கண்ணன் சொல்ல, உதங்கர் வெட்கத்தில் ஆழ்ந்தார்.

ஏழைகளை இகழலாகாது என்பது இந்தப் பாரதக் கதையின் உபதேசம். இந்த உபதேசத்தை என்றும் நாம் மனத்தில் இருத்துவோமாக.

18

# ஜீவஹிம்சை யாகங்கள்

பிராணிகளைக் கொன்று வேள்வி நடத்துவது இந்தக் காலத்து நாகரிகத்துக்கு ஏற்றதல்ல. அறிவு படைத்தவர்கள் இத்தகைய சடங்குகளில் கலந்து கொள்வதும் அதன் காரணமாக ஜீவஹிம்சைக்கு உடந்தையாவதும் கொஞ்சமும் சரியல்ல.

சாப்பாட்டு முறையில் ஜீவஹிம்சையைப்பற்றி விவாதம் கிளப்ப எனக்குப் பிரியமில்லை. 'சைவ' உணவே ஜீவகாருண்யத்திற்கு அடையாளம் என்று நான் சொல்லமாட்டேன். வனஸ்பதி ஆகார விரதம் அனுசரிப்பவர்களில் பலர் வேறு விதங்களில் கொடுந் துன்பம் இழைப்பவர்களாயும் இருக்கக்கூடும். தங்கள் குலவழக்கத்தின்படி சாப்பாட்டில் ஓரளவு மாமிசம் சேர்த்துக்கொண்டு காலம் கழிப்பவர்களில் பலர் மிக நல்ல தயாளசீலர்களாகவும் இருக்கிறார்கள். ஆனால், தெய்வ வழிபாட்டுக்கென்று ஜீவஹிம்சை செய்யும் முறை மடமையாகும். உணவுக்காக ஜீவஹிம்சை ஒரு காலத்திலும் செய்ய மனமில்லாதவர்களும், மாமிசம்

## ஜீவஹிம்சை யாகங்கள்

என்றால் அருவருப்புக்கொண்டு வெகுதூரம் விலகுபவர்களும் ஒன்றுகூடி, தெய்வத்துக்கு இது பிரீதி, இதனால் மழை பெய்யும், யுத்தம் வெற்றியாகும், அரசியல் பிரசினை தீரும் என்றெல்லாம் நம்பியும் சொல்லியும், மனிதனுக்கு எவ்வித இடைஞ்சலும் செய்யாத ஏழைப் பிராணிகளைப் பிடித்து ஹிம்சை செய்வது மகா மூடத்தனம். இதைப்பற்றிச் சரியென்று யாராவது வாதம் செய்தால், அது மூர்க்கத்தனமேயாகும்.

*இதுகாண்மின் அன்னைமீர் !*
*இக்கட்டுவிச்சி சொல்கொண்டு நீர்*
*எதுவானும் செய்து அங்கோர்*
*கள்ளும் இறைச்சியும் தூவேன்மின்,*
*மதுவார் துழாய் முடி*
*மாயப்பிரான் கழல் வாழ்த்தினல்*
*அதுவே இவள் உற்ற*
*நோய்க்கும் அருமருந் தாகுமே.*

*அணங்குக்கு அருமருந்து என்று*
*அங்கோர் ஆடும் கள்ளும் பராய்,*
*சுணங்கை எறிந்து நும்தோள்*
*குலைக்கப்படும் அன்னைமீர் !*
*உணங்கல் கெடக் கழுதை*
*உதடாட்டம் கண்டு என்பயன்,*
*வணங்கீர்கள் மாயப் பிரான்*
*தமர்வேதம் வல்லாரையே !*

இவ்வாறு நம்மாழ்வார் பாடுகிறார்.

எம்பெருமான்மேல் மோகமடைந்த ஒரு நாயகி யாகத் தம்மைப் பாவித்துக்கொண்டு ஆழ்வார் இந்தப் பாசுரங்களைப் பாடுகிறார். மோகத்தின் காரணத்தைச் சரியாய் அறிந்துகொள்ளாமல் பந்துக்கள் வேறு தேவதைகளைத் திருப்தி செய்யும் வேள்வி வியாபாரங் களைக் கண்டிக்கிறார். ஆயினும் கூடவே, தீர்ந்துபோன பழைய முறை யாகங்களைச் செய்ய வேண்டாம் என்பது ஆழ்வாரின் நோக்கம். இந்திரன் முதலிய தேவதை களைத் திருப்திசெய்வது யாகங்களின் நோக்கம். அந் தத் தெய்வங்கள் அனைத்தும் எம்பெருமானின் சிருஷ்டி., அவர்களைப் பூஜிப்பதே வழக்கம், அந்த வழக்கத்தை விட்டுவிடப் பயமாயிருக்கிறது என்றால், பூஜை செய் யுங்கள், ஆனால் பூஜை செய்யும்போது அந்தத் தெய் வங்களுக்கெல்லாம் ஈசனும் அந்தராத்மாவுமான நாரா யணனையே எண்ணிப் பூஜை செய்யுங்கள், அப்போது அந்தப் பூஜை அவனுக்குப் போகும், என்பது ஆழ்வார் களுடைய உபதேசம். நல்ல அறிவு அடைந்தவர்கள் அதைச் செய்யவே வேண்டியதில்லை. கள்ளும் இறைச்சி யும் கலந்த வேள்விகள் வேண்டவே வேண்டாம்.

யாகங்களில் ஜீவஹிம்சை செய்வதைப்பற்றி மகா பாரதம் அசுவமேத பருவத்தில் ஒரு நல்ல உபாக்கி யானம் இருக்கிறது. இக்காலத்திலும் பசுவதை வேள்வி கள் நடத்த முயற்சி செய்யும் அறிவாளிகள் இதைப் படிக்கவேண்டும்.

* * * *

முன்னொரு காலத்தில் இந்திரன் ராஜாவாக இருந்தான். அவன் ஒரு சமயம் யாகம் செய்ய

ஆரம்பித்தான். அப்போது அவ்விடம் வந்திருந்த மகரிஷிகள் யாகத்தில் கொல்லப்படுவதற்காகக் கட்டப் பட்டிருந்த பிராணிகளைப் பார்த்து இரக்கம் மேலிட்டு மனம் கலங்கினார்கள். அவர்கள் இந்திரனிடம் சென்று, "மகாராஜாவே! இந்த யாகத்தின் முறை நல்லதன்று. தர்மத்தை விரும்பி இதைச் செய்கிறாய். புரந்தரனே! யாகத்தில் பிராணிகளைக் கொல்ல வேண்டுமென்று சாஸ்திரத்தில் காணப்படவில்லை. நீ செய்திருக்கும் இந்தப் பிராண ஹிம்சை ஏற்பாடுகள் தர்மத்தைக் கெடுக்கும். ஹிம்சை எக்காலத்திலும் எந்தச் சந்தர்ப்பத்திலும் தர்மமாகாது. உனக்கு யாகம் செய்யவேண்டும் என்று விருப்பமாயிருந்தால் சாஸ்திரப்படி செய்விப்பாயாக. அவ்வாறு செய்தால் பயனுண்டாகும். மூன்று வருஷம் ஆன பழைய தானி யத்தைக்கொண்டு யாகத்தைச் செய்" என்று கேட்டுக் கொண்டார்கள்.

இவ்வாறு ரிஷிகள் சொன்னது இந்திரனுக்குப் பிடிக்கவில்லை. அகங்காரமும் மோகமும் அவனைப் பீடித்தன. தத்துவம் கண்ட அவர்கள் சொன்ன புத்திமதியை அவன் அங்கீகரிக்கவில்லை. கூடியிருந்த பண்டிதர்களுக்குள் பெரிய விவாதம் உண்டாயிற்று.

விவாதம் வெகு நேரம் நடந்தது. உண்மை அறிந்த ரிஷிகள் விவாத சிரமத்தினால் ஓய்ந்துபோனார் கள் என்று வைசம்பாயனர் சொல்லுகிறார். அவர்களை இந்திரன் கூப்பிட்டு, வசு என்கிற ஒரு புகழ்பெற்ற அரசனிடம் அனுப்பி, அவன் தீர்ப்பின்படி நடக்க

வேண்டியது என்று உத்தரவிட்டான். ரிஷிகள் வசு விடம் சென்று, "அறிவில் சிறந்தவனே! தர்மத்தில் சமுசயமடைந்த எங்களுக்கு நீ உண்மையைச் சொல்ல வேண்டும். யாகங்களைப்பற்றிச் சாஸ்திரம் என்ன சொல்லுகிறது? நல்ல குணம் படைத்த பசுக்களைக் கொண்டு யாகம் செய்யவேண்டியதா, அல்லது முளைக் காத தானிய விதைகளைக்கொண்டு செய்ய வேண்டி யதா?" என்று கேட்டார்கள்.

அந்த அரசன் இவர்கள் பிரசினையைக் கேட்டு ஆராயாமல் உடனே பதில் சொல்லிவிட்டான். "கிடைத்தவைகளைக் கொண்டு யாகம் செய்யவேண் டும், போங்கள்" என்றான்.

அந்த அரசன் சரியான கவனம் செலுத்தி ஆராய்ச்சி செய்யாமல் இவ்வாறு தவறான பதில் சொல்லி அசத்தியம் பேசியபடியால், பாதாளம் சென் றான். இந்தச் சிறந்த உபாக்கியானத்தைச் சொல்லி விட்டு வைசம்பாயனர் இன்னும் சொல்லுவதாவது:

இம்சிப்பவன் எவ்வளவு தானம் செய்தாலும் கடேறமாட்டான். அநியாயமாய்க் கிடைத்த திரவியத் தைச் சிலர் தானம் செய்வார்கள். அவர்கள் ஒரு நல்ல பயனையும் அடையமாட்டார்கள். கபட எண் ணத்துடன் தானம் செய்பவனும், தன்னிடம் நம் பிக்கை உண்டாக வேண்டியதற்காகவோ அல்லது வீண் பெருமைக்காகவோ தானம் கொடுக்கிற வனும் முடிவில் கெட்ட கதியை அடைவார்கள். பிராணிகளை இம்சை செய்து யாகம் செய்பவனும்

# ஜீவஹிம்சை யாகங்கள்

பாவமான வழியில் சம்பாதித்த தனத்தைக்கொண்டு அஞ்ஞானத்தால் தானம் செய்கிறவனும் சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட யாக தானங்களின் பயனை அடையமாட்டான். சக்திக்குத் தக்கவாறு நல்ல வழியில் கிடைத்த பொருளைத் தானம் செய்பவர்களும் ஹிம்சையில்லாமல் யாகம் செய்பவர்களுமே சுவர்க்கம் அடைகிறார்கள். பிராணிகளிடத்தில் கருணையும், பிரம்மசரியமும் உண்மையும் பச்சாத்தாபமும் தைரியமும் பொறுமையுமே, தர்மமும் யோகமுமாகும்.

முற்காலத்தில் அகஸ்தியர் ஒரு மகா யாகம் செய்தார். பன்னிரண்டு வருஷம் நடந்த அந்த ஸத்ரயாகத்தில் ஹிம்சை முறை ஏதும் இல்லாமல் கனி கிழங்கு தானியங்களைக்கொண்டே எல்லாம் நடந்தது. யாகத்துக்கு இந்திரன் இடையூறு செய்யப்பார்த்தான். மழையில்லாமல்செய்து, தானியம் கிடைக்காமல் செய்தான். இதற்கு என்ன செய்வது என்று முனிவர்கள் அகஸ்தியரைக் கேட்டார்கள். அவர், "இந்திரன் பன்னிரண்டு வருஷங்களும் மழையை நிறுத்திவிட்டாலும், நான் மானஸிகமான வேள்வியைச் செய்வேன். இது சநாதன விதி" என்றார்.

தம்முடைய தவவலியால் அகஸ்தியர் இந்திரனைத் தோற்கடித்து யாகத்துக்கு வேண்டியதைச் சிருஷ்டித்துக்கொண்டார். பிறகு இந்திரனே வந்து, தான் தோற்றதாக ஒப்புக்கொண்டு மழை பெய்வித்தான். "ஹிம்சையற்ற யாகமுறை அகஸ்தியரால் ஸ்தாபிக்கப்பட்டது" என்கிறார் வைசம்பாயனர்.

[மகாபாரதம் - அசுவமேத பர்வம் 94, 95 அத்தியாயங்கள்.]

## 19

# சைவ வைஷ்ணவ பேதங்கள்

அனைத்துக்கும் உயிராக நிற்பது ஒரு பரம்பொருள் என்கிற வேதாந்தத்தை ஒப்புக்கொண்டே எல்லா வைதிக சமயங்களும் பேசுகின்றன. இப்படியிருக்க, சைவ வைஷ்ணவப் பிரபந்தங்களில் சிவனைக் குறைத்து விஷ்ணுவை உயர்த்தியும், விஷ்ணுவைக் குறைத்துச் சிவனை உயர்த்தியும் எழுதியிருப்பதைக் கண்டு சமரச நோக்கத்தில் ஈடுபட்ட சிலர் வியப்பும் அருவருப்பும் கொள்ளலாம். ஆழ்வார் நாயன்மார்களின் கரை கடந்த பக்திக்கும் ஆழ்ந்த ஞானத்துக்கும் இந்த ஏற்றத் தாழ்வுப் பேச்சு மிகவும் பொருத்த மற்றதாகத் தோன்றும். கடவுளைப் பற்றியும் சமயத்தைப் பற்றியும், அசிரத்தையும் சந்தேகமும் நிறைந்த நாம் ஆழ்வார் நாயன்மார்களின் கருத்துக்களையும் மனப்பான்மையையும் சரியாக உணர்வது கடினம்.

சிவனுக்கு மேல் விஷ்ணு, அல்லது திருமாலுக்கு எஜமானன் பரமேசுவரன் என்று பக்தர்கள் பாடு

வதைக் கொஞ்சம் ஆராய்ந்து பார்க்கவேண்டும். "தேவ தேவன், மெய்ச் சேவகன், தென்பெருந்துறை நாயகன், மூவராலும் அறியொணு முதலாய ஆனந்த மூர்த்தியான்", "மால் அயன் வானவர் கோனும் வந்து வணங்க அவர்க்கருள் செய்த ஈசன்" என்று மாணிக்க வாசகர் சிவபிரானை நினைந்து உருகுகிறுர். "இனி யறிந்தேன் ஈசற்கும் நான்முகற்கும் தெய்வம், இனி யறிந்தேன் எம்பெருமான் உன்னை, இனியறிந்தேன், காரணன்நீ கற்றவைநீ கற்பவைநீ நற்கிரிசை, நார ணன் நீ நன்கறிந்தேன் நான்" என்று இன்னெரு பக் கத்தில் திருமாலை நோக்கி உருகுகிறுர் திருமழிசை ஆழ்வார். சிவன் என்பதே பொய் அல்லது திருமால் என்பதே பொய்க் கதை என்று விஷ்ணு பக்தர்களா வது சைவ சமயிகளாவது சொல்வது முடியாது. சொன் ஞல் எல்லாம் அனர்த்தமாக முடியும். கிறிஸ்து மதத் தவரும் இஸ்லாம் மார்க்கத்தவரும் அவ்வாறு சொல் லக்கூடும். ஆனுல் வைதிக சமயங்களைச் சேர்ந்த எவ ரும் அவ்வாறு தங்கள் பக்தர்களுக்கிடையில் சொல்லி அடிப்படையான விஷயங்களில் ஐயத்தைக் கிளப்பி விட இயலாது.

சரி, இவ்வாறு வேண்டாம்; சிவன் விஷ்ணு இரு வரும் சமம் என்று சொல்லிக்கொண்டு போகலாமே? ஒருவருக்குமேல் மற்றெருவர் என்று ஏன் துவேஷப் பேச்சுப் பேசவேண்டும்?

ஒருவருக்குமேல் மற்றெருவர் என்று வகுக்காமல் இருவரும் சமம் என்று சொன்ஞல், ஜகத்துக்கு ஒரே

ஈசன் என்கிற தத்துவம் போய், இரண்டு அல்லது மூன்று சமானக் கடவுள்கள் உண்டு என்றல்லவோ ஏற்படும்? இது சுத்தத் தவருகும். ஆதலால் ஒரே ஈசன், ஒரே ஜகத் காரணம் என்று கொண்ட எந்தச் சம்பிரதாயத்திலும் அந்தச் சம்பிரதாயத்தில் எந்த வடிவம் முக்கியமாகத் தியான சாதனமாய்க் கொள்ளப்பட்டிருக்கின்றதோ அதற்குப் பிராதானியம் கொடுப்பது வேதாந்த சமயாசாரங்களில் அவசியமாகிறது. வேறு வழி இல்லை.

இப்படி இல்லாவிடில் பரம சாதுக்களும் மகா ஞானிகளுமான ஆழ்வார்களும் நாயன்மார்களும் இவ்வாறு பாடியே இருக்கமாட்டார்கள். நாமும் பூரண பக்தர்களானுல்தான் பக்தியின் இயற்கையிலிருந்தே உண்டான இந்தப் பாவனையை உணரமுடியும். நிராகாரமான சுத்தப் பிரம்மத்தைத் தியானித்து விடலாமே என்று நாம் பேசலாம். பேசுவது வேறு, செய்து முடிப்பது வேறு. ஞானிகளுக்குங்கூட ஏதேனும் ஒரு மூர்த்தியை உள்ளத்தில் வைத்து உபாசித்தால்தான் முடியும் என்பது பெரியோர்கள் அனுபவ சித்தமாகப் பார்த்த உண்மை. எந்த வடிவத்தில் பக்தன் உபாசிக்க முயற்சி செய்கிருனே அந்த வடிவத்தையே ஈசுவர ரூபமாக வைத்துக்கொண்டு உள்ளத்தை அதனில் செலுத்தவேண்டும். அனைத்தையும் அந்த மூர்த்திக்கு அடிமைப்படுத்த வேண்டும். எந்த உயர்ந்த புனிதப் பொருளையும் அதற்கு ஆட்படுத்தியே தியானிக்கவேண்டும். இதை உணர்ந்தால் ஆழ்வார் நாயன்மார்கள்

பாடிய பாடல்களிலுள்ள சைவ வைஷ்ணவ ஏற்றத் தாழ்வின் பொருள் விளங்கும்.

நம்முடைய பக்தியும் ஞானமும் அனேகமாக உயிரற்ற வாசா கைங்கரியந்தான். வாசா கைங்கரியத்திற்குக் கஷ்டமும் தடையும் இல்லை. எதையேனும் செய்யலாம். அரசியலில் சர்வகட்சி ஆட்சி முறையைப்போல் மிக்க தாராள சிந்தனையுடன் எல்லாச் சமய முறைகளும் சமம், எல்லாத் தெய்வங்களும் சமம் என்று சைவ வைஷ்ணவ சமத்துவம் அளித்துவிடலாம். உள்ளம் அப்படியே உருகி யொழுகும் பக்தி உபாசனைகளில் இவ்வாறு செய்யமுடியாது.

" திருவேங்கடத்திலுள்ள திருமாலின் மூர்த்தியே என் தெய்வம். எனக்குப் பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கும் திருமாலும் வேண்டாம், வைகுண்டத்திலுள்ள பெருமானும் வேண்டாம், வேறு எந்தத் திவ்ய தேசமும் வேண்டாம்" என்று ஆழ்வார்கள் பாடியிருப்பதைக் காண்கிறோம். இதனால் திருமலையில் எழுந்தருளியிருக்கும் அர்ச்சாவதாரமே பரம்பொருள் என்று அவர்கள் பிடிவாதம் செய்ததாக வைத்துக் கொள்ளலாமா? ஜகத்துக்கெல்லாம் ஒரே ஈசன், ஒரே பரம்பொருள், புலன்களுக்கும் கற்பனைக்கும் அடங்காத அந்தப் பரம்பொருளைத் தியானிக்க வேண்டினால், ஏதேனும் ஒரு திட்டமான வடிவத்தில் உபாசிக்க வேண்டுமேயொழிய அதைப் புத்தி சாதுரியத்தைக் கொண்டு நிமிஷத்துக்கு ஒரு வடிவமாக மாற்றிக்

கொண்டு தியானித்தால் வெறும் வேஷமாகவும் பய னற்ற முயற்சியாகவும் போய்விடும்.

மனத்தில் இவ்வாறு ஒரு வடிவத்தைத் தோற்று வித்துக் கொள்வதற்குப் பல சாதனங்கள் உண்டு. புராணமும் கதையும் ஸ்தோத்திரமும் மூர்த்திகளும் இதற்குச் சாதனங்கள். பாரத நாட்டில் ஒரே வேதாந் தத்தில் ஈடுபட்ட சமயங்களும் சம்பிரதாயங்களும் வெகு காலமாக நம்மில் பரவி வந்திருக்கிறபடியால் உபாசகர்களுக்கு ஏகாக்கிரமான தியானத்திற்கு இடைஞ்சல் உண்டாக்கும் வேறுபாடுகளும் பேதங் களும் குறைவதற்கு ஒரு வழியைப் பக்தர்கள் கண்டு கையாள்கிறார்கள். அதுதான், என் தெய்வமே பெரிது என்கிற உபாசனைமுறை. ஒரு பரம்பொருள், ஒன்றே பரம்பொருள் என்று ஐயம் தீர்ந்து ஒப்புக்கொள்ளும் எந்தப் பக்தனுக்கும் இந்த முறையினால் துவேஷமாவது மற்ற மதத்தவர்கள் மேல் அருவருப்பாவது உண் டாகாது.

என்று கடல்கடைந்த தெவ்வுலகம் நீரேற்றது
ஒன்றும் அதனை யுணரேன்நான்—அன்ற
தடைத்துடைத்துக் கண்படுத்த வாழி,இதுநீ
படைத்திடந் துண்டுமிழ்ந்த பார்.

—பொய்கையாழ்வார்

புராணக் கதைகள் எனக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால் அதைப்பற்றி என்ன கவலை? என் சிற்றறிவை நம்பிப் புத்தியைக் குழப்பிக்கொண்டு காரியத்தை

ஆராய்ந்து காரணத்தை அனுமானித்து அறியலாம் என்று திரியவோ நான்? நீ இந்த உலகத்திற்கு 'அந்தர் யாமி என்பது எனக்குப் போதும் என்கிறார் ஆழ்வார்.

அரன்நா ரணன்நாமம் ஆன்விடைபுள் ளூர்தி
உரைநூல் மறையுறையும் கோயில்—வரைநீர்
கரும மழிப்பளிப்புக் கையதுவேல் நேமி
உருவமெரி கார்மேனி யொன்று.

அரன் நாரணன் என்று நாமங்கள் இரண்டு; இடபமும் கருடனும் ஆக வாகனங்கள் இரண்டு. ஒருவனைப் பற்றிச் சிறப்பாகச் சொல்லுவது ஆகமம் (நூல்), மற்றொருவனைப் பற்றிச் சிறப்பாகச் சொல்வது வேதம் (மறை); வீற்றிருக்கும் இடங்கள் கைலாசமும் (வரை) கடலும் (நீர்); தொழில்கள் இரண்டு: அழிப்பதும் அளிப்பதும்; ஆயுதங்கள் முறையே வேலும் சக்கரமும்; மூர்த்திகளின் நிறம் முறையே நெருப்பு வர்ணமும் மேகவர்ணமும்; ஆனால் மேனியோ, இருவருக்கும் ஒன்றே! இருப்பிடம், தொழில், ஆயுதம், நிறம், பெயர் இவை வேறுபட்டாலும், ஒரே பரம்பொருள் இரண்டு உருவங்களாக நிற்கும். ஒருவன் சரீரி, ஒருவன் சரீரம். ஒன்று உடலாகும்போது மற்றொன்று உயிராகும்.

அவரவர் தாந்தாம் அறிந்தவா றேத்தி
இவரிவர் எம்பெருமான் என்று—சுவர்மிசைச்
சார்த்தியும் வைத்தும் தொழுவர், உலகளந்த
மூர்த்தி யுருவே முதல்.

தாம் தாம் அறிந்தவாறு ஏத்துவார்கள். பல மூர்த்தி வடிவங்களை எழுதியும் சிற்பம் செய்தும் தொழுவார்கள். ஆனால், எல்லா வழிபாடுகளும் போய்ச் சேருவது ஒருவனிடமே.

> நகர மருள்புரிந்து நான்முகற்கு, பூமேல்
> பகர மறைபயந்த பண்பன்—பெயரினையே
> புந்தியால் சிந்தியா தோதி உருவெண்ணும்
> அந்தியா லாம்பயனங் கென்.

சர்வேசுவரனை நெஞ்சாலே தியானிக்காமல் வெறுமனே நாமங்களைச் சொல்லி ஜபமாலைக் கண்ணிகளை எண்ணுவதிலும் சந்தியாவந்தனம் முதலிய கிரியைகளிலும் என்ன பயன்?

> தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே
> தமருகந்த தெப்பேர்மற் றப்பேர்—தமருகந்து
> எவ்வண்ணம் சிந்தித் திமையா திருப்பரே
> அவ்வண்ண மாழியா னும்.

அவரவர்களுக்கு இஷ்டப்பட்ட வடிவமும் பெயரும் நிறமும் வைத்துக்கொள்ளட்டும். அவர்கள் நினைத்தபடியாகவே தன்னை அமைத்துக்கொண்டு அருள் செய்வான் என்கிறார் ஆழ்வார்.

"பக்தர்கள் ஏதேனும் ஓர் அசேதன வஸ்துவை வைத்துக்கொண்டு இதை உனக்குத் திருமேனியாகக் கொள்ளவேணும் என்றால், அதை எம்பெருமான் திருமேனியாகக் கொள்ளும்" என்று பெரியவாச்சான்

பிள்ளை இந்தப் பாசுரத்தை விளக்குகிறார். இதற்கு ஓர் அழகான நிகழ்ச்சி எம்பெருமானார் ஜீவிய சரித்திரத்தில் நடந்ததைச் சொல்லுகிறார். ராமானுஜர் ஒருநாள் ஸ்ரீரங்கத்தில் அட்சயபாத்திரம் எடுத்துத் தெருவில் போய்க்கொண்டிருந்தார். பிச்சையாகத் தந்ததைச் சமைத்து உண்பது ஒரு விரதம். வீதியில் விளையாடிக் கொண்டிருந்த சில சிறு குழந்தைகள் மண்ணில் காலாலே கீறி, "உம்முடைய எம்பெருமான் திருமேனி" என்று காட்ட, உடனே பாத்திரத்தைக் கீழே வைத்து தண்டனிட்டருளினாராம்! பின் அந்தக் குழந்தைகள் பெரிய திருமண்டபமும் பெருமாளும் நாச்சியாரும் மண்ணில் கோடு கிழித்துக் கற்பித்து, பெரிய கோயில் நிவேதன வழக்கத்தைப்போல் துணி பரப்பி, அதன்மேல் அன்னத்தை ராசியாகக் குவித்து அமுது செய்விப்பதுபோல், விளையாட்டு நிவேதனம் பண்ணி, "எம்பெருமானாரே! பிரசாதப்படும்" என்று தெரு மணலைக் கையாலே முகந்து எடுத்துக் கொடுக்க, உடையவர் அதைப் பாத்திரத்திலே ஏற்றார்! குழந்தைகள் காலாலே கீறிய மேனியே உடையவருக்குத் திருமாலாயிற்று. அவர்கள் எடுத்துக் கொடுத்த மணலே உவந்த பிரசாதமாயிற்று!

பொன்திகழு மேனிப் புரிசடையம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும்—என்றும்
இருவரங்கத் தால்திரிவ ரேனும், ஒருவன்
ஒருவனங்கத் தென்று முளன்.

"பொன் திகழும் திருமேனிப் புரிசடையம் புண்ணிய"னை சிவனும் திருமாலும் முறையே அவனவன் வடிவத்தில் நின்று திருவிளையாடல்கள் செய்தாலும், ஒருவன் உடலில் மற்றொருவன் எப்போதும் உளன். பரஸ்பரம் சரீர சரீரியாவார்கள்.

தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமே லெந்தைக்கு
இரண்டுருவு மொன்றா யிசைந்து.

—பேயாழ்வார்

சடை மழு அரவு - இவை கொண்ட ஹர ரூபமும், முடி சக்கரம் பொன் நாண் - இவை கொண்ட ஹரி ரூபமும் இரண்டும் அமைந்து ஒரு படியாய்த் திருமலையில் பொருந்தியிருக்கின்றன.

தேருங்கால் தேவன் ஒருவனே யென்றுரைப்பர்
ஆரு மறியா ரவன்பெருமை—ஓரும்
பொருள்முடிவு மித்தனையே யெத்தவம்செய் தார்க்கும்
அருள்முடிவ தாழியான் பால்.

—திருமழிசையாழ்வார்

எல்லாச் சாதன அனுஷ்டானம் பண்ணினவர்களுக்கும் அவற்றிற்குப் பயன் சர்வேசுவரனிடமிருந்து நிச்சயமாக வரும்.

இடமாவ தென்னெஞ்சம் இன்றெல்லாம், பண்டு
படநா கணைநெடிய மாற்குத்—திடமாக

## சைவ வைஷ்ணவ பேதங்கள்

*வையேன் மதிசூடி தன்னோடு, அயனைநான்*
*வையேனாட் செய்யேன் வலம்.*

முன் பாம்பணைமேல் படுத்திருந்தவன் தன் படுக்கை விட்டு என் இருதயத்தை இருப்பிடமாகத் தேடி வந்திருக்கிறான். இது அவன் திருவுள்ளம். என் நெஞ்சமோ சின்னஞ் சிறிய இடம். ஒருவனுக்குமேல் இடமில்லை. ஆகையால் பிறை சூடிய சிவனுக்கும் பிரம்மனுக்கும் இடம் கொடுக்கமுடியாது. ஒரு மூர்த்தியைத் தியானிக்கும் முறையின் தத்துவத்தை இது நன்றாக எடுத்துக் காட்டுகிறது.

*அவரவர் தமதம தறிவறி வகைவகை*
*அவரவ ரிறையவ ரெனவடி யடைவர்கள்*
*அவரவ ரிறையவர் குறைவில ரிறையவர்*
*அவரவர் விதிவழி யடையநின் றனரே.*

—நம்மாழ்வார்

அவரவர்கள் தத்தம் அறிவுக்குத் தகுந்தபடி அந்த அந்தத் தேவதையை ஈசன் என்று தொழுவார்கள். அந்த அந்தத் தேவதையும் தன்னை ஆராதிப்பவர்கள் வேண்டின பலன்களைக் கொடுப்பதில் சக்தி குறையாது. சர்வேசுவரன் எல்லாத் தேவதைகளுக்கும் ஆத்மாவாக இருக்கின்றான் அல்லவோ?

*பிணக்கற அறுவகைச் சமயமும்*
*நெறியுள்ளி யுரைத்த*
*கணக்கறு நலத்தனன் அந்தமில்*
*ஆதியம் பகவன்*



ROJA MUTHIAH
KOTTAIYUR-623 106
NADU INDIA

வணக்குடைத் தவநெறி வழிநின்று
புறநெறி களைக்கட்டு
உணக்குமின் பசையற அவனுடை
உணர்வுகொண் டுணர்ந்தே.

அறு சமயங்களையும் சந்தேகமும் கலவரமும் நீங்கித் தெளிவுபெறச் சமரசப் படுத்தி விளக்கிய கண்ணனைப் பக்தி பண்ணுங்கள் என்கிறார் ஆழ்வார்.

உணர்ந்துணர்ந் திழிந்தகன் றுயர்ந்துருவி
யந்தவிந் நிலைமை
உணர்ந்துணர்ந் துணரினு மிறைநிலை
யுணர்வரி துயிர்காள்
உணர்ந்துணர்ந் துரைத்துரைத் தரியயன்
அரனென்னு மிவரை
உணர்ந்துணர்ந் துரைத்துரைத் திறைஞ்சுமின்
மனப்பட்ட தொன்றே.

உயிர்காள் ! பொருள்களின் உண்மைப் பொருளை அறிந்துகொண்டாலுங்கூட, பரம்பொருளின் இலக்கணங்களை அறியமுடியாது. அரி, அயன், அரன் என்கிற இம்மூன்று மூர்த்திகளில் உங்கள் மனசில் ஈசுவரன் என்று தோன்றின ஒருவனைத் தியானித்துப் பஜியுங்கள்.

ஒன்றெனப் பலவென அறிவரும் வடிவினுள் நின்ற
நன்றெழில் நாரணன் நான்முக னரனென்னு மிவரை
ஒன்றநும் மனத்துவைத் துள்ளிநும் மிருபசை யறுத்து
நன்றென நலஞ்செய்வ தவனிடை நம்முடை நாளே.

## சைவ வைஷ்ணவ பேதங்கள்

பரம்பொருளின் இலக்கணம் உணர்வுக்கு அடங்காது. ஒன்ரு, பலவா என்று அறியமுடியாது. நாரணன் நான்முகன் அரன் என்று பல் பெயர்கொண்ட இந்தப் பரம்பொருளை மனத்தில் ஒன்ருகப் படியும்படி தியானித்து, விருப்பு, வெறுப்பு என்கிற இரு பசைகளையும் நீக்கிக்கொண்டு, ஈசனிடத்தில் பக்தி பண்ணுங்கள்.

வலத்தனன் திரிபுர மெரித்தவ
 னிடம்பெறத் துந்தித்
தலத்தெழு திசைமுகன் படைத்தநல்
 லுலகமும் தானும்
புலப்படப் பின்னுந்தன் னுலகத்தி
 லகத்தனன் தானே
சொலப்புகில் இவைபின்னும் வயிற்றுள
 விவையவன் துயக்கே.

திரிபுரத்தை எரித்த சிவன் நாராயணனுடைய வலது பாகம். சதுர்முகப் பிரம்மாவும் அவன் படைத்த உலகங்களும் திருமாலின் நாபிக்கமலத்தில் அடங்கும். பின்னும் உலகத்தில் மக்களின் கண்ணுக்குப் புலப்படும்படி சர்வேசுவரன் அவதரிக்கவும் செய்கிருன். தவிர, இவ்வளவும் அவன் வயிற்றில் அடங்கிக் கிடக்கும். இவை பரமாத்மாவின் திருவிளையாடல்கள்.

ஒருவ ரிருவ ரோர்மூவ ரெனநின்று
உருவுகரந் துள்ளுந் தோறும் தித்திப்பான்
திருவமர் மார்வன் நிருக்கடித் தானத்தை
மருவி யுறைகின்ற மாயப் பிரானே.

திருக்கடித்தானம் என்கிற திவ்விய ஸ்தலத்தி லுள்ள கோயிலில் பக்தர்களுக்குத் தரிசனம் கொடுத் துக்கொண்டிருக்கும் பெருமான் ஒருவனாகவும் இருவ ராகவும் மூவராகவும் இருக்கிறான். தன் உருவத்தை மறைத்து ஜீவன்களின் உள்ளத்திலும் இருக்கிறான்.

யானும் தானா யொழிந்தானை
யாதும் யவர்க்கும் முன்னோனைத்
தானும் சிவனும் பிரமனும்
ஆகிப் பணைத்த தனிமுதலைத்
தேனும் பாலும் கன்னலு
மமுது மாகித் தித்தித்தென்
ஊனி லுயிரி லுணர்வினில்
நின்ற வொன்றை யுணர்ந்தேனே.

பரம்பொருளை இப்பாசுரத்தில் நம்மாழ்வார் வேதாந்த விஸ்தாரமாக விளக்குகிறார். அதுவே "யான்" ஆகிறது. யானும் தானும் ஒன்றாகி முடி கிறது. அதுவே சேதன அசேதனப் பொருள்கள் அனைத்துக்கும் முந்தி இருந்த பரம்பொருள். அதுவே சிவன், பிரம்மா, விஷ்ணு ஆகிய மும்மூர்த்திகளும். அந்தப் பரம்பொருளை உணர்ந்தேன். அதுவே எல்லா விதப் போகங்களும் ஆகிறது. என் சரீரம், பிராணன், உணர்ச்சி இவற்றில் அது உயிருக்கு உயிராகி நிற்கிறது.

இந்தப் பாட்டு அடங்கிய 78-ஆம் திருவாய் மொழியிலுள்ள பத்துப் பாசுரங்களில் வைஷ்ணவ சமயத்தின் முழுத் தத்துவங்களும் இருக்கின்றன.

தானே யாகி நிறைந்தெல்லா
வுலகு முயிரும் தானேயாய்த்
தானே யானென் பானுகித்
தன்னைத் தானே துதித்தெனக்குத்
தேனே பாலே கன்னலே
யமுதே திருமா லிருஞ்சோலைக்
கோனே யாகி நின்றொழிந்தான்
என்னை முற்று முயிருண்டே.

இந்தப் பாட்டில் அர்ச்சாவதார உபாசனைக்கும் பரப்பிரம்ம உபாசனைக்கும் உள்ள பேதம் ஒழிந்தது.

அவனே யகல்ஞாலம் படைத்தி டந்தான்
அவனேயஃ துண்டுமிழ்ந் தான ளந்தான்
அவனே யவனு மவனு மவனும்
அவனே மற்றெல்லா முமறிந் தனமே.

நாம் கண்டுகொண்டோம். அவனே உலகத்தைப் படைத்தவனும் சம்ஹரித்தவனும். அவதார நிகழ்ச்சிகள் நடத்தியவனும் அவனே. அவனே திருமால், அவனே சிவன், அவனே பிரம்மா. அவனே ஜகத்து முழுவதும்.

உருவா கியஆறு சமயங்கட் கெல்லாம்
பொருவாகி நின்றா னவனெல்லாப் பொருட்கும்
அருவாகிய வாதியைத் தேவர்கட் கெல்லாம்
கருவாகிய கண்ணனைக் கண்டுகொண் டேனே.

கண்ணன் என்பது பரப்பிரம்மமே. வெவ்வேறாக நிருமாணிக்கப்பட்ட ஆறு சமயங்களிலும் நீ சமமாக நிற்கிறாய். எல்லாப் பொருள்களிலும் நீ அந்தராத்மாவாக இருக்கிறாய். நீ சிருஷ்டி கர்த்தா, எல்லாத் தேவர்

களுக்கும் நீயே கருப்பொருள் என்கிற உண்மையை அறிந்தேன்.

"சமயங்கட்கெல்லாம் பொருவாகி" என்ருல், எல்லாச் சமயங்களிலும் நீ சமமாக நிற்கிருய் என்பது பொருள். "கோதில் வண்புகழ் கொண்டு சமயிகள், பேதங்கள் சொல்லிப் பிதற்றும் பிரான் பரன்" என்று பாடியதும் இதுவே.

இலிங்கத் திட்ட புராணத் தீரும்
சமணரும் சாக்கியரும்
வலிந்து வாது செய்வீர்களும் மற்றுநுந்
தெய்வமு மாகிநின்ருன்
மலிந்து செந்நெல் கவரி வீசும்
திருக்குரு கூரதனுள்
பொலிந்து நின்ற பிரான்கண்டீ ரொன்றும்
பொய்யில்லை போற்றுமினே.

வேறு சமயத்தினரைப் பார்த்து, "உங்கள் தெய்வமும் என் குருகூரில் எழுந்தருளா நிற்கும் தெய்வமே. நான் சொல்வது பொய் அல்ல" என்கிருர்.

திருவாய்மொழி நூற்பயனைப் பாடிய பக்தரும்,

அவாவறச்சூ ழரியை யயனை யரனை யலற்றி
அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச்சட கோபன் சொன்ன
அவாவிலந் தாதிகளா லிவையாயிர மும்முடிந்த
அவாவிலந் தாதியிப் பத்தறிந்தார் பிறந்தா ருயர்ந்தே.

என்று கடைசி உபஸம்ஹாரப் பாசுரமாக அமைத்துத் திருவாய்மொழியை முடிக்கிருர்.

20

# பண்பாடு

சீலம், திருந்திய உணர்ச்சி, ஆசாரம், கல்வி, கலை, இவையெல்லாம் கூடி பண்பாடு என்பது உண்டாகும். பண்பட்ட மனிதனுக்கும் பண்படாத பிராகிருத மனிதனுக்குமுள்ள வித்தியாசம், பண்பட்ட வயலுக்கும் பண்படாத காட்டு நிலத்திற்குமுள்ள பேதத்தைப் போல்.

பண்பாடு இரு வழியில் அடைகிறோம். தனி மனிதனைத் திருத்தப்பட்டு அடைவது ஒரு வழி. மற்றொன்று, சமூகத்தில் பரம்பரையாகப் பரவி நிற்கும் பண்பாட்டின் பயனைத் தனிப் பிரயத்தனமின்றி அனைவரும் அடையும் பண்பாடு.

கொஞ்சகாலமாகத்தான் நாம் நம்முடைய சமுகப் பண்பாட்டைப் பற்றிச் சிந்தித்தும் பேசியும் வருகிறோம். ஒருவனிடத்திலே ஏதாவது ஒரு பொருள் ஏராளமா யிருக்குமானல், அதைப்பற்றி அவனுக்கு நினைவே இராது. நம்மிடம் இல்லாத பொருளைப்

பற்றித்தான் நாம் அதிகமாகப் பேசுவோம். நமக்கு ஏதேனும் நோய் வந்தால்தான், நம் உடலில் ஓடும் இரத்தத்தைப்பற்றி எண்ணுகிறோம், இருதயத்தைப் பற்றி எண்ணுகிறோம், வயிற்றைப்பற்றி எண்ணுகிறோம். வயிற்றிலே கெடுதல் செய்யும் பண்டத்தைத் தின்ற பிறகுதான், வயிறு இருப்பது தெரியவருகிறது. பண்பாட்டின் விஷயமும் இப்படித்தான். பண்பாடென்பது இந்திய மக்களிடையே தொன்றுதொட்டு வந்த ஒரு செல்வம். இப்படியொரு செல்வம் நமக்கிருப்பதையே நாம் உணரவில்லை. அயலார் வந்து சொன்ன பிறகுதான் இதை நாம் அறிந்தோம்.

வதந்திகள் இக்காலத்திலே எப்படிப் பரவுகின்றனவோ அப்படியே, எண்ணங்களும் கருத்துக்களும் உலகத்தில் பல்லாண்டுகளாகப் பரவிவந்திருக்கின்றன. இந்தியப் பண்பாடுதான் ஐரோப்பா முழுவதும் சென்று பரவியிருக்கின்றது. நம்மிடமுள்ள அருந்தனத்திலே நமக்கென்று சிறிதும் வைத்துக்கொள்ளாமல் முழுவதையும் பிறருக்குக் கொடுத்து விடுதலும் முடியும் அல்லவா? பசுக்களும், குதிரைகளும் அயல் நாடுகளுக்கு ஓடிவிட்டு, கொட்டிலும் லாயமும்தான் மிஞ்சியிருக்கின்றன என்று சொல்லவேண்டிய நிலைமையில் நாம் இருக்கிறோம். "ஒரு காலத்தில் இங்கே பசுக்களும், குதிரைகளும் இருந்தனவே" என்று சொல்லிக் கொள்வது போதுமா? அரசியல் மாறுதல்களும், அராஜகமும், ஒரு தேசத்திலுள்ள பண்டைப் பண்பாட்டை அழித்துவிடலாம். ஆனால், கலகங்கள் ஒருபுறமிருக்க, மக்களின் அசட்டையும் பண்பாடு

கெடுவதற்கு ஒரு பெருங்காரணம். கலகங்களைப் பற்றிச் சரித்திரங்களிலே படித்தறியலாம். அசட்டை செய்ததைப்பற்றி நாம் நம்மையே, அதாவது நம்முடைய மனத்தையே, ஆராய்ந்து கொள்ளவேண்டும். சிலகாலமாக நாம் நம்முடைய பண்பாட்டை அசட்டை செய்துவிட்டோம். நமது பண்பாடு முறையாக வளர்ந்து வருவது தடைப்பட்டு விட்டது. இதைக் குறித்து இனி வருந்திப் பயனில்லை. நம்மிடம் இப்போதும் வேண்டிய மனத்திண்மை யிருக்கிறது. மனிதனின் உடற்கூற்றைப் பொருத்த வரையிலே, வேதங்களையும், உபநிஷதங்களையும், கீதையையும் செய்தோருடைய மூளைச் சிறப்பை நாமும் பெற்றுத்தான் இருக்கிறோம். இதை இழந்துவிட முடியாது. இது தேக தருமம். பண்டை முன்னோர்களுடைய திறமை நம்மிடத்திலும் பொருந்தியிருக்கிறது. அரசியல் ஆதிக்கமும் அடிமைத் தனமும் அவமானமும் எப்படித்தான் இருக்கட்டும். இருந்தாலும், நாம் சிறிது முயன்றால் நமது பண்பாட்டை மீண்டும் பெற்றுவிடலாம். பெற்றுவிட்டால், உலக முழுதும் நம்முடைய தலைமையையே எதிர்நோக்கி யிருக்கும் என்பதில் ஐயமில்லை.

சமூகப் பண்பாடு என்பது, வழி வழியாக வரும் சமுதாயத் தனமாகும். நம்முடைய சமுதாயப் பண்பாடு முழுவதுமே பயனற்றதென்றும், அதனாலேயே நாம் தாழ்ந்த நிலைக்கு வந்துவிட்டோமென்றும் சிலர் நினைக்கிறார்கள். நமது சமுதாயச் செல்வம் சிறந்ததே. அது சிறந்ததோ, இழிந்ததோ, அதைவிட்டு அந்நிய நாட்டுப்

பண்பாட்டை பெற்றுக்கொள்ள முடியாது. பெற முயன்றால் நம் வாழ்க்கையே வீணாவதுதான் பலன்.

மரத்தை ஏதோ ஓர் இடத்தில் நட்டுவிடுகிறோம். அந்த இடத்திலிருந்தே அது செழித்தோங்கப் பார்க்கிறது. மண்ணிலிருந்து கிடைக்கக்கூடியது அவ்வளவையும் அது எடுத்துக் கொள்கிறது. அதே போல நாம் தோன்றியுள்ள சமுதாயத்தின் அருந்தனத்தை நன்றாகப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். நம்மைச் சுற்றியுள்ள ஆசாரக் கட்டுப்பாடுகளைக் கண்டு முன்னேற்றத்துக்கு வழியே யில்லை என்று எண்ணிவிடுதல் கூடாது.

பௌதிகசாஸ்திர விஞ்ஞானிகளைப் பாருங்கள். பிரகிருதியிலுள்ள பல நியதிகளைக் கண்டார்கள். அவைகளை நினைத்தபடி மாற்றிக்கொள்ள முடியுமா? முடியாது. புதிதாகக் கடுகளவு பிரகிருதிப் பொருளையாவது சக்தியையாவது உண்டுபண்ண முடியாது. இதை விஞ்ஞானிகள் கண்டார்கள். இதனால் பெற்ற பயன் என்ன? நம்மால் ஒன்றும் செய்யமுடியாது, உலகத்திலே எல்லாம் நிலையாக அமைந்துவிட்டது என்று விஞ்ஞானிகள் கையைக் கட்டிக்கொண்டு பேசாமல் இருந்துவிட்டார்களா? இல்லை. எவ்வளவோ அரிய காரியங்களைச் சாதித்துவிட்டார்கள். தங்களைச் சூழ்ந்துள்ள வரையறைகளையும், கட்டுப்பாடுகளையும் உணர்ந்தார்கள். அதன் பயனாக இயற்கை நியதிகளுக்கு மாறுபட்டதென்று தோன்றக்கூடிய பொருள்களான நீராவி யந்திரம், ஆகாய விமானம்

முதலியவற்றைக் கண்டுபிடித்தார்கள். நிலையான இயற்கை நியதிகள் என்ன, அவற்றின் கட்டுப்பாடுகள் என்ன என்பது முழுவதையும் திட்டமாக உணர்ந்தால் தான், இந்தக் கட்டுப்பாடுகளைக் கடப்பதற்கான வழியையும் தெரிந்துகொள்ள முடியும். உண்மையில் நாம் பிரகிருதியின் கட்டுப்பாடுகளை மீறவில்லை, மீறவும் முடியாது; அவற்றோடு ஒத்தே உழைக்கிறோம். இதேபோல, நமது சமுதாயச் செல்வத்தை உணர்ந்து கொள்ள முயன்றோமானால், விஞ்ஞான அறிவினாலே கண்ட மேற்சொன்ன பொருள்களைப்போல, சமுதாய வாழ்விலும் எவ்வளவோ அருமையான காரியங்களைச் செய்துவிடலாம். புறத்திலே உள்ள பொருள்கள் விஷயத்திலே எப்படியோ அப்படியேதான் பண்பாட்டின் விஷயத்திலும். பண்பாடு வளர்வதற்கான நியதிகள் என்ன என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். பண்பாடு ஏன் அமைந்தது, எப்படி வளர்ந்தது. இனி எப்படி வளரும் என்பதை அறியவேண்டும். பிறகு நம்முடைய சீர்திருத்தப் பணியைச் செய்யத் தொடங்கலாம். நம்முடைய கடமை இதுவேயாகும்; இதை உறுதியோடு செய்யத் தொடங்கவேண்டும்.

பொதுப்படப் பேசுவதைவிட்டுக் காரியாம்சமாகக் கவனிப்போம். பண்பாடு என்பது வீட்டிலே பிறக்க வேண்டும்; பிறகு சுற்றத்தார் நண்பர்களிடையிலும், நமது குலத்திலும், பின் நமது ஊரிலும் பரவி விரியலாம்; ஆனால், அதன் பிறப்பிடம் வீடேயாகும். சுத்தம், சுகாதாரம் என்பவற்றைப் பாருங்கள். முதலாவது நம் வீட்டையே கவனியுங்கள். எங்கும் அலங்கோலங்

தான். பென்சில் வேண்டும். வைத்த இடத்தில் இருக்கிறதா? இல்லை, பேனுவேண்டும். அதுவும் அப்படியே. எல்லாம் அலங்கோலந்தான். சுகாதாரமா? வீட்டின் முன் பக்கம், ஏதோ பழைய சமூக வழக்கத்தை யொட்டிச் சுத்தமாகவும் அழகாகவும் இருக்கிறது. உள்ளே போய்ப் பாருங்கள். சுத்தமும் இல்லை, அழகும் இல்லை. இந்த நிலைமையை நாம் திருத்தவேண்டும். பண்பாடு என்ருல் எல்லாம் அதிலே அடங்கி விடுகிறது; நம்முடைய தினசரிப் பழக்கங்கள், அபிப்பிராயங்கள், லட்சியங்கள் ஆகிய எல்லாம்.

சுத்தமாயிருத்தல் என்பதும் பண்பாட்டைச் சேர்ந்ததுதான். நாம் குளிப்பதில் ஒன்றும் குறைவில்லை; ஆற்றிலும் குளத்திலும் சம்பிரதாயமாக முழுகுகிருேம். ஆனுல் தகுந்த முறையிலே இக்காலத்து வாழ்க்கைக்கு ஏற்ற முறையிலே குளிக்க நாம் கற்றுக்கொள்ள வேண்டியவர்களா யிருக்கிருேம். தண்ணீரை ஏராளமாய் உபயோகிக்கிருேம்; எங்குப் பார்த்தாலும் வீட்டில் சிந்துகிருேம். 'தமிழர் நாகரிகத்திலே தண்ணீருக்கு அதிக இடம் கொடுத்திருக்கிருர்கள். அதைச் சிறிது குறைக்கக் கற்றுக் கொள்வார்களானுல் நல்லது' என்று பாரதியார் ஒரு சமயம் சொன்னுர். ஏராளமாகத் தண்ணீரை நாம் புழங்குவதிலொன்றும் குறைவில்லை; அதைச் சரியானபடி உபயோகிப்பதைத் தான் காணேம்.

குழந்தைகளுக்கு நன்னடத்தையும் உள்ளப் பண்பாடும் அமையத்தக்கவாறு நாம் ஒழுகவேண்டும். ஒரு

பூனையைப் பாருங்கள். பூனைக்குட்டி பிறந்து ஆறுமாதங் கூட ஆகியிருக்காது ; ஆயினும் அதற்குள், தன் வாழ்க் கையைப் பற்றியதெல்லாம் அது அறிந்துகொண்டு, தன் தாயைப்போலவே நடக்க ஆரம்பிக்கிறது. நாய்க் குட்டியும் அப்படியேதான். மனிதனுக்கு இருபது வயதுவரையில் அவனுடைய தாய் தந்தையர் அவனைக் கவனித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது ! வாழ்க்கை யில் வேண்டிய பல வேறு அம்சங்களைப் பெற்றோரும், உறவினரும், பிறரும் வளர்த்துக்கொடுக்க வேண்டி யிருக்கிறது. வளர்ப்பிலே எதிலாவது குறைபாடு ஏற் படுமானால், அதனுடைய பலன் குடும்பத்தையே பாதிக் கிறது. மற்றொரு தலைமுறைக்கும் அக்குறைபாடு அமைந்து விடுகிறது. இந்தியாவின் சமுதாய பரம் பரையான பண்பாட்டுச் செல்வத்தை விருத்தி செய்ய வேண்டுமானால், நமது குடும்ப வாழ்க்கையை அபி விருத்திசெய்து அதன் மூலமாக அடுத்த தலைமுறை யிலே இன்னும் மேலானதொரு சமுதாயத்தை உண் டாக்க முயல வேண்டும். சுத்தமாய் இருத்தலும், வீட் டில் ஒழுங்கும் பார்க்கச் சாமானியமாகத் தோன்று கின்றன. (இவைகளை நமக்குப் பின் இருக்கக்கூடிய குடும்பப் பண்பாட்டிலே அமைந்திருக்கும்படிச் செய்ய வேண்டும்). ஆனால் ஒழுங்கு என்பதும் சுத்தமென்ப தும் அற்பமான காரியங்களல்ல.

அதிகமாகச் சத்தம் போட்டுப் பேசியே நாம் பழகி விட்டோம். இருவர் பேசிக்கொண்டிருந்தால் அவர் களுக்குள் ஒருவர்பேசுவது மற்றவருக்குக் கேட்கக் கூடிய அளவு உரத்துப் பேசினால் போதுமே, அதை

விட உரத்துப் பேசுவானேன்? பேச்செல்லாம் ரகசியமாயிருக்க வேண்டுமென்பது கருத்தல்ல. மற்றவர்களும் கேட்க வேண்டுமானால், அருகிலேவந்து கேட்டுக்கொள்ள வேண்டியதுதான். அளவுக்கு மிஞ்சிய கூச்சல் கூடாது என்பதற்காகவே இதைச் சொல்கிறேன். வீட்டிலும் பிற இடங்களிலும் இரண்டு மூன்று பேர் சேர்ந்து கூச்சல் போட்டுப் பேசுவது கேட்க அருவருப்பைத் தருகிறது. இந்த விஷயமும் நமது சமுதாயப் பண்பாட்டைச் சேர்ந்ததாகும். சிறிது சிறிதாக இவற்றையெல்லாம் திருத்திக்கொள்ளவேண்டும்.

வீட்டிலே நாம் பேசும் பாஷையைப்பற்றி ஒரு வார்த்தை. இப்போது நாம் வீட்டிலே என்ன பாஷை பேசுகிறோம்? தமிழ் என்று பதில் சொல்லலாம். நான் அதை ஒப்புக்கொள்ளவில்லை. பல மொழிகளும் சேர்ந்த ஒரு கலப்பு மொழியைத் தான் நாம் பேசுகிறோம். இது மிக்க அருவருப்பைத் தருகிறது. பண்டைக் காலத்திலே புத்தகங்களும் இல்லை, அச்சுக் கூடங்களும் இல்லை. இராமாயணம், பாரதம், உபநிஷதங்கள் முதலிய காவியங்களின் பிரதிகளும், சாஸ்திரங்களின் பிரதிகளும் மிகவும் அபூர்வம். மகாராஜாவாக இருந்தால்தான் எவ்வளவோ கஷ்டப்பட்டு ஒரு இராமாயணப் பிரதியோ, பாரதப் பிரதியோ சம்பாதிக்க முடியும். அதுவும் கிடைத்தற்கரிய ஓர் அருந்தனமாக இருக்கும். அக்காலத்தில் கல்வியெல்லாம் வாய்மொழியாகவே போதிக்கப்பட்டது. ஏட்டுச் சுவடிகளும் குறைவு. அவற்றைப் படித்தோரும் மிகச் சிலரேயாவர். அவர்கள் ஒவ்வொரு தடவை பாடம்

சொல்லும்பொழுதும், இரவலாகப் பெற்று வந்த ஏட்டுச்சுவடியைக் கையில் வைத்துக்கொண்டு புரட்ட முடியாதல்லவா? ஆகவே, அவர்கள் படித்தவற்றை மனப்பாடம் செய்யவேண்டி யிருந்தது. இதற்கேற்ற முறையிலே நூல்கள் யாவும் எதுகையும் மோனையும் பொருந்திய பாட்டாகவே இருந்தன. வைத்திய புத்தகங்களும், கணிதநூல்களும் எல்லாம் பாட்டாகவே இருந்தன. சுக்கு, மிளகு, திப்பிலி-இவற்றைப்பற்றிக் கூடவா பாட்டு என்று கேட்கத் தோன்றும். அக்காலத்தில் அச்சுப்பிரதிகள் கிடையாதென்பது நினைவிருக்கவேண்டும்.

நூல்களிலுள்ள பொருள் மனதிலே தங்கவேண்டுமானால் பாட்டாயிருந்தால்தான் எளிது. வசனம் மனதிலே நிற்காது. இன்று அச்சுக்கூடம் ஏற்பட்டு விட்டபடியினாலே எழுதுவதெல்லாம் வசனமாகவே யிருக்கிறது. ஆனால் பழைய காலத்திலே, எல்லாம் பாட்டாய்த்தான் இருக்கவேண்டியிருந்தது. செய்யுள் முறை இதனால் வளர்ந்தோங்கிற்று. பின்னால் அது வளரவில்லை. நாம் அதை வளர்க்கவில்லை. ஆனால் இன்று என்ன செய்கிறோம்? எழுதும்போது வழக்குத் தமிழை விட்டுவிட்டுப் பழைய செய்யுள் பாஷையில் எழுதப் பார்க்கிறோம். பேசும்பொழுதோ, தேவையில்லாதபோதும்கூட ஆங்கிலச் சொற்களை உபயோகிக்கிறோம். தாய் மொழியிலே அன்னிய மொழிச் சொற்களைக் கலந்து பேசுகிற ஆபாச வழக்கம் நகரங்களில் மட்டும் இருப்பதோடன்றி, நாட்டுப்புறத்திலும் பரவி

விட்டது. தமிழோ, தெலுங்கோ, ஹிந்தியோ, ஆங்கிலமோ எது வேண்டுமானாலும் நாம் பேசலாம். ஆனால் ஆங்கிலப் பெயர்ச் சொற்களையும், தமிழ் வினைச் சொற்களையும், சேர்த்துப் பேசுகிற விகாரமான பேச்சு கூடவேகூடாது. “பண்ணு” என்ற ஒரு சொல்லைக் கண்டுபிடித்து விட்டோம். ரிப்பேர் பண்ணு, வாக் பண்ணு, சிங் பண்ணு, ஸிப் பண்ணிக் குடியுங்கள், ஹாட்வாட்டர் வேணுமா, இப்படி எத்தனையோ. சிறிது மனம் வைத்தால் இந்தப் பழக்கத்தைப் போக்கிக் கொள்ளலாம். உடனே போக்கிவிட முடியாது. சிறிது சிறிதாகப் போக்கிவிடலாம். ஒருவர் இக்காலத்தில் முற்றிலும் சரியான தமிழிலேயே பேசுவாரானல் அவரைப் பயித்தியக்காரரென்று கருதி விடுவார்கள். ஆனல் தமிழோடு இரண்டொரு ஆங்கிலச் சொற்களைக் கலந்துகொண்டால், இப்படிக் கருதமாட்டார்கள்! நாம் கொஞ்சம் முயன்று, பேச்சில் தமிழைக் கையாளவேண்டும். ஆனல் இதிலே தவருன பிடிவாதம் கூடாது. நம்மிடையே ஒரு புதிய கருத்தோ, பொருளோ, வழங்குமானல் அதற்கு அன்னியமொழிப் பெயர் கொடுத்து வழங்குவதில் எவ்விதத் தவறுமில்லை. தேவையில்லாமல் ஆங்கிலச் சொற்களைப் போட்டுத் திணித்து, நம்முடைய பேச்சைப் பாழ்பண்ணக் கூடாது என்றுதான் நான் சொல்லுகிறேன். நாம் கெட்டாலும், நம்முடைய குழந்தைகளாவது சுத்தமான அழகிய பேச்சுத் தமிழைக் கற்றுக்கொள்ள வேண்டும். அன்னிய மொழியைச் சிறிதளவு பயின்ற காரணமாக, இயல்பாகவே சரி

யாய்ப் பேச வருகின்ற நம்முடைய சொந்த மொழியை யும், அதன் இலக்கணத்தையும் விட்டுவிட்டு, தவருன இலக்கணத்தையும் தவருனசொற்களையும் கையாண்டு, அன்னிய மொழியிலே பேசிக் கொள்வது எளிதென்று எண்ணுகிறேமே, அது சரியன்று.

இந்தியா முழுவதும் ஒன்ருக வேண்டுமானல், - கன்னியாகுமரியிலிருந்து இமயமலை வரையில் எங்கே போனலும் நாம் சொல்வதை மற்றவர்கள் புரிந்து கொள்ள வேண்டுமானல், - நாட்டின் பொது மொழி யையும் நாம் தெரிந்திருக்க வேண்டும். பாரத நாட்டின் பொதுமொழி ஹிந்துஸ்தானி. இந்தியாவிலே பண் பட்ட மனிதன் என்று சொல்லிக்கொள்ள விரும்பினல் ஹிந்துஸ்தானி அவசியம் தெரியவேண்டும். காசிக்குப் போனல், தமிழில் பேசினலும் ஆங்கிலத்தில் பேசின லும், அங்கே நம்மை நாகரிகமானவர்களென்று கருத மாட்டார்கள். நாட்டின் பொதுமொழியாகிய ஹிந்து ஸ்தானியை அறிந்தாலொழிய நம்மை விரிந்த நோக்க மில்லாதவனென்றே எண்ணிவிடுவார்கள். இதை நான் சொன்னல் ஒப்புக்கொள்ளாதவர்கள், இப்போது ஆயிரக்கணக்காக ராணுவத்தில் சேர்ந்து தேசம் சுற்றி வந்த நம் வாலிபர்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். ஆங்கிலம் அறியவேண்டியதும் இன்றி யமையாதது. அன்றியும், பண்பட்ட ஹிந்துவுக்கு ஓரளவு சமஸ்கிருத மொழிப் பயிற்சியும், முகம்மதி யருக்குப் பாரசீக மொழிப் பயிற்சியும் இருத்தல் வேண்டும். இவ்வளவும் தெரிந்திருந்தால்தான் ஒருவர்

முழு நாகரிகம் பெற்றவராவார். இந்த யுத்தம் முடிந்த வுடனே உலகமெங்கும் இங்கிலாந்தின் ஆதிக்கமும் அமெரிக்காவின் ஆதிக்கமும் மிகவும் பெருகும். எந்த நாட்டினராயினும் ஆங்கில மொழியிலே காரியம் நடத்துவார்கள். ஆகவே நாம் ஆங்கிலத்தை அவசியம் பயிலத்தான் வேண்டும். பல மொழிகளைக் கற்பது மற்றவர்களுக்குக் கஷ்டமாயிருக்கலாம்; ஆனால் இந்தியர்களாகிய நமக்கு இது மிகவும் எளியது. நம்மில் சிலர் ஆங்கிலேயரைவிட அழகாக ஆங்கிலம் பேசுகிறார்கள். இது நமக்குள்ள தனிச் சிறப்பு. இதனாலே நாம் மற்றவர்களைவிட உயர்ந்தவர்கள் என்ற அர்த்தமில்லை. பாஷைகள் கற்பது நமக்குச் சுலபம்.

நமது இசையானது வித்துவான்களிடமும் பாகவதர்களிடமும் மட்டுமே வழங்கும்படியாக விட்டுவிடக் கூடாது. இசையை வளர்த்து, குடும்ப வாழ்க்கையிலும் அது இடம் பெற்றிருக்கும்படி செய்ய வேண்டும். ஒவ்வொரு குடும்பத்திலும் அரை மணி நேரமாவது இசைக்கென்று ஒதுக்கிவைக்க வேண்டும். பெற்றோருடன் குழந்தைகளும் சேர்ந்து பாடவேண்டும். வீட்டிலே வழங்கும் இசையில் சங்கீத வித்வான்கள் தலையிட வேண்டியதில்லை. இப்படியே நடனத்தையும், குடும்பக் கலையாக்கிவிட வேண்டும். தாளத்துக்கும் இசைக்கும் ஒத்து உடலின் அங்கங்கள் இயங்குவதற்குச் சமமான உடற்பயிற்சி வேறு எதுவும் கிடையாது. நடனத்திலே சிரமமில்லாமல் உடற் பயிற்சி உண்டாகிறது. வீட்டிலும், வெளியிலும், நாட்டிலும்

பொதுவாக மக்கள் அனைவரிடத்திலும், நடனத்தினால் இன்பம் பிறக்கிறது. உயர்தர பரத நாட்டியம் சாமான்ய மக்களால் ஆட முடியாது என்றால், எளிய இன்பமான நடனங்களை வீட்டிலே பழகிக்கொள்ள லாம். குழந்தைகள் ஆடுவதிலே ஆராய்ச்சியாளர் குற்றங் குறைகளைக் காண முயலக்கூடாது. பெற் றோரும் கூடவே சேர்ந்து நாட்டியத்தில் ஈடுபட்டா லொழிய, நாட்டியத்தில் குழந்தைகளுக்கு உற்சாகம் பிறக்காது. குழந்தைகளுக்கு மட்டுமென்று எதையும் தனியாக ஒதுக்கி வைக்கக்கூடாது. சாஸ்திரோக்த மான உயர்ந்த சங்கீதமும் உயர்ந்த நாட்டியக் கலையும் ஒருபுறம் வளரவேண்டும். ஆனால், வீட்டிலே வழங் கும் சங்கீதமும் வீட்டிலே வழங்கும் நாட்டியமும் தனிச் செல்வம். அது சங்கீதத்திலும் நாட்டியத்தி லும் காணப்படும் உயர்ந்த கலைப்பண்புகளுக்குச் சிறப் பும் உயிரும் தரும்.

எல்லாவற்றையும்விட, பண்பாட்டுக்கு முக்கிய மான அங்கம் நல்லொழுக்கம். குடும்பத் தலைவனும் மனைவி மக்களும் ஒருவரோடொருவர் அன்போடு நடந்து கொள்ளவேண்டும். குடும்ப வாழ்க்கையில் அன்புக்குக் குறை ஏற்பட்டால் வேறு எந்த நலங்கள் இருந்தாலும் விகாரமாகத் தோன்றும். வந்த விருந் தினரைச் சந்தோஷமாக உபசரிக்க வேண்டும். விருந் தினரை உபசரிப்பதில் நம்முடைய சவுகரியங்களைத் தாராளமாக விட்டுக் கொடுக்கவேண்டும். அதிதி உப சாரமே பாரத நாட்டின் தனிப் பண்பாடு. எவ்வளவு

ஏழையாயிருந்தாலும் விருந்தினரை உபசரித்தல் பாரத நாட்டின் ஆசாரம்.

பேசும் பேச்சு இனிமையாக இருக்கவேண்டும். மற்றவர்களுடைய உணர்ச்சிகளைப் பொருட்படுத்தாமல் நடந்து கொள்ளக்கூடாது. உள்ளத்தில் அன்பு இருந்தால், பேச்சு அந்த அன்பில் தோய்ந்து ஈரத்தோடு தானாக வெளிப்படும் என்று வள்ளுவர் சொல்லியிருப்பது, இனிய பேச்சுக்கு இலக்கணமும், அதை அடையும் வழியுமாகும். எந்தச் சந்தர்ப்பத்திலும் மனம் போனபடி விட்டுவிடாமல் பேச்சிலும் காரியத்திலும் அடக்கம் இருக்கவேண்டும். எவ்வளவு கல்வியும் செல்வமுமிருந்தாலும், அடக்கம் இல்லாவிடின் பண்பாடென்பது இல்லை. நம்மைவிட வாழ்க்கையில் தாழ்ந்த நிலையிலிருப்பவர்களிடம் பிரியமும் மரியாதையும் காட்டவேண்டும். பண்பாட்டுக்கு 'விநயம்' என்றே வடமொழியில் பெயர். கடுமையாகப் பேசவோ நடந்துகொள்ளவோ கூடாது. கடும் பேச்சுப் பேசும் வழக்கமானது, எனக்குப் பண்பாடு இல்லை, நான் திருந்தியவனல்ல என்று உரத்தகுரலில் ஊருக்கே எடுத்துச் சொன்ன மாதிரியாகும். வாழ்க்கையில் நம்மோடு சமமானவர்களிடம் நம்முடைய நடையும் பாவனையும் கவுரவமாக இருக்கவேண்டும். சமநிலத்தில் செல்லும் தேர்போல் நம்முடைய பேச்சு போகவேண்டும். கீழ்த்தரமான பயனற்ற பேச்சுகளில் இறங்கக்கூடாது.

சமூகத்தில் பெரியவர்கள் பழிக்கக்கூடிய காரியங்களை மறைவாகவும் செய்யக்கூடாது. யாரேனும்

தவருே தீங்கோ செய்தால் உண்டாகும் கோபத்தை அடக்கிக் கொள்ள வேண்டும். சாந்தத்தை இழந்து விடக்கூடாது. பொருளையும் சுகத்தையும் கண்டு, ஆசை பொருமைகளைக் காட்டக்கூடாது. ஏழைகளுக்கு உதவுவது நம்முடைய தேச ஆசாரத்தில் இன்றியமையாதது. எந்த நல்ல காரணத்தைக்கொண்டும் இதை விட்டு விட்டால், நம்முடைய பண்பாடு மயில் தன் தோகையை இழந்தவாருகும்.

இவையெல்லாம் நம்முடைய பண்பாட்டின் அங்கங்கள். இவ்வொழுக்கங்களை நாம் காப்பாற்றினல் நமக்கே நன்மை செய்துகொள்வோமென்பதல்லாமல், சமூகப்பண்பாட்டுக்கு உதவினவர்களாகவும் ஆவோம்.

சீலமும் கல்வி கலையறிவும் நல்லுணர்ச்சியும் அழகுபடக் கலந்து நிற்பது பண்பாடு என்ருல், அது எல்லா நாட்டினருக்கும் ஒன்றுதானே எனத் தோன்றலாம். அப்படியல்ல. கண்ணும் மூக்கும் முகமும் மற்ற அங்கங்களும் அந்தமாகப் பொருந்தி நிற்பது அழகு என்ருலும், பிராணி உலகத்திலும் மக்களுலகத்திலும் எத்தனை வகைவகையான அழகைப் பார்க்கிருேம்? இவ்வாறே பல நாடுகளின் பலவிதப் பண்பாடுகளும். உலகமெல்லாம் ஒன்று என்பது உண்மை. அழகெல்லாம் ஒன்று என்பதும் உண்மை. ஆயினும், வேறுபாடுகளே உலகத்தின் பேரழகு.

# 21

## சின்ன விஷயங்கள்

வாழை மரம் ஒன்றைப் பாருங்கள். அதன் வடிவம் வேர்முதல் நுனி வரையில் எவ்வளவு அமைப்பாக அமைந்திருக்கிறது! அகன்ற பச்சை இலைகள், தளதள வென்று உயிரொளியோடு மின்னும் தண்டுமரம். நுனியில் பாதி மூடியும் பாதி திறந்ததுமாக எட்டிப் பார்த்துக் கொண்டிருக்கிற புதிய குருத்து. அடியில் பட்டுப் போல், அழகாய்ப் பழுப்பேறின பட்டை. 'என் வேலை முடிந்தது. வளரும் செடியின் வளர்ச்சிக்குக் காப்பாகக் கீழே கிடக்கிறேன், தடையாக நிற்கமாட்டேன்' என்று வாய்திறந்து பேசுவதுபோல் இருக்கிறது. உயிர் படைத்த ஒரு ஜனசமூகத்தின் பண்பாட்டுக்கு வாழைமரம் எவ்வளவு பொருத்தமான உபமானம்!

குப்பையன் வீட்டுப் புழைக்கடையில் அவன் தகப்பனார் வைத்த வாழைமரம் ஒன்று இருக்கிறது. மேலே விட்ட இலையெல்லாம் அறுபட்டு, மரம் மொட்டை

யாய்க் கம்பம்போல் நிற்கிறது. கீழே சாக்கடை நீர். அதில் அழுகிக் கிடக்கும் பட்டைகள். செடிக்கு ஜலம் தானுகச் சாக்கடையில் வந்தால் உண்டு. உலர்ந்து கிடந்தாலும் கேட்பார் இல்லை. இந்தப் பரிதாபமான நிலையிலும் குருத்துவிடப் பார்க்கிறது; எவ்வளவு கொடுமைக்கு இடையிலும் வளரப் பார்க்கிறது. வளராமற் போனல் செத்தல்லவோ போகவேண்டும்? இது நம் பண்பாட்டின் தற்போதைய நிலை என்று சொன்னல் குற்றமில்லை. குப்பையன் வீட்டு வாழை மரத்தில் இன்னும் உயிர் இருக்கிறது. காமதேனு அல்லவா? கொஞ்சம் கவலை செலுத்திக் கவனித்தால், எல்லாம் தரும். இதுவரையில் அதற்குச் செய்த கொடுமையையும் மறந்து, குருத்துவிட்டு அழகாக வளரும்!

பண்பாடு என்பது முக்கியமாக மக்களின் வீட்டு விவகாரத்தில் கலந்து நிற்கும்; ஆயினும் வீட்டுக்கு வெளியேகூடப் பண்பாட்டின் ராஜ்யம் உண்டு. வெளியூர்க்காரர்கள் ரயிலில் சென்னபட்டணத்துக்கு வந்தால், சென்ட்ரல் ஸ்டேஷனை அணுக அணுக, முதல் முதலில் காலையில் அவர்கள் காணும் காட்சி என்ன? ரயில் வேகமாய்ச் செல்லும்போது, வெளியே பாதையிலும் வயல் வெளிகளிலும் இருக்கும் ஜனங்களுக்கு, வண்டிக்குள் இருப்பவர்களின் முகங்கள் தெரிகிறதில்லை; ரயில் வண்டியின் வேகம் மறைத்துவிடுகிறது. ஆனல், அதேமாதிரி வண்டிக்குள் இருப்பவர்களுக்கு, வெளியே உள்ள பொருள்களும் நிகழ்ச்சிகளும்

மறைந்து போவதில்லை; வியக்தமாகத் தெரிகின்றன. இந்த வித்தியாசம், பாவம், ரயிலோரம் காலைக்கடன் கழிப்பவர்களுக்குத் தெரியாது. வெளிநாட்டுப் பிரயாணிகள் சென்னை வந்துசேரும் தருவாயில் ஜன்னல் வழியாக ஊரைப் பார்ப்பார்கள். 'இதென்ன மதராஸ் ஜனங்கள் இப்படிச் செய்கிறார்கள்! இவர்கள் ஊரில் மறைவான இடமே கிடையாதா? ரயிலோரம் திறந்த வெளியில் நாணமே இல்லாமல் வெளிக்கு உட்காருகிறார்களே!' என்று வியப்பும் அருவருப்பும் கொள்வார்கள்.

இது ஒரு சிறிய விஷயம். சொல்லுவதற்கும் படிப்பதற்கும் அவலட்சணமாகத்தான் இருக்கிறது. சின்ன விஷயமாயினும் பெரிய வெட்கக்கேடு. நம்முடைய தென்னாட்டின் பண்பாட்டழகையும் பெருமையையும் பற்றி வேறு ஊர்களில் பேசினால், அவர்கள் இதை எடுத்துக் காட்டுகிறார்கள். யாரும் இதைக் கவனிப்பார் இல்லையே என்று இதைப்பற்றி எழுதுகிறேன்.

ரயிலோரம் மண்ணெடுத்த குழிகளில் அழுக்கு ஜலம் தேங்கி நிற்பது சவுகரியமே. ஆயினும், அந்தச் சவுகரியத்திற்காக இந்த அநாகரிகக் காட்சியா நம்முடைய நாட்டுக்குப் புதிதாக வருகிறவர்களுக்கு நாம் முதலில் அளிக்கவேண்டும்? எங்கேயாவது மறைவாக உட்காரலாம்; ரயிலோரம் வேண்டாம். தண்ணீருக்காகக் கையில் ஒரு சொம்பு எடுத்துப் போனால், தீர்ந்தது. மண்ணில் ஒரு சிறு குழி பறித்து அதில் கழித்துவிட்டு மறுபடி அதன்மேல் மண்ணைப்போட்டு மூடி

விட்டால், எவ்வளவு நாகரிகமாகவும் ஆரோக்கியமாக வும் இருக்கும்? ரயில் அல்லது ஜனங்கள் நடக்கும் பாதையோரம் தவிர்த்து வேறு இடம் இல்லவேயில்லை யானால், யாராவது இதற்காக முயன்று ஒரு சுவர் போடவேண்டும். செடியோ, மரமோ, கொடியோ போட்டு வளர்த்துக் கொஞ்சம் மறைவு உண்டாக்க வேண்டும்; இது நம்முடைய ஊரின் பெயரைக் காப்பாற்றுவதாகும்.

போலீஸ்காரர்களுக்குப் பயந்து ஒரு வேலை செய் யாமலிருப்பது போதாது. தெருவிலும், வாய்க்கால் ஓரத்திலும், ஜனங்கள் நடமாடும் வேறு பொது இடங் களிலும் மலசலங் கழிப்பது அநாகரிகம். ஊரைக் கெடுக்கிறது; நமக்கும் நல்லதல்ல. யார் இருந்தாலும் இல்லாதிருந்தாலும், செய்யாமலிருக்க வேண்டும். வீட்டில் குழந்தைகள் கண்டவிடத்தில் அசுத்தம் செய்தால் சும்மா இருப்போமா? ஊரெல்லாம் ஒரு வீடு, நாம் அதில் குழந்தைகள் அல்லவா? 'வீடுதான் நம்முடையது, ஊர் யாருடையதோ தெரியாது' என் றிருப்பது அநாகரிகம்.

சிறு வயதில் ஏற்படும் பழக்கமே என்றைக்கும் ஸ்திரமாக நிற்கும். பிறகு மாற்றுவது மிக்க கடினம். குழந்தைகள் பெரியவர்களைப் பார்த்தே எதையும் கற்றுக்கொள்கிறார்கள். அடக்கம், பொறுமை, நய மொழி, மரியாதை, பிறர் மனம் நோவாமல் கவனித்துப் பேசுவது. இவையெல்லாம் பெரியோர் எப்படி நடத் திக் காட்டுகிறார்களோ அதைத்தான் குழந்தைகள்

கற்றுக்கொள்கிருர்கள். இதனுல் பெரியோர் மிக்க ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டும் என்பது ஏற்படுகிறது. பள்ளிக்கூடங்கள் தேசத்தில் எத்தனை இருந்தாலும், பண்பாட்டுக்குப் பள்ளிக்கூடம் வீடே யாகும். நம்முடைய குழந்தைகள் பிற்காலத்தில் பண் பட்டவர்களாக வாழ்க்கை நடத்தவேண்டுமானுல், வயது முதிர்ந்தவர்களாகிய நாம் சிரமப்பட்டுக் கவனம் செலுத்தி ஒவ்வொரு காரியத்திலும் பெருந்தன்மையும் பொறுமையும் வினயமும் காட்டவேண்டும்.

மனைவி கணவனிடம் நடந்துகொள்ள வேண்டிய முறையைப்பற்றி நம்முடைய புராண இதிகாசங்களில் விரிவான உபதேசம் இருக்கிறது. வேண்டிய அளவும் அதற்கு மேலேயுங்கூட இருக்கிறது. ஆனுல் அதைத் திருப்பிப் போட்டுக் காட்டவில்லை. பண்பட்ட கண வன் மனைவியிடம் நடந்துகொள்ள வேண்டியதைப் பற்றி நமக்குப் படிப்புப் போதவே போதாது. இதைப் பற்றி எழுதப் புகுந்தால் அது ஒரு தனிப் புத்தகமாக முடியும். பொதுவாக ஒரு சூத்திரம் சொல்லுகிறேன்.

கலியாணம் ஆகிவிட்டது, இனி இந்தப் பெண் என்னுடைய சொத்து, அவளுடைய பணிவிடையைக் கட்டாய வரிவசூலைப்போல நான் பெறலாம் என்று எண்ணுதல்கூடாது. இரு நண்பர்கள் ஒருவரை ஒரு வர் மதித்து, ஒவ்வொரு நிமிஷமும் கவனத்துடன் நடந்துகொண்டு, அன்பைச் சுயேச்சைப் பொருளாக எப்படி வளர்த்து வருகிருர்களோ அப்படியே, கண வன் மனைவியிடம் மரியாதையாகவும் அன்பாகவும்

கவனமாகவும் நடந்துகொள்ளவேண்டும். 'அவள் எப்படியும் மனைவிதான், எப்போதுமே மனைவி; என்னை விட்டுப் போய்விட முடியுமா? வீட்டிலுமா கவனமும் கவலையும்?' இவ்வாறு எண்ணி மனைவியை அலட்சியமாகவோ, அகவுரவமாகவோ நடத்தக்கூடாது. கவலையும் கவனமும் செலுத்துவது வழக்கப்பட்டு, அதுவே வாழ்க்கைச் சுகமாகத் தோன்றும். அமிஞ்சிமுறையில் வெற்றியுமிராது, சுகமுமிராது. இருவர் உடலும் பக்கமாகவே இருக்கலாம்: ஆனால் உள்ளம் வெகு தூரம் போய்விட முடியும்.

கணவனும் மனைவியும் அன்புடன் வளர விசேஷச் சவுகரியம் இயற்கை அமைப்பில் இருக்கிறது. அதை வீண் விரயப்படுத்தாமல் பொன்னைக் காப்பதுபோல் காத்து மிக்க பக்குவமாய்ப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். பண்பட்ட தம்பதிகளும் குழந்தைகளும் ஒரு குடும்பத்தில் கூடி வாழ்வதைப் பார்த்தால் வீட்டுக்குள்ளேயே வெளியே போகாமல் எல்லாச் சுகமும் சந்தோஷமும் அவர்கள் பெற்று வருவதைப் பார்க்கலாம். பெற்றோரும் குழந்தைகளும் ஒருவரோடு ஒருவர் தைரியமாகப் பேசி விளையாடி, பயம் என்பதே இல்லாமலும், ஆனால் அடக்கம், பொறுமை, மரியாதை முதலிய குணங்களை விட்டுவிடாமலும் நடந்துகொள்ள முடியும் என்பதைப் பார்க்கலாம்.

வீட்டில் பணிவிடைக்கு வேலைக்காரர்கள் இருந்தால், அவர்களை நெருங்கிய பந்துக்களைப்போல் நடத்த வேண்டும். அவரவர் வயதுக்குத் தகுந்தாற்போல்,

மாமனாகவும் அத்தையாகவும் தம்பியாகவும் தங்கை யாகவும் எண்ணி நடந்துகொள்ள வேண்டும். இதுவே பூர்வீக முறை. இக்காலத்தில் வீட்டுப் பணியாட்களி டம் செலுத்தும் அன்பு குறைந்து வருகிறது; தொழிற்சாலை முறையாக மாறிவிட்டது. வேலை செய் யும் திறமையும் தேக பலமும் நமக்கு இல்லாததால் வேலையாட்களை வைத்துக் கொள்கிறோம். அவர்கள் நம்மைவிடத் தாழ்ந்தவர்கள் என்று வீட்டுக்காரனா வது வீட்டுக்காரியாவது எண்ணி, பேச்சிலும் காரியத் திலும் அதைக் காட்டுவது அநாகரிகம். வீட்டில் வேலைக்கு அமரும் ஏழைகள், ஆணாயிருக்கட்டும் பெண்ணாயிருக்கட்டும், அவர்களும் நம்மைப்போல் உணர்ச்சி படைத்தவர்கள், குடும்பஸ்தர்கள். அவர் கள் தங்களுடைய குழந்தைகள், மனைவி, புருஷன், தாய், தந்தை, இவர்களை வீட்டில் விட்டுவிட்டு, நாம் செய்யமுடியாத வேலைகளைக் கொஞ்ச நேரம் நம் வீட் டில் நமக்காகச் செய்து கொடுத்து வருகிறார்கள். பணி விடை செய்வதில் அவர்களுக்கு மகிழ்ச்சி உண்டாகும் படியாக, வேலை வாங்கும் எஜமானர்கள் அவர்களிடம் நடந்துகொள்ளவேண்டும். அவர்களிடம் பெறவேண் டிய பணியைப் பெற்றுக்கொண்டு அவர்களைச் சந்தோ ஷமாய் வீட்டுக்கு அனுப்பிவிடவேண்டும்.

இதுவெல்லாம் மிக்க சிரமம் என்று எண்ண வேண்டாம். பண்பாடு பெறாதவர்களுக்கு மிக்க சிரம மாக இருப்பதெல்லாம் பண்பட்டவர்களுக்குச் சிரமமா யிராது. சுகமாகவே இருக்கும். பண்பாட்டின் இரக சியம் இதுவே. ஒரு வீட்டில் புகுந்தால், அந்த வீட்

டில் வேலை செய்யும் வேலைக்காரர் முகத்தையும் வேலையையும் பார்த்தே, குடும்பம் பண்பாடு பெற்ற குடும்பமா அல்லது அநாகரிகர்களான குடும்பமா என்று தீர்மானித்துவிடலாம். பண்பட்ட மேலோர் வீட்டில், வேலைக்காரர்கள் யார் பந்துக்கள் யார் என்று சொல்லுவதே கஷ்டமாயிருக்கும். பணிவிடையாட்கள் சுறுசுறுப்பாகவும் மலர்ந்த முகத்தோடும் மற்றவர்களுடன் அன்போடு கலந்தும் வேலைசெய்து வருவார்கள். வீடு தங்களுடையதாகவே பாவித்துச் சந்தோஷமாகவும் தைரியமாகவும் நடந்துகொள்வார்கள். பண்பட்டவர்களுக்கே வேலைக்காரர்களை வைத்துக்கொள்ள உரிமையுண்டு. அநாகரிகர்களுக்கு அந்த உரிமை இல்லை.

மனித வர்க்கத்தை அண்டி வாழும் பிராணிகளான நாய் பூனை காக்கை குருவி முதலியவற்றினிடம் பண்பட்டவர்கள் நடந்துகொள்ளும் முறை வேறு; பண்படாதவர்களின் போக்கு வேறு. இந்தப் பிராணிகளின் உடலுக்குள் கிடக்கும் சூக்ஷ்ம உணர்ச்சிகளையும் அவற்றின் மகிழ்ச்சியையும் வருத்தத்தையும் அன்பையும், பண்பட்டவன் எளிதில் காண்பான். அந்தப் பிராணிகளைப் பார்க்கும்போது அவைகளின் உடலில் சிறைப்பட்டுக்கிடக்கும் அந்தராத்மாவைப் பார்ப்பான். இதை இன்னும் விரித்தால் வேதாந்தமாகப் போகும் நம்மை அண்டிப் பிழைக்கும் பிராணிகளிடம் அன்பு காட்டுவதுதான் பண்பாடு. கசாப்பு வகை உண்பதில்லை, சைவ உணவுதான் கொள்வேன் என்று விரதம் காப்பதுமட்டும் போதாது.



LIBRARY SERVICE INDIA
KOTTAIYUR-623106

வீட்டில் வந்து தயிர் பால் காய் கறி முதலிய பண்டங்களை விற்றுப்போகும் ஏழை ஜனங்களிடம் நடந்து கொள்ளுவதிலும் பண்பாடு உண்டு. அவர்களை வேலைக்காரர்களாக எண்ணுவது தவறு. ஒரு கிழவி தன் ஜீவனத்தை நடத்துவதற்காக, அப்பளம் அல்லது அவல், சிரமப்பட்டுச் செய்து கொண்டுவந்து தருகிறாள். 'பாட்டி, வேண்டாம்' அல்லது 'வாருங்கள் பாட்டி, உட்காருங்கள்' என்று சொல்ல வேண்டும். இவ்வாறே எல்லாரிடமும் நடந்துகொள்ள வேண்டும். தங்கள் ஜீவனம் நடத்தத்தான் பண்டங்களை விற்பவர்கள் வீடு வீடாய்ச் சென்று பொறுமையுடன் நடந்து கொள்ளுகிறார்கள். ஆனால் தருமத்துக்குப் பயந்து சமுதாயத் தொண்டும் செய்கிறார்கள். எந்தச் சாதியாராயினும், தலையில் விறகுச் சுமை எடுத்து வருபவர்கள் வரையில், அவர்கள் சமுதாயத் தொண்டர்கள்; அவர்களுக்கும் நம்மைப்போல் குடும்பங்கள் உண்டு, எல்லா உணர்ச்சிகளும் உண்டு என்பதை அவர்களைக் காணும்போது நாம் மனதில் மறவாமல் வைத்துக்கொண்டு, அவர்களிடம் வியாபாரம் செய்ய வேண்டும். தயிர்க்காரி தன் பானையில் கொண்டுவந்திருக்கும் தயிரை விற்றுத் தீர்த்தபின், தன் கிராமத்துக்குத் திரும்பிப் போய்த் தன் குழந்தைகளைக் கவனிக்க வேண்டியவள். அவ்வாறு அவள் தன் வீட்டுக்குள் நுழையும்போது சிரித்துக்கொண்டு சந்தோஷமாக நுழைய வேண்டும். அவள் அங்கே போனதும், அவளுடைய குழந்தைகளெல்லாம் அவளைச் சுற்றிக் கொள்ளும் அல்லவா? உலகம் கொடுமையானது

என்கிற உணர்ச்சியோடு அவள் தன் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தால், அந்தச் சாபம் நம்மை எரிக்கும். பண்பாடடைந்த குடும்பங்களில் பால், தயிர், காய்கறி, விறகு முதலிய பண்டங்களைத் தலையில் தூக்கி வந்து விற்பவர்களை அன்புடன் வரவேற்றுக் காலதாமதம் செய்யாமல் வேலை முடித்து அனுப்புவார்கள். சந்தர்ப்பம் நேரிட்டபோது, அவர்களுடைய சுக துக்கங்களையும் விசாரிப்பார்கள். பண்பாடு பெறாதவர்களுக்கு, அவர்களுடைய பெயர்கூடத் தெரியமாட்டாது. பால்காரன், தயிர்க்காரி, காய்கறிக்காரன் என்றுதான் பெயரில்லாமல் பேசுவார்கள்.

வண்டியில் பலருடன் பிரயாணம் செய்யும் போதும், குளக்கரை முதலிய பொது இடங்களிலும், சாத்தியமான அளவு ஒருவருக்கொருவர், முக்கியமாய்க் குழந்தைகள், பெண்கள், வயோதிகர் முதலியவர்களுக்கு இடம் கொடுத்துதவி, ஒருவரை ஒருவர் தடுத்து வீண் போட்டி போடாமல் நடந்துகொள்ள வேண்டும். இதுவும் பண்பாட்டுக்கு அடையாளம். பொது இடங்களில் பிறர் சவுகரியத்தைக் கவனியாமல் இருப்பது கீழோர் குணம். பலர் கூடும் இடங்களிலும் பிரயாணம் செய்யும்போதும், பண்பட்டவர்களின் நடவடிக்கையில் அடக்கமும் பொறுமையும் உதார குணமும் பார்க்கலாம். பண்படாத மனிதன் தன்னுடைய கவுரவம் எங்கேயாவது குறைந்து போகுமோ என்று பயந்து எப்போதும் கர்வமாகவே நடந்துகொள்வான். பண்பாட்டுக்கே சம்ஸ்கிருதத்தில் 'வினயம்' என்று பெயர். அடக்கம்தான் பண்பாட்டில் முக்கிய





ROJA MU[illegible]IAH

அம்சம். இந்த அடக்கம் கூழைக்கும்பிடாக இராது. அடக்கத்துடன் தைரியமும் அன்பும் கலந்திருக்கும். பயம் அடக்கமல்ல, பண்பாடுமல்ல. பரம்பரையாகப் பண்பாடு வாய்ந்த குடும்பங்களில் சரியான அடக்கத்தைப் பார்க்கலாம். அதில் பயம் காணமாட்டாது.

இப்படியே இன்னும் அனேகச் சின்ன விஷயங்களைப்பற்றிச் சொல்லிக்கொண்டே போகலாம். பண்பாடு என்பது ஒவ்வொரு விஷயத்திலும் வேலை செய்யும். ஆணுக்கும் பெண்ணுக்கும் முகத்தில் களை வீசச் செய்யும். அதுவே அழகும் ஆபரணமுமாகும்.

# 22

## வானொலி

*[சென்னையில் அகில இந்திய ரேடியோ ஸ்தாபனத்தை 16-6-38-ல் திறந்துவைத்தபோது செய்த பிரசங்கம்]*

தயவுசெய்து கேளுங்கள்

வெகு தூரத்திலிருந்து பேசுகிறேன். என்னவானாலும் யந்திரம் யந்திரம்தான். ஆகையால் குரலிலிருந்து பேசுகிறவன் யார் என்று சொல்லுவது உங்களுக்குக் கஷ்டம். நான்தான் "ராஜாஜி".

சென்னை வானொலி மண்டபத்திலிருந்து பேசுகிறேன்.

நான் பழைய தினுசு மனிதன். வைதீக மனப்பான்மை. புது நாகரிகங்கள் அவ்வளவாகப் பிடிக்காது. அநாகரிகங்களுக்குள் பழைய அநாகரிகங்களே

தேவலை என்று எண்ணுகிறவன். ஜனங்களுக்குப் பேசும் படங்களாலும் வானொலிப் பேச்சாலும் உபதேசங்கள் அவ்வளவாக ஏறாது என்பது என் எண்ணம். ஆயினும் எதுவும் ஓரளவு பயன்படும் என்பது ஒருபுறமிருந்து கொண்டிருக்கிறது. ஆகையால் இந்த ரேடியோவுக்கு என்னுடைய பூரண ஆசி தருகிறேன்.

*ரேடியோ என்பது என்ன ?*

இந்தச் சந்தர்ப்பத்தில் கொஞ்சம் பள்ளிக்கூட வாத்தியார் வேலை பார்க்கலாமென்று எண்ணுகிறேன். ஒருவன் பேசினால் பேச்சின் ஒலியானது சுற்றியுள்ள வாயு மண்டலத்தில் சின்னஞ் சிறு அலைகளை உண்டாக்குகிறது. அந்த அலை வீச்சுகள் பரவிக் கொண்டே போய்க் கேட்பவன் செவிக்குள் புகுந்து அங்கே உள்ள ஒரு சிறிய தம்பட்டத் தோலின்மேல் தாக்கி அதை அதிரச் செய்கிறது. பேச்சு நடக்க நடக்க அந்தச் செவித் தம்பட்டம் அதிர்ந்து அதிர்ந்து சமாசாரத்தை உள்ளே இருக்கும் நரம்புகளுக்குத் தருகிறது. அதுவே ஒலியுணர்ச்சி. பாடின பாட்டு வாயு மார்க்கமாக அலை அலையாய்ச் சென்று கேட்பவன் மூளையில் நுட்பமான வேலை செய்த பின்னரே, 'பேஷ்' என்று தலை அசைக்கிறோம். இதெல்லாம் வாயு வேகம் மனோ வேகமாக முடிந்து போகிறபடியால் சிரமம் ஒன்றும் தெரிகிறதில்லை. காது கெட்டுப்போய்ச் செவிடானபோதுதான் சொல்லுவதும் கேட்பதும் வெவ்வேறு என்பது புலனாகிறது. இயற்கை இரகசியங்களெல்லாம் இவ்விதமே. கெட்டால்தான் உண்மை தெரிகிறது. சரியாய்

அமைந்திருக்கும்போது யாரும் லட்சியம் செய்வதில்லை.

நான் சொன்னதிலிருந்து ஒலிக்கு வாகனம் காற்று என்று ஏற்படுகிறது. இந்த வாயு வாகனம் வெகு தூரம் செல்லாது; பெரிய கூட்டங்களில் வழக்கமாகப் பேசுகிறவர்களுக்குங்கூட ஒரு வரம்புக்கு மேல் தொண்டையின் வேகம் செல்லாது. ஒரு காலத்தில் நல்ல இரும்புத் தொண்டை படைத்தவர்களே ஜன நாயக வீரர்களாவது சாத்தியமா யிருந்தது. ஆனால் இப்போது ஒலிப் பெருக்கிகளைக்கொண்டு வெகு தூரம் கேட்குமாறு சிரமமில்லாமல் யாரேனும் பேசலாம். தொண்டை யில்லாதவர்களும் தலைவர்களாகி விடலாம். அதனுடன் வேறு யந்திரங்கள் சேர்த்து கொண்டு, பேசினால் ஆயிரம் மைல் தூரம் கேட்கும்படியும் பேசலாம். லண்டன் நகரத்தில் ஒரு ஹாஸ்யம் பேசினால் சென்னையில் கேட்டுச் சிரிக்கலாம். ஜெர்மனியில் பாடுவதை இங்கே கேட்டுச் சுத்த சங்கீதம் கண்டவர்கள் அனுபவிக்கலாம்.

மலையும் கடலும் இம்மாதிரி தாண்டிச் செல்ல வாயு வாகனம் போதாது. காற்றுக்குப் பதில் வேறு சவாரி வேண்டும். சர்வ வியாபகமாகி நிற்கும் 'ஆகாச' அணுக்களின் அதிர்ச்சிமூலம் ஒலியைச் செல்லச்செய்து, ஆயிரம் மைல் தூரத்திலுங்கூடப் பேசுவதையும் பாடுவதையும் கேட்கச் செய்யலாம். சில நாட்களுக்குமுன் 'ஆகாச' அணுக்களின் மேல் ஒலி யதிர்ச்சியை எவ்வாறு செலுத்துவது என்பதைக்

கண்டுபிடித்து விட்டார்கள். பிறகு இந்த ரேடியோ யந்திரம் ஏற்பட்டுவிட்டது. தேசங்களும், கண்டங்களும், ஆறும், மலேயும் கடலும் தாண்டிச் செல்லும் பாட்டுச் கச்சேரிகளும் பேச்சுக் கச்சேரிகளும் இப்போது உலகத்தில் நடைபெறுகின்றன.

சூரிய வெளிச்சம், மின் சக்தி, காந்தக் கவர்ச்சி இவையெல்லாம் ஆகாசக் கடலின் அலேகள். ஒலி மட்டும் இவ்வளவு காலம் வாயுவையே நம்பிப் பிழைத்தது. இப்போது அதுவுங்கூட 'ஆகாச' அலேகளின்மேல் சவாரிசெய்ய யந்திரம் செய்துவிட்டார்கள். இதுவே ரேடியோ, வானெலி அல்லது ஆகாசவாணி. இதன் விவரம் இன்னும் கொஞ்சம் உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன், கேட்டீர்களானல்.

ஒலியின் நிழல்

முதலில் மின்காந்த அலேகள் உண்டாக்கி அது கொண்ட ஒரு வெள்ளம் பரவச் செய்கிருர்கள். அது ஒரே அளவான அதிர்ச்சியைக் கொண்டு செல்லுகிறது. சூரியனிடமிருந்து கிரணங்கள் பாய்வதுபோல், ரேடியோ யந்திரத்தினின்று மின்னதிர்ச்சி பாய்கிறது. டில்லியிலிருந்தும் அதற்கப்பாலிருந்தும் இங்கு வந்து தாக்குகிறது. இதற்குக் கம்பி வேண்டியதில்லே. சூரியனிடமிருந்து வெயில் வந்து சேரக் கம்பியோ குழாயோ வேண்டுமா ? இல்லே ; அதைப்போலவே ரேடியோ அதிர்ச்சிக்குக் கம்பி வேண்டியதில்லே. ஆனல் சூரியனுடைய கிரணங்கள் இடைவிடாமல் வந்துகொண்டே யிருக்கின்றன.

இந்த மின் கிரணங்கள் யந்திரத்தில் உண்டாக்கின போதுதான் வருகின்றன. மற்றப்போது இல்லை. கண்ணுக்குப் புலப்படாது ; வெயில் காதுக்குப் புலப்படுமா ? மின் சக்தி கண்ணுக்கும் புலப்படாது, காதுக்கும் புலப்படாது ; ரிஸீவருக்குத்தான் புலப்படுகிறது. பாட்டுக் கேட்டு ஒருவன் சந்தோஷ பரவசமாகித் தலையசைத்து ஆடினால் அது கண்ணுக்கும் புலப்படும். சப்தம் கேட்டு ஒருவன் நடுங்கினால் அது கண்ணுக்கும் புலப்படும். அதைப்போல் மின் சக்தி யலைகளால் வேறு காரியம் நடைபெற்றால் அது நமக்குக் கண், செவி முதலியவற்றால் புலனாகும். நேராக அதுவே புலப்படாது. மின் கிரணங்களை உண்டாக்கி, அதே இடத்தில் ஒரு யந்திரத்தின் மூலமாக ஒலி யதிர்ச்சிகளை அந்த மின் அலைகளின்மேல் ஒழுங்காகத் தாக்கச் செய்தால், அந்த மின்னதிர்ச்சி அலைகளின் வடிவம் சத்தத்திற்குத் தக்கவாறு மாறுகிறது. பாடுகிறவனும் பேசுகிறவனும் உண்டாக்கும் ஒவ்வொரு ஸ்வரத்தின் வேகமும் அந்த மின் வெள்ளத்தின்மேல் தன் வடிவத்தை முத்திரை போட்டு விடுகிறது—கிராமபோன் தட்டில் சப்தக் கோட்டு வரிகள் பதியச் செய்கிற மாதிரி. ஒலி யதிர்ச்சியின் வேகத்தால் அடைந்த உருமாற்றத்துடன் மின் வெள்ளம் வந்து சேருகிறது. சேருமிடத்தில் ஒரு நுட்பமான யந்திரத்திலுள்ள சன்னத் தகட்டை அது அதிரச் செய்கிறது. அது அதிர அதிர, எந்த ஒலியால் மின் கிரணங்கள் தீண்டப்பட்டனவோ, அந்த ஒலி மறுபடி உண்டாகிறது. கிராமபோன் தட்டிலிருந்து பாட்டு உண்டாவதுபோல், காரண காரிய அவினாச விதி இதுவே. உண்டான ஒலியை

ஒலிப் பெருக்கியால் பெருக்கி, அனைவரும் உட்கார்ந்து கேட்கச் செய்கிறோம்.

இந்த முறையை விளக்க இன்னொரு திருஷ்டாந்தம். சூரியன் வெளிச்சம் தருகிறான். வெயில் என்றால் என்ன? சூரியனிடமிருந்து ஆகாச அணுவதிர்ச்சிகள் கிளம்புகின்றன. அந்த அலை வெள்ளம் நம்மைத் தாக்குகிறது. இந்தத் தாக்கின் வேகத்தை நம்முடைய புலன்கள் மூலமாய் வெளிச்சமாகவும் வெப்பமாகவும் உணர்கிறோம். பத்துக் கோடி மைலுக்கப்பாலிருக்கும் சூரிய மண்டலத்திலுண்டான அதிர்ச்சி யலைகளை ஆகாச அணுக்கள் கொண்டு வந்து சேர்ப்பிக்கின்றன. இதற்கு மத்தியில் குறுக்கே ஒரு மரம் நின்றால், அதன் கிளைகளும் இலைகளும் தம் உருவத்தை அந்தக் கிரணங்களின்மேல் பதியச் செய்கின்றன. இதுவே வெயில் படுமிடத்தில் நிழலாகிறது. கிளையும் இலையும், நிற்பதும் ஆடுவதும், நிழலில் காண்கிறோம். இவ்வாறே மின் - காந்தக் கிரணங்களைத் தடுத்த பாட்டும் பேச்சும், கிரணங்கள் தாக்குமிடத்தில் நிழல்களைப்போல் மறுபடியும் உண்டாகின்றன. நிழல், கண்ணுக்குப் புலப்படும் படம்; ரேடியோ, காதுக்குப் புலப்படும் படமாகும். நான் இப்போது ஒரு இடத்திலிருந்து பேசுகிறேன். நீங்கள் கேட்பது என் பேச்சின் நிழல்.

**வேண்டாமப்பா, கட்டை வண்டியே போதும்!**

எல்லாம் மிகவும் அற்புதம். வெகு தூரத்தில் போடும் சப்தம் இங்கே வந்து சேருவதும், யந்திரத்

தால் ஆகாசத்தை மடக்கி ஆளுவதும், எல்லாம் பெரிய வெற்றியே. ஆனால் பயன் என்ன? போடும் சப்தம், கேட்கும் பேச்சு, பாடும் பாட்டு இவை நல்லவை யானல் பயன் உண்டு. கழுதைகள் எங்கிருந்து கத்தினாலும் ஒன்றே. கிராமத்தில் மேயும் கழுதை யானலென்ன, சீமையில் கத்தும் கழுதையானலென்ன? கட்டை வண்டிக்குப் பதில் ரயிலும் மோட்டாரும் வந்து, திருடர்களையும் மோசக்காரர்களையும் ஊரில் வேகமாய்க் கொண்டுவந்து தள்ளுவதா யிருந்தால், 'வேண்டாமப்பா, கட்டைவண்டியே போதும்' என் போம். வெகு தூரத்தில் பேசும் பேச்சு நமக்கு நன் மையும் சுகமும் நல்லறிவும் தருவனவாக இருந் தால், ஆகாசவாணி பயன் தரும். இந்தச் சென்னை ரேடியோ யோக்கியர்களையும் அறிவாளிகளையும் நல்ல பாடகர்களையும் கண்டு அவர்களின் உதவி பெற்று நன்மை தரும் பேச்சும், சாந்தம் தரும் பாட்டும் சம்பாதித்துத் தரவேண்டும்.

*விலையற்ற ரேடியோ ஒன்றுண்டு*

இன்னொரு விஷயம். நல்ல புத்திமதிகளைப் பேசச் செய்து ஒலிப்பெருக்கியைக்கொண்டு கம்பீரத் தொனி யுடன் ஊரார் காதுக்குத் தரலாம். ஆனால் அதைக் கேட்போர் ஒப்புக்கொண்டு நடந்தால்தான் பயன். ரேடியோ யந்திரத்தைப் போலவே மனிதன் மூளையும். கேட்கும் ஒலிக்குத் தகுந்தவாறு உள்ளம் அதிர்ச்சி கொள்ள வேண்டும். உணர்ச்சியும் அதிர்ச்சியுமற்று நின்றேமானல் எவ்வளவு வானொலிகள் கத்தினாலும்

யாதொரு பயனும் உண்டாகாது. ஒலியதிர்ச்சி குண அதிர்ச்சியாக மாறவேண்டுமானால் உள்ளம் என்ற யந்திரம், அழுக்கும் பழுதுமில்லாமலிருக்க வேண்டும். இந்த யந்திரமே பெரிய - சிறந்த - விலையற்ற ரேடியோ.

மோனப் பரம் பொருள்

குடிக்காதே, கெட்டுப் போகாதே, சம்பாதித்த கூலியை நாசமாக்காதே, பெண்டாட்டியைத்திட்டாதே, அடிக்காதே என்று ரேடியோ தினமும் சொல்லும். பெண்டுகளுக்கும் புத்தி சொல்லும். வீட்டுக்கு வரும் புருஷனைச் சந்தோஷச் சிரிப்புடன் எதிர்கொள், வீட்டை அன்புக்கு ஒரு கோயிலாக வைத்துக்கொள், புருஷனிடம் பொறுமையும் அமைதியும் காட்டி அவனை நேசிக்க வேண்டும், குழந்தைகளை அடிக்கக்கூடாது என்று சொல்லும். குழந்தைகளுக்குங்கூட ரேடியோ சொல்லும்: பெரியோர்களின் சொல்படி நடக்க வேண்டும், சிரித்து விளையாட வேண்டும், படிக்க வேண்டும், குளிக்க வேண்டும் என்றெல்லாம் சொல்லும். எல்லாருக்கும் நல்ல புத்திமதிகள் ரேடியோவிலிருந்து கிளம்பும். படிக்கத் தெரியாதவர்களுக்கும் வெளிப்படுத்தும். நல்ல பஜனைகள் நடத்தும், புராணக் கதைகள் சொல்லும். சோம்பித் திரியாதீர்கள், சூதாட்டம் வேண்டாம், கஞ்சா அபினி மகா விஷமாகும், அதை உபயோகித்தால் உடல் நாசமாகிவிடும் என்றெல்லாம் ஆத்திசூடிபோல் சொல்லும். உடம்பும், வீடும், ஊரும் சுத்த

மாக வைத்துக்கொள்ளுங்கள் என்று கொன்றைவேந்தன் போலும் சொல்லும். ஊர் எக்கேடு கெட்டால் என்னவென்று இராதீர்கள் என்று அடிக்கடி வற்புறுத்தும். ஆனால் இது வெறும் யந்திர ஒலியாக முடியாமல் உள்ளமும் வீடும் ஊரும் பயனடைய வேண்டும். அப்போதுதான் நம்முடைய ரேடியோ உண்மையான அசரீரி வாக்காகும். ஆகாசம்தான் இந்த சப்தத்தைக் கொண்டுவந்து தருகிறது. ஆகாசம் என்பது எங்கும் பரவி நிற்கும் மோனப் பரம்பொருள். அலைகள் புரண்டு தீர்ந்ததும், மறுபடி அறிதுயில் கொள்ளும். நாமும் அவ்வாறே கம்பீரமும் சாந்தமும் கொண்டு என்ன கஷ்டம் வந்தாலும் கலக்கம் தீர்ந்து நிற்போமாக.

சென்னைக்கு ரேடியோ புதிதல்ல. கார்ப்பொரேஷனார் பல நாட்களாக ரேடியோ நடத்தி வந்தது உங்களுக்குத் தெரியும். ஆனால் அந்த ரேடியோ சென்னையில் பாடும் பாட்டுக்களை மட்டும் வழங்கிவந்தது. இந்தப் புது ஸ்தாபனத்திலிருந்து பல மகாணங்களிலிருந்தும் பல தேசங்களிலிருந்தும் பேச்சும் பாட்டும் இனிமேல் வழங்கப்பெறும். சென்னை மட்டுமல்ல, பல கிராமங்களிலும் இந்தப் பேச்சும் பாட்டும் கேட்கும்.

கனவு காண்கிறேன்

இந்த ரேடியோ அமைப்பை நாம் நல்ல வழியில் உபயோகித்துக் கொண்டால் பெரும் பயன்கள்

அடையலாம். கிராமத்தில் வசிக்கும் பணக்காரர்கள் ஒலி பிடிக்கும் பெட்டிகள் வாங்கி வைத்துக் கொள்ள லாம். பாட்டையும் பேச்சையும் வேடிக்கையையும் ஊரார் எல்லாரும் அனுபவிக்குமாறு நல்ல தருமம் செய்யலாம். இம்மாதிரி, ஒவ்வொரு ஊரிலும் கள்ளுக் கடைக்குப் பதில் சங்கீதமும், புராணமும், பஜனையும், ஆகாசவாணி மூலம் நடத்தலாம்.

பெரிய கனவு காண்கிறேன்.

23

## சிறுகதை

நீண்ட கதை எழுதுவதற்கு வேண்டிய பொறுமையும் அவகாசமுமில்லாமல் சுருக்கமாக எழுதப்பட்ட கதை சிறுகதை ஆகும் என்று யாராவது எண்ணினால் அது தவறாகும். சிறுகதை வேறு, பெருங்கதை வேறு. அளவு வித்தியாசம் மட்டும் அல்ல ; வகையே வேறு. ஆலமரம், புளியமரம் முதலிய மரங்கள் ஒரு ஜாதி. கிளைகளின்றி ஒரே தண்டாக வளரும் தென்னை, பனை, கமுகு முதலிய மரங்கள் வேறு ஜாதி. அதைப் போல் சிறுகதை வேறு, நெடுங்கதை வேறு.

சிறுகதை நெடுங்கதையைப்போல் ஒரு நீடித்த காலப் போக்கையோ அல்லது ஒரு கதாநாயகனுடைய வாழ்க்கை முழுவதையுமோ சித்திரிக்காது. தனிப்பட்ட ஒரு சந்தர்ப்பத்தை மட்டிலும் எடுத்துக்கொண்டு சித்திரிப்பது சிறுகதை. எடுத்துக்கொண்ட சந்தர்ப்பத்தை யொட்டிய விஷயங்களைத் தவிர மற்றவையெல்லாம் குறிப்பாகத்தான் காட்டப்படும். விஸ்தார விவரங்களுடன் காணப்படுவது ஒரு சந்தர்ப்பமே. முந்தி நடந்

தையும் பிந்தி நடந்ததையும் விட்டுவிட்டு மிஞ்சியதி லும் பெரும் பாகத்தைச் சுருக்கிவிட்டு ஒரு துக் கடாவை மட்டும் எடுத்துக்கொண்டு சிறுகதை யாசிரியன் சித்திரத்தோற்றம் உண்டாக்குவான்.

சிறுகதையில் நிகழ்ச்சிச் செறிவு அதிகமாகக் காணப்படமாட்டாது. சம்பவங்கள், குறைந்த எண் ணிக்கையாய்த்தா னிருக்கும். ஆனால் கதைக்கட்டு சாமர்த்தியமாகப் பதிந்திருக்கும். பாத்திரங்கள் பளிச் சென்று தூக்கிக் காட்டும் குண விசேஷங்களுடன் இருக்கும்.

சிறுகதையில் பிரதான பாத்திரங்கள் என்றும் பிரதானமல்லாத பாத்திரங்கள் என்றும் இருவகை யாக இருக்காது. எல்லாருமே முக்கியமாக இருக்க வேண்டும். எல்லாருடைய லட்சணங்களும் தூக்கிக் காட்டி நிற்கவேண்டும். கதையும் இரண்டு மூன்று கிளைகளாக வளர்ந்து அங்கங்கே பிணைவதும் பிரிவதும் நெடுங்கதையில் இருப்பதுபோல் சிறுகதைக்குப் பொருந்தாது.

சிறுகதையில் நிகழ்ச்சி யமைப்பு பல்வேறு இடங் களிலும் பலவேறு காலங்களிலும் பரவிச்செல்லாமல் அனேகமாக நின்ற இடத்தில் நின்று முடியும். கதைப் போக்கும் விசையோடு செல்லும். பல விஷயங்கள் கதையில் அமைந்து நின்றாலும் கிளைப் பொருள்கள் சுருக்கமாகவும் சூசனை முறையிலும்தான் காணப் படும். நிகழ்ச்சியின் நடுப்பகுதியானது சிறுகதையில் சிறியதாகவே இருக்கும்.

## சிறு கதை

சிறுகதையின் உயிர் அதில் விளங்கும் கருத்து. பல கருத்துக்கள் காடுபட்டுக் கிடக்காது. நெடுங்கதையில் அனேக கருத்துக்கள் தாண்டவமாடலாம். சிறு கதையில் திட்டமான ஒரு மனோவேகம் அல்லது கருத்தே இடம் பெற்றிருக்கும். மொத்தத்தில் சிறு கதை, நாடகத்தை யடுத்த கலைவகை என்று சொல்லலாம். சிறுகதையானது வாமனவதாரத்தைப் போன்ற கலையுருவம். மனதைக் கவரும் அழகும் அவயவ அந்தமும் பெற்றிருக்கும். குறளுருவமானாலும் எதையும் மூன்றடிகளில் தாவி அளக்கும் தன்மையைப் பெற்றிருக்கவேண்டும்.

சிறுகதை எழுதுவது எப்படி? வாழ்க்கையில் நாம் எத்தனையோ நிகழ்ச்சிகளைப் பார்க்கிறோம். எத்தனையோ சந்தர்ப்பங்களில் புதிய புதிய அனுபவங்களைப் பெறுகிறோம். மனதை ஆட்டிக் குலுக்கும் சில நிகழ்ச்சிகளைப் பார்க்கிறோம். அவற்றில் ஒன்றை உட்கொள்ள வேண்டும். உண்ட உணவானது செரித்து எவ்வாறு தசையும் ரத்தமும் நரம்புமாகிறதோ, அவ்வாறு அந்த நிகழ்ச்சியை நம்முடைய உணர்ச்சியில் உருவு கொள்ளச் செய்யவேண்டும். அது பிறகு சிறு கதை இலக்கணத்துடன் வெளியாக வேண்டும். இதற்குக் கற்பனாசக்தி வேண்டும். கற்பனாசக்தி ஒரு பிறவிச் செல்வமா அல்லது பயிற்சிப் பொருளா என்கிற கேள்வி உண்டு. எவ்வாறாயினும் எல்லாரும் ஓரளவு கற்பனாசக்தி படைத்திருக்கிறோம். அதற்குப் பயிற்சி தந்தால் வளரும். தராமற்போனால் அழிந்துபோகும்.

நன்ருகக் கண்ணையும் காதையும் செலுத்தி உலகத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளையும் வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்களையும் கவனித்து வரவேண்டும். இதுவே கற்பனு சக்திக்குத் தரவேண்டிய உரம். கண்ணும் காதும் திறந்திருந்தால்மட்டும் போதாது. உணர்ச்சி பாய்ந்த முழுக் கவனம் செலுத்தவேண்டும்; அன்பு வேண்டும்; இரக்கம் வேண்டும். புஸ்தகங்கள் படிப்பது போதாது என்று சொல்ல வேண்டியதில்லை.

சிறு கதையில் ஏதேனும் ஒரு கருத்து அல்லது மனேவேகம் பாய்ந்து ஓடாமல் வெறும் கதைக்கட்டு மட்டும் சாமர்த்தியமாக அமைந்து விட்டால் போதாது. கருத்து என்ருல் பிரசாரமல்ல, ஆத்திசூடியல்ல. அழகு, பெருந்தன்மை, அன்பு, இரக்கம், ஆனந்தம், வெறுப்பு, வருத்தம், கோபம், தாபம், ஆசை, கவலை முதலியவற்றுள் ஏதேனும் ஒரு வேகமோ வாழ்க்கைத் தத்துவமோ கதையில் பாய்ந்து வேலை செய்யவேண்டும். இதுவன்றி வெறும் நிகழ்ச்சிகள் - ஒன்றன்பின் ஒன்ருக நடைபெறும் நிகழ்ச்சி நிரவல்-ஜீவன் கொண்ட கதையாகாது. பல கருத்துக்கள் இங்குமங்கும் சிதறிக் கிடக்காமல் கதைக்கட்டுடன் கருத்துக்கட்டும், சிதைவின்றி அழகுடன் அமைந்து விளங்கவேண்டும். வியப்புத் தரும் நிகழ்ச்சியமைப்பு இல்லாமலும், முதல் தரமான சிறு கதைகள் உண்டு. வியப்புச் சம்பவங்களில் கவர்ச்சி சக்தி உண்டு. ஆனல் அதற்கும் ஒரு வரம்பு இருக்கிறது.

வாழ்க்கை முறைக்கும் அனுபவத்திற்கும் விரோத மாக நிகழ்ச்சிகள் வெகு தூரம் சென்றால், படிப்பவர்க ளுடைய மனம் கதையில் பிடிபடாது.

கதையின் கவர்ச்சி வேகம் வரவரப் பெருகிக் கொண்டு போகவேண்டும். தாழ்ச்சி கூடாது. இது சிறு கதைக்கு இன்றியமையாத இலக்கணம். ஆரம் பத்தில் நன்றாக அமைந்து, பிறகு காரசார மில்லா மலோ, அசம்பாவித முறையிலோ, அல்லது அந்தம் குறைந்தோ முடிவதை அனேக சிறு கதைகளில் பார்க் கிறோம். கவர்ச்சி வேகம் பெருகிக்கொண்டே போக வேண்டும். க்ஷீணகதி கூடாது என்பது வெகு முக்கிய அம்சம்.

திடீர் திடீர் என்று எதிர்பாராத வண்ணமாக நிகழ்ச்சிகள் தோன்றவேண்டும் என்பது தேவை யில்லை. நன்றாக ஓடும் வண்டியின் வேகத்தைப்போல் தூக்கிவாரிப் போடாமலேயே கவர்ச்சி வேகம் விருத்தி யடைந்துகொண்டு போகலாம். சிறு கதையில் அதி கச் சிக்கலான கதைக்கட்டு வேண்டியதில்லை. கூடாது என்றே சொல்லலாம். கதை எவ்வளவுக்கெவ் வளவு சரளமாகப் போகிறதோ அவ்வளவுக்கவ்வளவு அது உண்மைத் தோற்றம் பெற்று வாழ்க்கைச் சித்திரமாக விளங்கும்.

கதையில் உள்ள சம்பாஷணையானது, சம்பாஷணை யாகவே இருக்கவேண்டும். சின்னக் கட்டுரைக ளாகவோ, பிரசங்கங்களாகவோ இருக்கக்கூடாது.

சந்தர்ப்பத்தை ஒட்டியும், பாத்திரத்தை ஒட்டியும பேச்சு' இருக்கவேண்டும். ஒரு உணர்ச்சிக் கொதிப்பில் எவ்வாறு பேச்சு வருமோ அதுதான் சிறு கதையில் அமையக்கூடிய சம்பாஷணை. நீண்ட சம்பாஷணையில் ஒரு பாகத்தை மட்டும் எடுத்துக்கொண்டு மற்றதைக் குறிப்பாக ஆசிரியன் பேச்சாகவே சொல்லி விடுவது சிறுகதை முறை.

பேச்சு, பேச்சாகவே இருக்கவேண்டும். உண்மை என்றால் சுருக்கெழுத்து ரிபோர்ட்டு அல்ல. எழுத்து வேறு, பேச்சு வேறு. பேசும்போது கேட்கமுடியும். அதையே எழுத்தில் பதிவு செய்தால் படிக்கமுடியாது. கொச்சையும், ஆபாசமொழிகளும் ஓரளவு கலந்து பேச்சுக்கு உயிர் தருவது உண்டு. ஆனால், இது அளவுக்கு மிஞ்சிப் போகாமல் பார்த்துக்கொள்ளவேண்டும் என்பது என் அபிப்பிராயம்.

வாழ்க்கையில் உள்ளதை உள்ளபடி சித்திரிப்பது தான் இலக்கிய முறை. ஆனாலும் வாழ்க்கையில் மேன்மையும் உண்டு, சிறுமையும் உண்டு. அழகும் உண்டு, அவலட்சணமும் உண்டு. பயன்படுவதும் உண்டு, பயனற்றதுமுண்டு. பொறுக்கி எடுத்துக் கொள்ளுவதில்தான் எழுத்தாளர்களின் கலைத்திறமை நிற்கிறது. கலையில் உண்மை இருக்கவேண்டும். உண்மையின்றிக் கலையில்லை. ஆனால் உண்மையெல்லாம் கலையாகிவிடாது. நிகழ்ச்சிகளையும் சம்பாஷணைகளையும் பதிவு செய்துவிட்டால் இலக்கியமாகி விடாது. எது கலைக்கு உதவும் என்பதைக் கண்டு

அதைத் தனிப்படுத்தி இலக்கிய உருவத்தைத் தந்தால், அது கலையாகும்.

இதுவரையில் எழுத்தில் பதிவு பெறாத குடும்ப விஷயங்களை அச்செழுத்தில் பதிவு செய்தாலே படிப் போருக்கு வேடிக்கையாக இருக்கும். பலவேறு பழக்க வழக்கங்களும் ஜாதி பேதங்களும் மலிந்து கிடக்கும் நாட்டில் எதுவும் வேடிக்கையாக இருக்கும். சில காலத்திற்கு இவை இலக்கியத்தோற்றம் காட்டும். பிறகு இவை பயனற்ற பேச்சாய்ப்போகும். கருத்தும் அழகும் பொருந்தி நின்றால்தான் உண்மையான இலக்கியமாகும்.

நல்ல கதை என்பதற்கு அடையாளம் அதில் யாரேனும் மனதைச் செலுத்திப் படித்தால் உள்ளத் தில் ஒரு அதிர்ச்சி உண்டாகும். இதயத்தைக் கலக் கவோ ஆட்டவோ செய்யும். இது உண்மையே யாயி னும், கலை ஞானமும் பயிற்சியும் அடையாமல் கண் ணீர்ப் பெருக்கு உண்டாக்கவே எத்தனித்தால், நல்ல கதை உண்டாகாது. நிகழ்ச்சிகள் முதிர்ந்து உருப் பெறாமல் உணர்ச்சி வேகத்தை உண்டாக்க முயன்றால், எழுத்தாளர் தோல்வி அடைவார்; அது புகைபோட் டுக் காயைப் பழுக்கவைப்பது போலாகும். எளிதில் ஒழுகும் கண்ணீர் கலைக்கு உதவாது. கலையில் காண வேண்டிய உணர்ச்சி, கம்பீரம், இயற்கை, உண்மை, மனித வாழ்க்கைக்குப் பயன்படும் தன்மை இவை இருக்கவேண்டும். எவ்விதத்திலாவது தனிப் பண்பு

பெற்றதாகவும் இருக்க வேண்டும். பண்பில்லாத பொருளுக்கு இலக்கியத்தில் இடமில்லை.

ஒரு சித்திரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தால், அல்லது ஒரு கதையைப் படித்துக்கொண்டிருந்தால், வேறு யாராவது கண்டால் சிரிப்பார்கள் என்று வெட்கப்பட்டு மறைத்துக்கொள்ளவும் பார்க்கிறோம். நல்ல பொருளுக்கும், பயனற்றதற்கும் உள்ள பேதம் இதுவே. தனிப்பண்பும், கம்பீரமும், பயன்படும் தன்மையும் இல்லாத பொருளைக்கொண்டு இன்பம் பெறுவதைப்பற்றி வெட்கப்படுகிறோம். இது நியாயமே.

காதல் கதைகள் எத்தகையனவாயினும், வளரும் வயதிலுள்ள வாலிபர்கள் மனதைப் பற்றும். இந்தக் கதைகளைத்தான் விரும்புகிறார்கள், வாங்கிப் படிக்கிறார்கள் என்று அதற்காக எழுத்தைக் கெடுத்துக் கொண்டே போனால், இலக்கியம் சரியான முறையில் வளர்ச்சி யடையாது. கம்பீரமும் அழகு பொருந்திய காதல் கதைகள் எழுதவேண்டும். ஆனால், வெறும் காம விகாரங்களெல்லாம் நூலுக்குப் பொருளாக மாட்டா. தமிழ் எழுத்தில் பதிவு பெறவேண்டிய விஷயங்கள் பெருந்தன்மைபெற்ற விஷயங்களாக இருக்க வேண்டும்.

பெருந்தன்மை பொருந்திய காதல் கதைகள் தோன்ற வேண்டியதே. ஆனால் காதலின்றிக் கதையில்லை என்று எண்ணக்கூடாது. மனிதனுடைய சரீர

தருமத்தில் வேண்டிய அளவுக்கு மேலேயே அமைந்திருக்கிற ஒரு வேகத்தை, இலக்கியத்தைக்கொண்டு பெருக்க வேண்டிய அவசியமே இல்லை. உலகத்திற்கு வேண்டியனவும், மலிந்து கிடக்காதனவுமான பண்புகள் பல இருக்கின்றன. அவற்றைக் கண்டெடுத்து இலக்கியத்தில் புகுத்தி மக்களிடையே பரப்ப வேண்டும். ஈரம், இரக்கம், தியாகம், அன்பு, தைரியம் முதலிய பண்புகள் உலகத்திற்கு வேண்டிய அளவில் காணவில்லை. அவற்றை வளர்க்க இலக்கியம் வேண்டும். வேண்டியதற்கு நூறு மடங்கு அதிகமாகக் காமவேகம் பிறவியுடன் பெற்றிருக்கிறோம். அதற்கு இலக்கிய விவசாயம் வேறு வேண்டியதில்லை.

முறை தவறிய காதலை எடுத்துக்கொண்டு சித்திரிப்பது எளிது. கதையும் கவர்ச்சியாக அமையும். ஆனால் அது மக்களுக்குப் பயன்படாது. காரண காரியவிதி வாழ்க்கையில் எவ்வாறு வேலை செய்கிறது என்பதை விளக்குவதற்காக நெறிதவறிய காதலைப் பற்றிக் கதைகள் எழுதப் பெறலாம். ஆனால், விஷம் கலந்த மருந்துகளைப்போல், அது மிக்க ஜாக்கிரதையாகவே கையாளப்பட வேண்டும்.

இப்போது சில சிறு கதைகளைப் பார்த்தால், நண்பர்கள் தங்கள் மனைவிமார்களைக் கோஷாவில்தான் வைத்துக் காப்பாற்ற வேண்டும்போல் இருக்கிறது. ஆணும் பெண்ணும் சேர்ந்து பேசுவதே அபாயம் என்று இப்போது வெளியாகிவரும் கதைகளினால் ஏற்படும்போ லிருக்கிறது. கதையில், ஒருத்தியை ஒருவன்

சந்தித்ததுமே தருமத்திற்கு அபாயம் நேரிட்டு விடுகிறது. இத்தகைய இலக்கியத்தை உண்டாக்குவது எளிது; விற்பதும் எளிது. கள்ளிப் பலகையில் தச்சுவேலை செய்வது எளிது. ஆனால் அப்படிச் செய்த சாமானில் உறுதியில்லை; பயனும் இல்லை. வழி புரண்ட காதலைக்கொண்டு அவசரமாகத் தோற்றுவிக்கும் சிறுகதைகளும் இவ்வாறே பயனற்றவை என்பதோடு நிற்பதில்லை. இலக்கியம் என்று ஏமாற்றிச் சமூகத்திற்கு விஷம் ஊட்டுவது போலாகும்.

சிறுகதையின் லட்சணங்களைப்பற்றி எழுத ஆரம்பித்ததில் எங்கேயோ போய் முடிந்தது. ஆராய்ச்சியும் விமர்சனமும் செய்வது எளிது. கலைப்பொருள் ஒன்றை உண்டாக்குவது அரிது. எல்லா இலக்கண விதிகளையும் புறக்கணித்து அற்புதமான இலக்கியப் பொருள் தோன்றுவதுமுண்டு. வரப்பிரசாதத்தில் தோன்றிய இலக்கியம் அல்லது வேறு கலைப் பொருளை விமரிசனக்காரர்கள் அடக்கியாள முடியாது.

நல்ல சிறு கதைக்கு அடையாளம் ஒன்றே: அதைப் படித்து முடிக்கும்போது நல்லவர்களுடைய மனதில் மகிழ்ச்சி தோன்றி உள்ளம் பூரிக்கும்.

# நூன்முகம்

சத்திய நெறியில் நின்று அச்சம் என்பது சிறிதும் இல்லாமல் அதர்மத்தைக் கண்டவிடத்து அதனுடன் போர் புரிந்து நிற்கிறவனே சத்தியாக்கிரகி அத்தகைய சத்தியாக்கிரகியின் போர் எப்பேர்ப்பட்டது? பிறருடைய அசத்தியம், அதர்மம், ஹிம்சை இவைகளை உண்மையில் வெல்ல வேண்டுமானால், தானும் அசத்தியம், அதர்மம், ஹிம்சை இவைகளை எவ்விதத்திலும் செய்யாமல் இருப்பதுதான். பிறரிடத்துள்ள சினம், பகை, தீமை இவைகளைப் போக்குவதற்கு வழி, தான் அவைகளுக்கு மாறான பொறுமை, அன்பு, நன்மை இவைகளைச் செய்வதேயாகும். பழிக்குப் பழி வாங்கும் உலகப்போக்கை யொழித்து,

> இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
> நன்னயஞ் செய்து விடல்

என்ற திருக்குறள் வாக்கியத்தின் வழி நிற்றலுமாம். அநீதி செய்வாருடைய வலிமையைக் கண்டு அஞ்சாமல் உடல், பொருள், ஆவி அனைத்தையும் அவருடைய அநீதிக்கு இரையாக்கி மற்றவர்களைக் காத்தலுமாம்.

இந்நெறியில் வாழ்பவனுக்குச் சத்தியாக்கிரகி என்னும் புதிய பெயரைக் காந்தி மகாத்மா இட்டாராலும், இது புதிய கோட்பாடன்று; பழைய தர்மமே. சநாதனமான ஆரிய தர்மமும், கௌதம சாக்கிய முனிவரான புத்தர் உலகத்திற்கு உபதேசித்ததும், ஏசுநாதர் மீண்டும் உலகத்திற்கு எடுத்துக் காட்டியதும் இந்தத் தர்மமேயாகும்.

உலகத்திற் சிறந்தோங்கி விளங்கின சத்தியாக்கிரகிகள் நால்வர்: அவர்கள் புத்தர், ஸோக்ரதர், ஏசுநாதர், காந்தியடிகள் என்பவர். இவர்களில் ஸோக்ரதர், பாரத தேசத்தில் அவதரித்தவர் அல்ல, தமிழர்களுக்கு சாதாரணமாய்த் தெரிந்தவரும் அல்ல. இந்த மகானது வெகு அற்புதமான மரண வரலாற்றை ஒருவாறு தமிழ் மக்கள் படித்துணரும் பொருட்டு இச்சிறு புத்தகத்தை, வேலூர் சிறைச்சாலையில் என்னை ஆங்கில அரசாங்கத்தார் தனி அறையில் அடைத்து வைத்திருந்த காலத்தில் பொழுதுபோக்காக எழுதினேன். நூலிலுள்ள பிழைகளைப் பொருட்படுத்தாமல் மகானது சரித்திரத்தில் அறியக் கிடக்கும் தத்துவங்களை உட்கொள்ளுமாறு நேயர்களை வேண்டுகிறேன்.

# ஸோக்ரதர்

## தோற்றுவாய்

கிரேக்க மகரிஷியாகிய ஸோக்ரதர், தர்மத்திற்காகப் பிராணனை அர்ப்பணஞ் செய்த மகாத்மாக்களில் ஒருவர். அவர் பரமபதமடைந்த சரித்திரத்தைத் தமிழ் நாட்டு ஸ்திரீ புருஷர்களும் குழந்தைகளும் அறிய வேண்டியது அவசியம். அவர் சுமார் இரண்டாயிரத்து நானூறு வருஷங்களுக்கு முன் கிரேக்க தேசத்தில் ஆதன்ஸ் நகரத்தில் அவதரித்தவர். அவர் தகப்பனார் ஒரு சில்பித் தொழிலாளர்; தாயார் ஒரு மருத்துவச்சி. ஸோக்ரதர் தம் உடல் பொருள் ஆவி அனைத்தையும் மெய்யறிவுக்காகத் தத்தம் செய்தவர்; தம்முடைய கிரக கிருத்தியத்தையும் கவனியாமல் உண்மையான துறவு பூண்டவர். *ஜனங்களுடன்

---

*மாத்தானவத்தையும் மாயா புரியின் மயக்கத்தையும் [டு
நீத்தார் தமக்கொரு நிட்டையுண் டோநித்தனன்புகொண்
வேர்த்தாற் குளித்துப் பசித்தாற் புசித்து விழிதுயின்று
பார்த்தா லுலகத் தவர்போ லிருப்பர்பற் றற்றவரே.

என்று பட்டினத்துப் பிள்ளையார் பாடியபடி, உண்மையான துறவுக்கு 'மழித்தலும் நீட்டலும் வேண்டா.'

சம்பாஷணை செய்து அதன் வாயிலாய் அவர்களுக்குத் தர்மோபதேசம் செய்வதிலேயே தம் வாழ்நாளைக் கழித்தார்.

ஸோக்ரதர் காலத்தில் ஆதன்ஸ் நகரமானது மகா உன்னத கீர்த்தியைப் பெற்றுத் தனி அரசாட்சி யடைந்த இராஜாங்கமாகவிருந்தது. காளிதாச பவ பூதிக்குச் சமானமான கவிஞர்களும் நாடகாசிரியர் களும் கீர்த்தி பெற்ற இதிகாச பௌராணிகர்களும் சில்பிகளும் இராஜதந்திர நிபுணர்களும் ஆதன்ஸ் நக ரில் நிரம்பியிருந்தார்கள். உஜ்ஜினியைப் போலவும் பாடலிபுத்திரம்போலவும் மேல் நாட்டில் சிறப்புற் றிருந்தது அந்த நகர்.

ஆதன்ஸ் அரசாட்சி குடியாட்சி. நகரத்திலுள்ள பிரஜைகளனைவரும் கூடிய மகாநாடே சர்வ அதிகா ரத்தையும் வகித்துவந்தது. மகாநாடு கூடுங்காலத்தில் ஒவ்வொருவரும் தவறாமல் பிரசன்னமாயிருக்க வேண்டு மென்பது விதி. பிரஜைகள் தங்களுக்காகப் பிரதிநிதி களை மகாநாட்டுக்கு அனுப்புவது கிடையாது. நேராக அவர்களே கூடி இராச்சிய விவகாரங்களை நடத்தி வந்தார்கள். நியாய விசாரணை முறையிலும் இதே மாதிரி எல்லோரும் அதிகாரம் வகித்து வந்தனர். விவகாரங்களை விசாரித்துத் தீர்ப்புச் சொல்ல நீதிபதி களைச் சீட்டுப் போட்டு ஜனங்கள் நியமிப்பார்கள். அந்த நீதிபதிகள் நியாயஸ்தலத்தில் அமர்ந்து தங் கள் கடமைகளைச் செய்வார்கள். நகரத்தார் ஒவ்

வொருவருமே இவ்விதம் நியாயஸ்தலத்தில் அமர அருகராயிருந்தார்.

போடீயோ முற்றுகையில் தமது தாய்நாட்டின் ஆதீனத்தைக் காப்பதற்காக ஆதன்ஸிலிருந்து சென்ற சேனையில் ஸோக்ரதர் சேர்ந்திருந்தார். பசி, தாகம், குளிர் இவைகளைப் பாராமல் மகாவீரத்துடன் போர்முனையில் அவர் தம் கடமையைச் செலுத்தினார். அந்தச் சமயத்தில் மகாவீரர் ஆல்கிபியாதருடைய உயிரை ஸோக்ரதர் காப்பாற்றினார். அது மாத்திரம் அல்ல. அந்த யுத்தத்து வீரச்செயல்களுக்காக ஆதன்ஸ் மகா ஜனங்கள் கொடுத்த பெரும் பட்டத்தை ஆல்கிபியாதரே அடையும்படி, தாம் செய்த வீரச் செயல்களையெல்லாம் மறைத்துக்கொண்டார். அதற்குப் பின் மற்றொரு போர் நடந்தது. அதில் ஆதன்ஸ் நகரத்தார் பெரிய தோல்வியடைய நேர்ந்தது. தோல்வியடைந்ததும், பயத்தினால் மதிகுழம்பிச் சேனை சிதறியோடிற்று. அச்சமயம் தைரியத்தையும் மன உறுதியையும் இழந்துவிடாமல் நின்று ஒழுங்காகப் பின் சென்றவர் சிலரே. அச்சிலருள் ஸோக்ரதர் ஒருவர். சில காலத்துக்குப் பின்னர் அம்விபள்ளியில் நடந்த யுத்தத்திலும் ஸோக்ரதர் மூன்றாவது தடவை ஆதன்ஸ் நகரத்தார் படையில் சேர்ந்து உழைத்தார். சாதாரணமாகச் சாதுக்களும் ஞானிகளும் வீரமற்றவர்களென்று ஜனங்கள் நினைப்பதும் சொல்வதுமுண்டு. அவ்வாறு நினைப்பதுஞ் சொல்வதும் தவறென்பதையும் தைரியமும் ஞானமும் சாத்துவிகமும் கூட ஞானிகளிடம் இருக்குமென்பதையும், ஸோக்ர

தர் வரலாற்ருலும் மற்ற மகாத்மாக்களின் வரலாற்ருலும் அறியலாம்.

ஸோக்ரதர் காலத்தில் கிரேக்க நாட்டில் ஒரு புதிய உணர்ச்சி பரவ ஆரம்பித்தது. புராதன தர்மத்தையும் மதத்தையும் சிலர் ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தார்கள். அதுகாரணமாக அவைகளின்மீது கொண்டிருந்த பற்றுக்குறையவும் அவைகளை மறுக்கத் துணியவும் ஏற்பட்டது. இவ்விதப் புதிய உணர்ச்சி அதர்மத்திற்குக் காரணமாகுமென்று கருதி, உலகப் பிரசித்திபெற்ற நாடகக்கவிஞர் அரிஷ்டவாணர் அதை யடக்கப் பெருமுயற்சி செய்தார். ஸோக்ரதர் கொண்டுள்ள உண்மையான தத்துவங்களையும் உபதேசங்களையும் அரிஷ்டவாணர் சரியாய் அறிந்துகொள்ளாமல், அவரையும் புதிய நாஸ்திகத்தில் சேர்ந்தவராகவே எண்ணி நாடகமொன்றும் எழுதினூர். ஆதன்ஸ் மகா ஜனங்கள் நாடகங்களைப் பார்ப்பதிலும் படிப்பதிலும் உற்சாகமுள்ளவர்கள். ஸோக்ரதர் தம் அழகற்ற முகம், தட்டை மூக்கு, இவைகளுடனும் உடுத்திய கந்தலோடும் தெருத் தெருவாய்த் திரிந்து எங்கே யாவது நின்று பேசுவார். நகரத்திலுள்ளவர்களில் இவரை அறியாதாரில்லை. இவ்வித ஆண்டியொருவர் ஊரில் இருப்பதை மறவாமல், இவரைப் புதிய நாஸ்திகத்திற்கு நாயகராகவைத்துப் பெரிய நாடகம் ஒன்று எழுதுவது நாடகாசிரியருக்கு எளிதாய் விட்டது.

சிறுவர்களுடைய ஒழுக்கத்தைத் தார்க்கிகர்கள் என்ற கோஷ்டியார் கெடுத்துவருகிருர்கள். மெய்

யைப் பொய்யாக்கிப் பொய்யை மெய்யாக்கி வருகிறார்கள் என்று அவர்கள்மீது, சநாதன தர்மத்தில் பற்றுடைய சமூகத்தாருக்குக் கோபாவேசம் மூண்டிருந்தது. இந்தத் தார்க்கிகருள் ஸோக்ரத்ரையும் ஒருவராகவைத்து அரிஷ்டவாணர் நாடகம் ஒன்றும் வெளிவந்துவிட்டது. தர்க்க சாஸ்திரிகள் போதித்து வந்த வீண் தத்துவங்களையும் நாஸ்திகத்தையுமே ஸோக்ரத மகரிஷி பலமாய் எதிர்த்து வந்தார். அப்படி எதிர்த்து வந்தும், ஏதோ அவரும் நாஸ்திகம் போதித்து வாலிபர்களின் புத்தியை மயக்கி அவர்களது ஒழுக்கம் கெடுமாறு செய்துவிட்டார் என்றும் அவருக்கு மரண தண்டனை விதிக்கவேண்டுமென்றும் ஜனங்கள் அவர் மீது குற்றம் சாட்டினார்கள்.

விசாரணைக் காலத்தில் ஸோக்ரதர் பேசிய பேச்சுகளையும் மரண தண்டனையை எதிர்பார்த்துச் சிறைச்சாலையில் இருந்தபோது அவருக்கும் அவருடைய ஆப்த சிநேகிதருக்கும் நடந்த சம்பாஷணையையும், மரணமடைந்த வரலாற்றையும் கிரேக்க பாஷையில் நூலாக எழுதி வைத்திருக்கிறார்கள். அந்த அரிய நூலுக்கு ஆங்கில மொழிபெயர்ப்பு ஒன்றிருக்கிறது. அம்மொழி பெயர்ப்பைத் தமிழ் மக்களுக்குப் பயன்படுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன்தான் வேலூர் சிறைச்சாலையில் இந்நூலை எழுதலானேன்.

*விசாரணைச் சபை முன்னிலையில் ஸோக்ரதர் பேசியது*

கிரேக்கர்கள் தொழுதுவந்த தேவர்களைப் பொய்த் தேவர்களென்று சொல்லிப் புதிய தெய்வங்களை உண்

டாக்கியதாகவும், சிறுவர்களை ஒழுக்கத்தினின்று வழு வச் செய்ததாகவும் ஸோக்ரதர்மீது குற்றம் சாட்டினார்கள். மரண தண்டனை விதிக்க வேண்டுமென்றே வழக்கு விசாரணைச் சபையில் ஐந்நூற்றொருவர் அமர்ந்திருந்தனர். இவர்களைத் தவிர அக்கிராசனராகத் தனியாக ஒருவரும் அமர்வதில்லை. விசாரணைக்கு மெலேதன் என்ற ஒரு சிறு கவிஞனும் வாதியாய் நின்றான். அநீதன் என்ற செல்வாக்குள்ள தோல் வியாபாரிதான் வாதி பக்கம் நின்று வழக்கை நடத்தினான். ஆதன்ஸ் நகரம் குடியரசு இழந்து சிலநாள் வருந்தியது. அந்தக் காலத்தில் குடிகள் சார்பாக உழைத்த காரணம்பற்றி அவனுக்கு அந்தச் செல்வாக்கு. வாதி மெலேதனும் அவனுக்குப் பக்கத்துணையாக அநீதனும், மற்றொருவனும் குற்றத்தை ருசுப்படுத்துவதற்காகப் பேசினார்கள். அதன் பிறகு, தாம் நிரபராதியென்று உறுதிப்படுத்த ஸோக்ரதர் பேசினார். அவரது முதல் பிரசங்கம் முடிந்தவுடன், நியாய விசாரணைச் சபையார் குற்றம் ஏற்பட்டதா இல்லையா என்ற கேள்விக்கு 281 பேர் ஸோக்ரதர் குற்றவாளியென்றும், 220 பேர் குற்றவாளியல்ல வென்றும் அபிப்பிராயம் சொன்னார்கள். அதற்குப் பிறகு விதிக்க வேண்டிய தண்டனையைக் குறித்து வாதி மறுபடியும் பேசினான். மரண தண்டனையே விதிக்க வேண்டும் என்று வாதி எடுத்துச் சொன்ன பிறகு, குற்றவாளி இஷ்டப்பட்டால் ஏதாவது குறைந்த தண்டனை விதிக்கக் காரணம் காட்டுவது முறை. இம்முறைப்படி ஸோக்ரதர் மீண்டும் பேசிய பிறகு சபையார் மரண தண்டனையே விதித்தனர். ஸோக்ரதர் மற்றுமொருமுறை பேசினார்.

அதன்பின் அவரைச் சிறைச்சாலைக்குக் கொண்டு போனார்கள்.

ஸோக்ரதர் பிரசங்கம்

ஆதன்ஸ் நகரத்தார்களே! வாதிகள் பேசியதை யெல்லாம் நீங்களுங் கேட்டீர்கள், நானும் கேட்டேன். அவைகளில் ஒரு வார்த்தையும் நிஜமில்லை. ஆனாலும் அவர்கள் பேசிய சாதுரியத்தைப் பார்த்து நானே பிரமித்துப் போனேன். 'பேசுவதில் இவன் அதிகத் திறமையுள்ளவன்; நீங்கள் ஏமாந்து போகக்கூடாது. ஜாக்கிரதையா யிருக்கவேண்டும்' என்று சொன்னார்களே, அதுதான் அவர்கள் சொன்ன பொய்களில் எல்லாம் பெரிய பொய். நான் வாயைத் திறந்தவுடனேயே நீங்கள் உண்மையைக் கண்டுகொள்வீர்கள். ஜனங்களை வசப்படுத்தும்படியான பேச்சுத்திறம் எனக்குக் கிடையாது. இவ்விதமான பெரும் பொய்யை வெட்கமின்றி உங்களுக்கு வாதிகள் சொன்னார்களே, அதுதான் எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது. ஆனால் பொய்யை ஒழித்து மெய்யைச் சொல்வதே நற்பிரசங்கத்தின் இலக்கணம். அப்படியானால் பேசுவதில் வாதிகளைவிட நானே திறமையுள்ளவன் என்று ஒப்புக்கொள்கிறேன். அவர்கள் பிரசங்கங்களில் மெய்யென்பதைக் காண்பது அரிது. நானோ உண்மை முழுவதையும் உங்களுக்குச் சொல்லப்போகிறேன். அழகிய பதங்களைத் தேடி அலங்காரங்களைக் கட்டிப் பெருத்த பிரசங்கம் செய்ய நான் முன்கூட்டி யோசித்து வரவில்லை. தர்மமும் நியாயமும் என் பக்கம் இருப்ப

தாக நம்பியிருப்பதால் அழகிய பதங்களைத் தேட நான் முயலவில்லை. என் மனமும் வாக்கும் ஒன்றுபட்டு இயங்குவதால் அப்போதைக்கப்போது தோன்றுகிற படியே பேசுகிறேன். நண்பர்களே ! வயது முதிர்ந்தவனாகிய நான் பொய்யையும் அலங்காரங்களையும் கட்டி உங்கள் முன்னிலையில் சிறுவனைப்போலப் பேசுதல் தகாது. உங்களை ஒன்று மாத்திரம் கேட்டுக்கொள்கிறேன். கடைத்தெருவிலும் சந்தைக் கூட்டத்திலும் மற்ற இடங்களிலும் நான் எவ்விதம் பேசி வந்தேனோ நீங்களும் எவ்விதம் கேட்டீர்களோ அவ்விதமே, சொல்லலங்காரம் இன்றி இங்கேயும் உங்கள் முன்னிலையில் பேசுகிறேன். அதைக் கண்டு நியாய சபையில் பேச வேண்டிய முறையைவிட்டுத் தவறினேன் என்று கோபியாதீர்கள். பொறுமையுடன் நான் சொல்லுவனவற்றைத் தடை செய்யாமல் கேட்கும்படி உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன். எனக்கு எழுபது வயதுக்கு மேலாயிற்று. நியாயஸ்தலத்திற்கு நான் வந்தது இது தான் முதல்முறை. இவ்விடத்தைய பேச்சு முறைகளை நான் அறியேன். அன்னிய தேசத்திலிருந்து வந்திருந்தால் எப்படி அன்னிய பாஷையில் பேச அனுமதி கொடுப்பீர்களோ அதே விதம் என்னை மன்னித்து என் பேச்சில் உள்ள முறை தவறுகளைக் கவனியாது பொருளைமட்டும் கவனித்து ஒரே முகமாய் ஆலோசிப்பீர்களாக. பொய்யை விலக்கி மெய்யைப் பேசுவது எப்படி நற்பிரசங்கத்தின் இலக்கணமோ அவ்விதமே, வாதிப் பிரதிவாதிகள் சொல்லுவதுநியாயமா இல்லையா

என்பதை மாத்திரம் கவனிப்பது நியாயாதிபதியின் சிறந்த இலட்சணம்.

ஆதன்ஸ் நகரத்தார்களே! என்மேல் குற்றம் சாட்டியது இப்போதுதான் என்று எண்ண வேண்டாம். இப்போது சுமத்தும் குற்றத்தை முன்னேயே அனேக வருஷங்களாய் என்மேல் சிலர் சுமத்தி வந்திருக்கிறார்கள். அவர்கள் என்மேல் சொல்லி வந்த பழிகள் உங்கள் மனதைப் பாதித்தேயிருக்கும். அவைகளினின்று நான் தப்புவது கஷ்டம். இப்போது கொண்டு வந்திருக்கும் வழக்கு பெருத்த வழக்காயிருந்தாலும், சொல்லி வந்த பழைய பழிகளே பெரியவையென்று நினைக்கிறேன். சபையங்கத்தினரான நீங்கள் எல்லாரும் சிறு பிள்ளைகளாயிருந்தது முதலே உங்கள் மனதைக் கெடுக்கும்படியான பழிகளை என்மீது சுமத்தி வந்திருக்கிறார்கள். பாலியப் பருவத்தில் ஓர் அபிப்பிராயம் மனதைக் கவர்ந்துவிட்டால் அதினின்றும் விடுபடுவது அரிது. 'ஸோக்ரதன் என்பவன் ஒருவன் இருக்கிறானே, அவன் பூமி பாதாள ஆகாயத்திலுள்ள தத்துவங்களை யெல்லாம் ஆராய்ச்சி செய்கிறான்; மிகுந்த சாதுர்யமுள்ளவன்; பொய்யை மெய்யாக்கியும் மெய்யைப் பொய்யாக்கியும் ஏமாற்ற வல்லமையுள்ளவன்' என்று அனேக வருஷங்களாக என்மீது பழி. ஆகாயத்திலும் பூமியிலுமுள்ள பூத தத்துவங்களை ஆராய்ச்சி செய்கிறவர்கள் எல்லாரும் நாஸ்திகர்கள் என்றே, ஜனங்கள் சாதாரணமாய் எண்ணுகிறபடியால், என்னையும் துராத்மாவென்று நீங்கள் நிச்சயம் செய்திருக்கிறீர்கள். மேலே

தனையாவது அநீதனையாவது ஒரு பெரிய விரோதியாக நான் எண்ணவில்லை. இந்தப் பழைய பழிகளைப் பரப்பினவர்களே எனக்குப் பெரிய சத்துருக்கள். அவர்கள் ஒருவர் இருவர் அல்ல. பலபேர். அனேக வருஷ காலமாய் என்மேல் குற்றங்கள் சொல்லி வந்ததும் தவிர சொல்லுவதையெல்லாம் நம்பும் பருவமாகிய பாலியப் பருவத்தில் உங்கள் மனதைக் கெடுத்திருக்கிறார்கள். மேலும் அவர்கள் சொன்ன பழிகளுக்குப் பதில் யாரும் சொல்லவில்லை. ஒரு கட்சியாகவே அவர்கள் என்னைத் தொடர்ந்து வந்திருக்கிறார்கள். இக்காரணங்களினால் தான் இந்தப் பழைய பழிகளைக் குறித்து நான் பெரிதும் பயப்படுகிறேன். அவைகளைப் பற்றியே முதலில் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். சில நாடகங்கள் இப்படி என்னை அவதூறு செய்து வந்தன. மற்றும் விஷயம் தெரியாத பலரும் அதேவிதம் பொய்யைப் பரப்பியிருக்கிறார்கள். உண்மையில் நான் நாஸ்திகன் என்றும் ஒழுக்கத்தைக் கெடுப்பவன் என்றும் நினைத்தே சிலர் இப்படி என்னைச் சொல்லியிருப்பார்கள். ஆனால் அனேகமாய் என்மேல் சிலர் கொண்ட பொறாமையும் துவேஷமுமே இதற்குக் காரணம். இந்த வழக்கில் நான் அவர்களையெல்லாம் உங்கள் முன் நிறுத்திக் கேள்வி கேட்டு அவர்கள் சொன்னது பொய் என்று அவர்கள் வாக்குமூலத்தாலேயே காட்டுவது அசாத்தியம். நிழல்களுடனும் கண்ணுக்குப் புலப்படாதவர்களுடனும் யுத்தம் செய்வது கஷ்டம்.

ஆனபோதிலும், ஆதன்ஸ் மகா ஜனங்களே! எனக்குக் கொடுத்துள்ள சிறிது நேரத்துக்குள் சொல்ல

வேண்டியதை நான் சொல்லி என்னைக் குறித்துப் பல நாளாக நீங்கள் கொண்டுள்ள தப்பான அபிப்பிரா யங்களைச் சரிப்படுத்த முயல்கிறேன். இது கஷ்டமான காரியம் என்று நான் அறியாமலில்லை. நான் சொல்லு வது உங்கள் மனதுக்குள் புகுந்து என்னை நிரபராதி என்று நீங்கள் தீர்மானிப்பது ஆண்டவன் இச்சை. முடிவைக் கடவுள் கிருபைக்கு விட்டுவிட்டு, நான் சொல்ல வேண்டியதை முறைப்படி சொல்லிவிடு கிறேன்.

எந்த ஆஸ்பதத்தைக்கொண்டு மெலேதன் தைரிய மாய் என்மேல் வழக்குக் கொண்டு வந்திருக்கிறானோ, எந்தப் பழியை என்மேல் என் விரோதிகள் பல நாட் களாய்ச் சொல்லி வந்தார்களோ அதை ஆராய்ந்து பார்ப்போம். அப்பழியை நியாய ஸ்தலத்துக்குக் கொண்டுவந்த ஒரு பிராதாகவே வைத்துப் பரிசோதிப் போம். அவர்கள் சாட்டும் குற்றம் என்னவென்றால் 'ஸோக்ரதன் ஒரு துராத்மா. வானத்திலும் பாதாளத் திலும் நடக்கும் விஷயங்களைச் சோதிக்கிற அதிகப் பிரசங்கி; தன் குதர்க்கத்தால் பொய்யை மெய்யாக்கி மெய்யைப் பொய்யாக்குகிறான். தன்னுடைய துஷ்டச் செயல்களைப் பிறருக்கும் போதிக்கிறான்' என்பது தான், என்மேல் நீண்ட நாளாய்த் தொடர்ந்து வந்த வழக்கு. அரிஷ்டவாணர் நாடகத்தைப் பார்த்திருப்பீர் கள். அதில் ஸோக்தரன் என்னும் ஒருவன், ஒரு கூடை யில் உட்கார்ந்துகொண்டு சுற்றிச் சுற்றி வந்து வாயு ஸ்தம்பம் செய்தான் என்றும் இன்னும் அனேக வித

மாய் அர்த்தமின்றிப் பேசினதையும் நாடகத்தில் பார்த்திருப்பீர்கள். அந்த ஸோக்ரதன் செய்தவையும் பேசினவையும் உண்மை ஸோக்ரதனுகிய எனக்கு ஒன்றும் தெரியாது. வாயு ஸ்தம்பமும் மற்ற விநோதமான பூத தத்துவ ஆராய்ச்சியும் கூடாது என்று நான் சொல்ல வரவில்லை. அவைகளைக் கற்றவர்கள் மேலானவர்களா யிருக்கலாம். ஆனல் அவைகளுக்கும் எனக்கும் ஒரு சம்பந்தமுமில்லை. நான் அவைகளைக் கற்றவனல்லவென்றே சொல்லுகிறேன். இதன் உண்மை உங்களுக்கே தெரியும். நீங்களனைவருமே எனக்குச் சாட்சிகள். நான் அனேக வருடங்களாகப் பேசி வந்ததை உங்களில் அனேகர் கேட்டு வந்திருக்கிருர்கள். ஒரு போதாவது இவ்விஷயங்களைப்பற்றி நான் பேசினதுண்டா? கிடையாது. உங்களில் என் சம்பாஷணையைக் கேட்டறிந்தவர்கள் இதை மற்றவர்களுக்கு எடுத்துச் சொல்லும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். இதனுல் ஆதாரமின்றி என்மீது மற்றப் பழிகளும் எப்படிச் சுமத்தப்பட்டிருக்கின்றன என்பதை நீங்கள் அறிந்து கொள்ளக்கூடும்.

நான் வாலிபர்களுக்கு வித்தியா பயிற்சி செய்வித்து அதனுல் பணம் சம்பாதித்து வந்தேன் என்று யாராவது சொன்னுல் அதுவும் முழுப் பொய் என்று நீங்கள் அறியவேண்டும். வாலிபர்களுக்குத் திறமையுடன் போதிப்பது மேன்மையான தொழில்தான். அதற்குத் தகுந்த மேதாவிகள் சிலர் இருக்கிருர்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனுல் குதிரைக் குட்டியையாவது

மாட்டையாவது சவாரிக்கும் வண்டிக்கும் பழக்குவதற்காகக் குதிரைக்காரர்களும் குடியானவர்களும் சுலபமாய்க் கிடைப்பார்கள். ஆனால் மானிட கர்மங்கள், தேசத்தை ஆண்டு வரும் நகரத்தார் கடமைகள், இவைகளைச் சாதிப்பதற்கான திறமையையும் அறிவையும் வாலிபர்களுக்குப் புகட்டி அவர்களை நல்வழியில் நிறுத்தவல்ல மேதாவிகளைக் காண்பது அரிது. எனக்கு அவ்விதத் திறமை இருந்தால் நான் அதை மறைத்திருக்கமாட்டேன்; அதை வெளிப்படுத்தியே யிருப்பேன்; ஒருவேளை இறுமாப்புங் கொண்டிருப்பேன். மகாஜனங்களே! எனக்கு அவ்விதத் திறமையில்லையென்பது உண்மை.

நீங்கள் ஒருவேளை என்னைக் கேட்கலாம். 'ஸோக்ரதனே! நீ சொல்வது சரி. ஆனால் நீ என்ன செய்து வருகிறாய்? ஏன் உன்மேல் வீண் அபவாதம் சுமத்தப்பட்டிருக்கிறது? நீ ஏதோ செய்து வருவது ஜனங்களுக்குப் பிடியாமலிருப்பதினாலல்லவா இப்பழிகள் கிளம்பியிருக்கவேண்டும்? மற்றவர்களைப்போல் சாதாரணமான விருத்தியிலிருந்துகொண்டு வந்திருந்தால் இம்மாதிரி உன்மேல் ஜனங்கள் வீணாய்ப் பழிசுமத்தமாட்டார்களே! ஆகையால் நீயே உண்மையைச் சொல். உன் செயல்களை நீயே சொல்லி வெளிப்படுத்தினால் நாங்கள் தீர்ப்புக் கொடுக்கமுடியும்' என்று நீங்கள் கேட்பது நியாயமாகும். நான் என்ன செய்து வந்தேன் என்பதையும் ஏன் என்மீது இவ்வளவு பேருக்கு அசூயை ஏற்பட்டது என்பதையும் சொல்லுகிறேன்;

கேளுங்கள். சுருங்கக்கூறின், நான் கடவுளின் ஆணை வழி ஒழுகி வந்தமையே என்று கூறலாம். ஆதென்ஸ் நகரத்தார்களே! தெல்பி மகா சன்னிதியில் எழுந்தருளி யுள்ள சுவாமி ஒரு வாக்கு அருளினர். நான் ஒன்றும் அவரைக் கேட்கப் போகவில்லை. ஆனல் பாலியத்தி லிருந்து எனக்குச் சகாவான சேரவான் என்னும் கன வான் உங்களுக்குத் தெரிந்திருக்குமே. நமது நகரம் குடி யரசு இழந்த காலத்தில் அவர் நகரத்திற்கு நேர்ந்த பெருங்கேட்டைக் கண்டு சகிக்கமுடியாமல் நகரத் தையே விட்டு விலகியிருந்தார். மறுபடி குடியரசு நிலைத்த பின்னரே திரும்பி வந்தார். அவர் தெல்பியில் சுவாமி சன்னிதானத்தில் போய்க் கேட்ட கேள்விக்கு அர்ச்சகர் மூலமாய் 'ஸோக்ரதனைவிட யாரும் ஞானி யில்லை' என்று தெய்வத்தின் பதில் வந்தது.

இதை நான் அறிந்து, 'இது என்ன விபரீதம்! அஞ் ஞானியான என்னைப்பற்றிச் சுவாமி இம்மாதிரி சொல் வதற்கு என்ன காரணம்?' என்று வியப்புற்றேன். ஆயி னும், தெல்பி கோயிலில் கொடுத்த வாக்குப் பொய்யா காதே என்று சிந்தித்தேன். அதன்மேல் இதன் பொருள் அறிய வேண்டுமென்று என்னைவிட அறிவு நிறைந்து புகழ்பெற்ற தத்துவ சாஸ்திரிகள், புலவர் கள், மற்றும் தர்ம நிபுணர்கள் இவர்களில் சிலரைக் கண்டு சம்பாஷித்தேன். தெல்பி சன்னிதியின் வாக் கைப் பரீட்சித்துப் பார்த்தேன். எனக்கே வியப்புண் டாயிற்று. யாரை மகா ஞானிகள் என்று அதற்குமுன் நான் எண்ணியிருந்தேனே அவர்கள் சுத்த அஞ்ஞானி

கள் என்பது எனக்கு விளக்கமாயிற்று. இதைக் கண்டதும் கடவுள் கொடுத்த வாக்கின் பொருள் எனக்கு நன்கு விளங்கிற்று. அனைவரும் அறியாமையில் மூழ்கியிருக்கிறார்கள். ஆனால் அவர்கள், தங்கள் அறியாமையை உணராமல், தாங்கள் மகாபண்டிதர்கள், அறிவு நிறைந்தவர்கள் என்று எண்ணி அஞ்ஞானத்தில் மூழ்கிக் காலம் கழிக்கிறார்கள். என் அறியாமையை நான் நன்கு அறிந்திருக்கிற காரணத்தால் ஞானியென்று என்னை தெல்பி சுவாமி குறிப்பிட்டது என்று அறிந்துகொண்டேன். அதுமுதல் மற்ற ஜனங்களும் தங்களுடைய அஞ்ஞானத்தை நன்கு அறியும்படி காட்டுவதே ஆயுள் நாளில் நான் செய்யவேண்டிய கடமை என்றும் அறிந்துகொண்டேன்: இதைக் கடவுள் எனக்கென்று இட்ட பணியாக எண்ணினேன். அதனால் விளையும் பகைமையையும் துயரத்தையும் பொருட்படுத்தாமல் இந்தத் தொண்டு செய்துவருகிறேன்.

ஒருவர்பின் ஒருவராய்ப் புகழ்பெற்ற பண்டிதர்கள், மேன்மையடைந்த கவிஞர்கள், ராஜதந்திரிகள், அறிஞர்கள் என்று நினைக்கும் ஒவ்வொருவரிடமும் சென்று கடவுள் அறிவென்ற ஒன்றின் ஏவுதலைச் செய்தேன். உண்மையில் ஓரறிவுமில்லை யென்பதையும் அஞ்ஞானத்தில் உலகம் மூழ்கியிருப்பதையும் விளக்கி வந்தேன். எல்லாரையும் பார்த்ததில், யார் தம்மை அதிக அறிவுள்ளவர்கள் என்று கருதி வந்தார்களோ அவர்களேதான் கொண்டதுவிடா மூடர்கள் என்றும், தங்களுக்கு அறிவில்லை என்று நினைக்கும் பாமர ஜனங்

கள்தான் கொஞ்சமாவது ஞானம் ஏற்படக்கூடிய நிலையில் இருப்பதாகவும் நான் கண்டேன். புலவர்களைப்பார்த்தால் தெய்விகக் கிருபையாலும் இயற்கைச் சக்தியாலும் நல்ல காவியங்களை எழுதிவிட்டார்கள் என்று சொல்ல வேண்டியதே யொழிய, தாங்கள் இயற்றிய நூல்களின் பொருள்களைத் தாங்களே யறியவில்லை. மேலான காவியங்களை இயற்றின காரணத்தினால் உலகத்திலுள்ள எல்லா விஷயங்களையும் தாங்கள் அறிந்துவிட்டதாக அவர்கள் கருதினார்கள். இப்படியே மற்றப் பண்டிதர்களும் சாஸ்திரிகளும், தாங்கள் அறிந்த ஒரு விஷயம் அல்லது செய்யவல்ல ஒரு தொழில் இருக்க, தாங்கள் எல்லாவற்றையும் அறிந்துவிட்டதாகச் செருக்கடைந்து கிடந்தார்கள். இப்படி அறிவீனத்தையும் அஞ்ஞானத்தையும் நான் அவர்களுக்கு எடுத்துக் காட்டினபொழுது அவர்கள் என்மேல் கோபம்கொண்டு என்னைப் பகைத்தார்கள். நான் செய்வது கடவுளின் ஏவல் என்றும், என்னுடைய சாதுரியத்தைக் காட்டுவதற்காக எதுவுஞ் செய்வதில்லை யென்றும் அவர்கள் அறிந்துகொள்ளவில்லை. எவ்விஷயத்தில் தாங்கள் நிறைந்த நிபுணர்கள் என்று எண்ணியிருந்தார்களோ அவ்விஷயத்தைப்பற்றிச் சம்பாஷித்ததில் அவர்களுக்கு ஒருவிதமான உண்மையறிவும் கிடையாது என்று நான் எடுத்துக் காட்டுவதைப் பார்த்துப் பக்கத்திலுள்ளவர்கள் நகைப்பார்கள். இதைக் கண்டு அவர்களுக்குக் கோபம் பின்னும் அதிகமாகும். தவிர, நான் எவ்வெவ் விஷயங்களில் மற்றவர்களுக்கு உண்மை அறிவு இல்லையென்று நிரூபித்து

வந்தேனே அவ்வறிவை நான் அடைந்திருப்பதாக ஜனங்கள் எண்ணிவிட்டார்கள். உண்மையில் எனக்கும் அறிவில்லை; மற்றவர்களுக்குமில்லை; ஆனால் முன் சொன்னபடி என் அறிவீனத்தை நான் அறிந்தேன்; மற்றவர்கள் அறியவில்லை. இதுவே என்னிடமுள்ள உயர்வு, மற்றவர்களிடமுள்ள தாழ்வு என்பதைக் கண்டுகொள்ளாமல் அவர்களை நான் மூடர்களாக்கி விட்டதாகவும் நான் செருக்குக் கொண்டவனாகவும் கருதி என்னைப் பகைத்தார்கள். இப்படிச் செல்வாக்குள்ளவர்கள் என்மேல் பகைகொண்டிருக்க, என்னுடன் பழகிவரும் கனதனவான்களது குடும்பங்களைச் சேர்ந்த வாலிபர்கள் நான் சம்பாஷிக்கும் முறையைப் பார்த்துத் தாங்களும் அதே விதம் தங்களுக்குள் சம்பாஷிக்கப் பயின்றார்கள். அவ்வாலிபர்களும் தாங்கள் கண்ட பண்டிதர்களைக் கேள்வி கேட்டு அவர்களுடைய பொய்யறிவை வெளிப்படுத்தி வந்தார்கள். இதனால், செருக்கு மிகுந்து நான் கெட்டதும் தவிர வாலிபர்களையும் கெடுத்தேன் என்று ஜனங்கள் நினைத்தார்கள். இவ்விதமாய்ப் பண்டிதர்கள் என்று பேர் பெற்றவர்கள், கவிராயர்கள், பலவித சாஸ்திர நிபுணர்கள் எல்லாரும் என்மேல் அசூயைகொண்டு பழி சுமத்தி வந்தார்கள். என்ன குற்றம் ஸோக்ரதன் செய்தான் என்று கேட்டால், தங்களுடைய உண்மை அறிவீனத்தைக் காட்டிவிட்டதை ஒரு குற்றமாகச் சொல்லமுடியாமல், இவன் நாஸ்திகன், இவன் கிரேக்கருடைய சநாதன தர்மத்தைக் கெடுக்கிறான், பொய்யை மெய்யாக்குகிறான், மெய்யைப் பொய்யாக்குகிறான்,

ஜனங்களை மயக்கித் துர்ப்புத்தி யுண்டாக்குகிறான் என்று பழி சுமத்தினர்.

இவைகள் எல்லாம் அனேக வருஷங்களாய் உங்கள் மனதைப் பாழ்படுத்தி யிருக்கின்றன. எனக்குக் கொடுத்திருக்கும் சொற்ப காலத்தில் எப்படி அதை நிவர்த்திப்பேனோ தெரியவில்லை. நான் உண்மையை மறைக்காமல் சொல்லிவிட்டேன். இது உங்களுக்கு இப்போது புலப்படாமல் போனாலும் பின்னேயாவது அறிந்துகொள்வீர்கள். கடவுள் எனக்கு இட்ட கடமையைச் செய்துவந்தேன். வந்த பழியைப் பாராமலும், என் குடும்ப காரியத்தைக் கவனியாமலும், மிகுந்த வறுமையடைந்தும், இவ்விதம் என் காலத்தைக் கழித்துவந்தேன்.

இனி என்மேல் சாட்டிவந்த பழைய பழிகளை இவ்வளவோடு நிறுத்திவிட்டு, இப்போது கொண்டுவரப்பட்ட வழக்கைக் கவனிப்போம். வாதிகள் சாட்டும் குற்றம் என்ன ? 'ஸோக்ரதன் தீயசெயல் செய்பவன்; அவன் சிறுவர்களுக்குத் துர்ப்புத்தி புகட்டுகிறான் ; நாடு வணங்கும் தெய்வங்களை அவன் நம்பி வணங்குவதில்லை ; புதிய தெய்வங்களை உண்டாக்கிக்கொண்டிருக்கிறான்' என்று அவர்கள் சொல்லுகிறார்கள். இதில் ஒவ்வொன்றாய் எடுத்துக்கொள்வோம். நான் வாலிபர்களைக் கெடுத்து விடுகிறேனா பார்ப்போம்.

'அப்பா - மெலேதனே இங்கே வா, வாலிபர்களை நான் கெடுக்கிறேனல்லவா ?'

'ஆம்!'

'சரி, இதைப்பற்றி நீ கவலைப்பட்டுப் பிராது செய்திருக்கிறாய்; சிறுவர்கள் விஷயத்தில் உனக்கு அதிகக் கவலையல்லவா? அவர்கள் விஷயத்தை ஆழ்ந்து யோசித்தல்லவா நீ இந்த பிராது கொண்டு வந்திருக்கிறாய்?'

'ஆம்.'

'சிறுவர்கள் சரியான முறையில் பயின்று வருவது இராஜ்ஜியத்திற்கு இன்றியமையாதது அல்லவா?'

'ஆம்.'

'யார்தான் அவர்களுக்குத் தகுந்த போதகாசாரியர்கள்? தயவுசெய்து சொல்லவும்.' [மெலேதன் பதில் சொல்லவில்லை.]

'அப்பா, ஏன் சும்மா வாய் மூடிக்கொண்டிருக்கிறாய்? பதில் சொல்ல முடியவில்லையா? இதைப் பற்றி நீ யோசிக்கவில்லைபோலும்! கவனியாமல் என் மீது குற்றம் சாட்டுவது அநியாயமல்லவா? வெட்கக் கேடல்லவா? தயவுசெய்து பதில் சொல்லவேண்டும். நம் இளைஞர்களை நல்ல பிரஜைகளாக்கும் திறமையுள்ளவர்கள் யார்?

'சட்டங்கள்.'

'நண்பனே! அதை நான் கேட்கவில்லை. நம் வாலிபர்களைச் சட்டங்கள் அறிந்துள்ள எவர் நல்லொழுக்கத்தில் திருப்புபவர்கள்? அதைச் சொல்லவும்.'

'நியாயாதிபதிகள்தான்.'

'என்ன நீ சொல்லுவது! - நியாயாதிபதிகள் நமது வாலிபர்களுக்கு வித்தியாப்பியாசஞ் செய்வித்து அவர்களுக்கு நல்லொழுக்கம் போதிக்கக்கூடுமா ?'

'ஆம், சந்தேகமென்ன ?'

'எல்லாருமா ? அவர்களில் சிலரைச் சொல்லு வாயா ?'

'எல்லாருந்தான்.'

'ஓகோ ! இது பெரிய வேடிக்கை. சரி, நியாய சபையார் தவிர நமது மந்திராலோசனை சபையார் களும் தகுந்த போதகாசிரியர்களா ?'

'ஆம், அவர்களுந்தான்.'

'நமது நகரத்து மகாநாட்டு அங்கத்தினரோ ?'

'அவர்களுந்தான்.'

'அவர்கள் எல்லாரும் சிறுவர்களுக்குப் போதிக் கத் தகுந்தவர்களா ? அல்லது அவர்களில் சிலரும் வாலிபர்களைக் கெடுத்து விடுகிறார்களா ?'

'இல்லை. அவர்கள் எல்லாரும் சிறுவர்களை நல் வழியில் நிறுத்துவார்கள்.'

'அதாவது - மெலேதனே, ஆதென்ஸ் நகரத்தில் நான் ஒருவன்தான் குழந்தைகளைக் கெடுக்கக் கூடிய வன், மற்ற எல்லா நகரத்தார்களும் அவர்களுக்கு நற் போதம் செய்யக் கூடியவர்கள் அல்லவா ?'

'அதுதான் நான் சொல்லுவது.'

'ஆகா! நான் எப்படிக் கெட்டுப்போனவன் பார்த்தீர்களா ? ஆனாலும் பாதகமில்லை. இவ்வளவு

பேர் சிறுவர்களைச் சரியான மார்க்கத்தில் நிறுத்தக் கூடியவர்களாயிருக்க, நான் ஒருவன் மாத்திரம் அவர்களுக்குத் துர்ப்போதனை செய்பவனுயிருந்தாலும் சிறுவர்கள் கெடமாட்டார்கள். இந்தப் பொய்க் கதையைக் கேட்டீர்கள். மெலேதன் இவ்விஷயத்தைக் குறித்துத் தன் புத்தியைச் செலுத்தினதே கிடையாது என்பது உங்களுக்கு நன்ருய் விளங்கியிருக்கும். வாலிபர்களைக் குறித்து இவன் கவலைப்பட்டதே பொய்.

'மெலேதனே! நான் மனதறிந்து வாலிபர்களுக்குத் துர்ப்புத்தி யுண்டாக்குகிறேனு? அல்லது அறியாமையால் செய்கிறேனு?'

'மனமறிந்துதான் செய்கிறீர்.'

'அப்பா! கெட்ட மனிதர்களினுல் மற்றவர்களுக்குத் தீமைதானே உண்டாகும்?' — 'ஆம்'

'எவனுவது தனக்கே தீமையுண்டாக்கும் வழியை மனமறிந்து தேடுவானு?' — 'மாட்டான்.'

'ஆனுல் நீ சொல்லுவது என்ன? நான் சிறுவர்களை யெல்லாம் தீய வழியில் கொண்டுவிட்டு, நாட்டுக்கே, அதாவது மற்றவர்களுடன் எனக்குமே, அவர்கள் தீங்கிழைக்கும்படி செய்கிறேன் என்றல்லவோ நீ சொல்கிருய்? என் மனமார நான் எனக்கே தீங்கு விளையும்படி செய்துகொள்ளுகிறேன் என்பதை நீயறிந்து சொல்லுகிருய்! என் நன்மை எனக்குத் தெரியவில்லை! நீ பாலியனுயிருந்தாலும் இது உனக்குத் தெரிந்துவிட்டதல்லவா? அப்பா! இதை நான் நம்ப முடியவில்லை; யாரும் நம்பமாட்டார்கள்.

'ஆதென்ஸ் நகரத்தார்களே! சிறுவர்களை மன மறிந்து நான் கெடுக்கமுடியாது. இது ஆதாரமற்ற பழி. ஆனால் அறியாமையால் ஒருவேளை நான் இப் படிச் செய்யலாம். அறியாமையால் செய்யும் குற்றத் திற்குத் தண்டனை எப்படி விதிக்கலாம்? மெலேதன் என்ன செய்திருக்கவேண்டும்? என்னைத் தனித்துக் கூப்பிட்டு எனக்கு நற்புத்தி புகட்டியிருக்கவேண்டும்; அவனால் எனக்கு அறிவு வந்தவுடன் அறியாமையால் நான் செய்யும் தீய செயலை நானாகவே நிறுத்தி விடுவே னல்லவா? அப்படிச் செய்யாமல் என்னைத் தண்டனைக் காக நியாய ஸ்தலத்திற்குக் கொண்டுவந்து நிறுத்தி விட்டான்! உண்மை உங்களுக்கு விளங்கியிருக்கும். நகரத்தார்களே! தனக்குச் சற்றும் அக்கரையில்லாத விஷயங்களில் மெலேதன் புகுந்து பொய் வேஷம் போடுகிறான்.

[மறுபடியும் ஸோக்ரதர் மெலேதனைக் கேள்வி கள் கேட்டார்; அவன் பதில்சொல்ல முடியாமல் திகைத்து நின்றான். புதிய தேவதைகளைத் தாம் உண்டாக்கினால் ஏதோ தேவதைகள் உண்டென்று தானே நம்பியிருக்கவேண்டும்? உண்டாக்கினது உண் மையானால் தாம் நாஸ்திகராகமாட்டார் என்றும், தேவதைகள் எவைகளையாவது தாம் நம்பியிருப்பதை ஒப்புக்கொண்டால், தெய்வமும் பரம்பொருளும் உண்டென்று ஒப்புக்கொண்டதாகவும் ஏற்படுமல் லவா? இப்படியிருந்தால் தம்பேரில் சாட்டும் நாஸ் திகக் குற்றம் பொய்யாகுமென்றும் காட்டினார்.]

'ஆதென்ஸ் நகரத்தார்களே! மெலேதன் சாட்டும் குற்றம் பொய்யென்று நான் இன்னும் காட்ட

வேண்டுவதில்லை. பலரை எனக்குப் பகைவர்களாக்கிக் கொண்டு விட்டேன். அதனால்தான் நான் தண்டனை யடைய வேண்டுமேயொழிய இப்போது வாதிகளாய் நிற்பவர்கள் என்மேல் குற்றத்தை நிரூபித்து என்னைத் தண்டனைக்குள்ளாக்க முடியாது. ஜன சமூகத்தா ருடைய மனதைக் கெடுத்து அவர்களுக்கு என்மேல் சந்தேகமும் கெட்ட எண்ணமும் உண்டாகும்படி செய்து விட்டார்கள். உலகத்தில் இது புதிய செய்கையல்ல. இதற்குமுன் எவ்வளவோ சத்புருஷர் களைப் பாமர ஜனங்கள் கோபத்தினாலும் அஞ்ஞா னத்தினாலும் வதை செய்திருக்கிறார்கள். நானும் ஜனங்களுடைய அறியாமைக்கு இரையாவேன். எனக் குப் பிறகும் எவ்வளவோ பேர் தர்மத்திற்காகப் பிராணத் தியாகஞ் செய்யப் போகிறார்கள். இது நிச்சயம்.

[இம்மாதிரி (ஐந்நூறு வருஷங்களுக்குப் பின்) ஏசுநாதரை அவர் தேசத்து ஜனங்கள் பழித்துப் பெருங்குற்றம் சாட்டிக் கொன்றார்கள் என்பதைக் கிறிஸ்து சரித்திரமாகிய பைபிலில் காண்க.]

உங்களுள் சிலர், 'நீ சொல்வது சரிதான். ஆனால் இம்மாதிரி உன் பிராணனுக்கு ஹானி உண்டுபண் ணுங் காரியங்கள் ஏன் செய்துவருகிறாய்? அக்காரி யங்களை விட்டுவிடலாமே' என்று கேட்கலாம். அதற்கு என் விடை: தாங்கள் சொல்லுவது நீதி யன்று; மனிதனாய்ப் பிறந்தவன் ஏதேனும் ஒரு காரி யத்தைச் செய்யப் புகும்போது, அது தர்மமா அதர்

மமா என்று ஆராய்ந்து செய்யவேண்டுமே யொழிய, அதனால் தன் பிராணனுக்கு ஏதாவது அபாயம் வருமா வராதா என்பதையோ வேறு விஷயத்தையோ மனதில் எண்ணக் கூடாது. நற்செயலா, தீச்செயலா, தர்ம நெறியில் நிற்பவன் செய்யத் தகுந்த காரியமா, அல்லவா என்பதை மாத்திரம் பார்க்கவேண்டும். அரக்கர்களுடன் போர் செய்யப்போன வீரர்கள் தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும் என்று எண்ணினூர்களா? அல்லது தர்மத்தை மாத்திரம் கருதினூர்களா ? உயிரைத் திரணமாக எண்ணி மானத்தையும் தர்மத்தையும் பெரிதாகக் கருதியல்லவோ அவர்கள் போருக்குச் சென்றூர்கள் ? "அக்கிரமம் செய்தவனைக் கொன்று, உடனே என் பிராணனையும் விடச் சம்மதிப்பேனே யொழிய, உலகத்தால் இகழப்பட்டு வெறும் பூபாரமாய்ப் பிழைத்திருக்க என்னுல் முடியாது" என்றல்லவோ வீரன் சொன்னூன் ? தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்வது எப்படி என்று யோசித்தானு ?

[நமது இராமாயணம் மகா பாரதம் இவைகளை நாம் பாராட்டுவது போல் கிரேக்கர்களுக்குத் தெய்விக இதிகாசமுண்டு. அதிலிருந்து ஸோக்ரதர் திருஷ்டாந்தம் எடுத்துச் சொன்னூர்.]

என் மனதில் எள்ளளவும் சந்தேகமின்றி நான் நம்பியிருக்கும் தர்ம வழி ஒன்றே. அவ்வழியில்தான் நான் நடப்பேன். ஒருவன் தானுக எடுத்துக்கொண்டதோ அல்லது தன் எஜமானன் இட்டதோ தனக்

கென்று ஏற்பட்ட கடமையை எந்த அபாயம் அல்லது கஷ்டம் வந்தபோதிலும் செய்தே தீரவேண்டும்; மரணத்தையாவது மானம் தவிர வேறு எதையாவது மனதில் எண்ணிப் பின்வாங்கக் கூடாது.

போடியாவிலும் அம்விப்பள்ளியிலும் தேலியத்தி லும் நீங்கள் நியமித்தனுப்பின சேனாதிபதிகள், என்னை யுத்தத்தில் எந்த இடத்தில் எந்த வேலையிட்டு நிற்கச் சொன்னார்களோ அந்த இடத்தைவிட்டு நகராமல், மரணத்தைக் கண்டு பயப்படாமல், மற்றவர்களைப் போல நானும் நின்றேனல்லவா? இப்போது மாத்திரம் பிராணனைக் காப்பாற்றிக் கொள்ளவோ அல்லது வேறு பயத்தினாலோ என் ஆண்டவன் எனக்கிட்டதாக நான் அறிந்து செய்கிற கருமத்தைச் செய்யாமலிருப்பேனா? செருக்கிலும் அறியாமையிலும் மூழ்கியிருக்கிறவர்களைச் சோதனை செய்து, அவர்கள் அறியாமையை அவர்களுக்குக் காட்டுவதே கடவுள் எனக்கு இட்ட வேலையென்று நான் அறிந்தேன். அந்தக் கருமத்தை விடாமல் நான் செய்தே தீரவேண்டும். மரணம் அல்லது வேறு துன் பம் வருமோ என்று பயந்து ஆண்டவன் கட்டளையை நிறைவேற்றாமல் உயிரையும் சுகத்தையும் பெரிதாய் நினைத்தேனால் அப்போதுதான் நாஸ்திகன் என்று என்னை நீங்கள் நிச்சயமாய்ச் சொல்லலாம்; அதற்காக நியாயஸ்தலத்தில் நிறுத்தி விசாரணையும் செய்து தண் டிக்கலாம். அப்படிச் செய்தேனால் தெல்பி சன்னிதி யில் சுவாமி கொடுத்த வாக்கை நான் உபேக்ஷ

செய்து கடவுளிடம் பக்தியும் தர்மத்தில் நம்பிக்கையு மில்லாமல் உயிருடன் தப்பிப் பிழைத்தவனுவேன். அஞ்ஞானத்தைப் பூர்ண ஞானமாக நினைப்பதே உலகத்தாருடைய பெருங்குற்றம். மரணத்தைக் கண்டு பயந்தேனுனல் நானும் அந்தப் பெருங்குற்றத்திற்கு உள்ளாவேன். மரணத்தை நாம் ஏன் துன்பமாகக் கருதவேண்டும்? மரணுந்தரம் ஆத்மாவுக்கு என்ன நேரிடும் என்பதை நாம் அறியாதிருக்க, ஏன் அதை ஒரு பெரிய விபத்தாகத் தீர்மானித்துக்கொண்டு அதைக் கண்டு பயப்படவேண்டும்? ஆகையால் மகா ஜனங்களே! நான் மரணத்தை ஒரு பெருந் துன்பமாக நினைக்கவில்லை. மரணத்தைக் கண்டு பயப்படுவது அஞ்ஞானம். இறந்தபின் நான் எவ்விதமிருப்பேனே, அது எனக்குத் தெரியாது. ஆகையால் மரணத்தைக் கண்டு பயந்து நான் ஒரு காரியத்தைத் தொடரவும் மாட்டேன்; விடவும் மாட்டேன்; குற்றம் என்று நான் அறிந்ததை ஒருகாலும் செய்யவும் மாட்டேன்; செய்யவேண்டிய கருமத்தை மரண பயத்தினுல் செய்யாமலிருக்கவும் மாட்டேன்.

என்னை விடுதலை செய்துவிட்டால் என்மீது விசாரணை தொடர்ந்தது குற்றமாகும் என்றும், எனக்கு மரண தண்டனை விதியாமல் விட்டுவிட்டால் உங்களுடைய குழந்தைகள் எல்லாம் என் குதர்க்கங்களைப் பின் தொடர்ந்து சுத்தமாய்க் கெட்டுப்போவார்களென்றும், ஆகையால் எனக்கு மரண தண்டனை விதித்தே தீரவேண்டும் என்றும் அநீதன் சொன்

றனே; ஒருவேளை நீங்கள் அதை ஒப்புக்கொள்ளா மல், "இந்தத் தடவை உன்னை மன்னித்திருக்கிறேம்; உனக்கு மரணம் விதிக்கவில்லை; நீ உயிருடன் போக லாம்; ஆனல் நீ இனிமேல் இந்தக் காரியத்தை விட்டு விடவேண்டும்; இனிமேல் உங்கள் ஜனங்களைச் சோதனை செய்வதை விட்டுவிடு; மறுபடியும் இந்தக் காரியத்தில் நீ புகுந்தாயானல் மரணத்தை அடை வாய்" என்று எனக்கு உத்தரவிட்டீர்களானல், நான் வணக்கத்துடன் சொல்லிக் கொள்வதாவது: ஆதென்ஸ் மகா நகரப் பிரஜைகளே! உங்களிடம் எனக்கு அன்பு குறையவில்லை. ஆனல் எனக்கு நீங்கள் இடும் ஆணையைவிடக் கடவுள் இட்ட ஆணை பெரிது. எனக்கு உயிரும் சக்தியுமிருக்கும் வரையில் நான் மெய்யறிவைத் தேடுவதில் வாழ்நாளைக் கழிப்பேன். நான் கண்ட ஒவ்வொருவனையும், "ஐயா, நண்பனே, ஆதென்ஸ் நகரம் மகா கீர்த்தி வாய்ந்த நகரம்; அறி வில் புகழ்பெற்ற நகரம். இந்த மகா நகரத்தையுடைய வர்களில் ஒருவனகிய நீ, ஏன் நிலையில்லாத செல்வம், பெயர், மரியாதை இவைகளுக்கு ஆசைப்பட்டு வீணே வாழ்நாளைக் கழிக்கிறுய்? ஞானத்தையும் உண்மை யையும் அடைய முயலமாட்டாயோ? உன் ஆத்மா வைப் பரிபக்குவப்படுத்திக் கொள்ளமாட்டாயோ?" என்று கேட்டுக்கொண்டேயிருப்பேன். "இல்லை, நீ சொல்வது சரியல்ல. ஞானமும் உண்மையும் எனக் குத் தேவையில்லை போ" என்று அவன் எனக்கு மறு மொழி சொல்லிவிட்டால் அவனை அதனுடன் விட்டு விடமாட்டேன். அவனைக் கேள்விகள் கேட்டும்

சோதித்தும், "ஐயோ! அரும்பெரும் பொருளை அலட்சியஞ்செய்து உபயோகமற்ற பொருள்களின் மேல் ஆசையைச்செலுத்திக் காலத்தைக் கழிக்கிறுயே" என்று அவனைக் கண்டிப்பேன். சிறுவனுனாலுஞ் சரி, வயது முதிர்ந்தவனுனாலுஞ் சரி, எவனையும் இம்மாதிரி சோதித்துக் கண்டிப்பேன். என் நகரத்தைச் சேர்ந்தவர்கள் எனக்கு மிகவும் அருமையானவர்களாகையால் அவர்களையே இப்படி அதிகம் சோதிப்பேன். இது கடவுள் எனக்கு இட்ட ஆணை என்று நீங்கள் அறிய வேண்டும். நான் கடவுளின் ஏவலைத் தலைமேற் கொண்டு என் வாழ்நாளெல்லாம் இம்மாதிரியாகக் கழிப்பதால் நமது நகரத்திற்கு நான் பெருந்தொண்டு செய்கிறேன் என்றே நினைக்கிறேன். நான் உங்களை என்ன செய்யச் சொல்லுகிறேன்: முதலில் ஆத்மாவைக் கவனியுங்கள்; அதைச் சுத்தப்படுத்திக்கொண்டு அதற்குப் பலம், பக்குவம் உண்டாக்கிக்கொண்டு பிறகு, உங்கள் தேகம் செல்வம் இவைகளைக் கவனியுங்கள்; செல்வத்திலிருந்து ஆத்மசுத்தியும் தர்மமும் உண்டாகா. ஆனுல் ஆத்மசுத்தியிலிருந்தும் தர்மத்திலிருந்துமே செல்வத்தையும் இன்பத்தையும் உலகம் அடையக்கூடிய எல்லாப் பொருளையும் அடையலாம். பழியையும் வறுமையையும் மரணத்தையும் கண்டு பயப்படாமல் நான் சதா இப்படிப் போதித்து வருவது ஒரு குற்றமானுல், நான் குற்றஞ் செய்தவனேயாவேன். ஆனுல் இதைத் தவிர நான் வேறு ஏதோ செய்கிறேன் என்று சொல்லுவது பொய்யாகும். ஆகையால் ஆதென்ஸ் மகா நகரத்தையுடையவர்களே! அநீதன்

சொல்படி எனக்கு மரண தண்டனை விதியுங்கள். அல்லது நான் சொல்வதை ஒப்புக்கொண்டு என்னை விடுதலை செய்யுங்கள். நான் இதுவரை செய்துவந்த கடவுள் தொண்டை விட்டுவிடும்படி சொல்லாதீர்கள். அதற்காகப் பதின்மடங்கு என் உயிரைக் கொடுக்கச் சித்தமாயிருக்கிறேன்.

என்னைக் கொல்வதனால் நீங்களாவது மெலேதஸாவது அநீதனாவது என் ஆத்மாவுக்குத் தினையளவு துன்பமும் செய்யமுடியாது. கடவுள் தர்மத்தில் நிற்பவனுக்கு எவ்விதத் துன்பமும் உண்டாகாது. எனக்கு மரணம் அல்லது தேசப் பிரஷ்டம் அல்லது குடிப்பிரஷ்டம் விதித்துவிட்டால் இவை பெரியதுன்பமாகுமென்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் அப்படியல்ல. இறத்தலை ஒரு பெரிய கஷ்டமாகவோ துன்பமாகவோ நான் கருதவில்லை; இவ்வளவு நேரம் நான் பேசினதும் என்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காகவல்ல. அநியாயமாய்க் கடவுள் உங்களுக்குக் கொடுத்த ஒரு பெரும் பொருளைத் தள்ளிவிட்டு அதர்மத்திலிறங்காதீர்கள்; உங்களுக்கே துன்பத்தையும் நஷ்டத்தையும் உண்டு பண்ணிக் கொள்ளாதீர்கள் என்றே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். என்னைக் கொன்றுவிட்டால் நான் உங்களுக்குச் செய்யும் தொண்டுசெய்ய வேறு யாரும் உங்களுக்கு எளிதில் கிடைக்கமாட்டார்கள். ஒரு பெரிய சிங்கம் தன் பலத்தை மறந்து தூங்கிக் கொண்டிருக்குங்கால், ஓர் ஈயானது அதைக் கடித்துத் தொந்தரவு பண்ணி எழுப்புவதுபோல், நான்

ஆதென்ஸ் மகாநகரத்தார், தங்கள் கடமைகளையும் உண்மைச் சக்தியையும் மறந்து உறங்கிக் கிடக்க அவர்களைத் தொந்தரவுசெய்து தட்டி எழுப்பி வந்தேன். ஈயை நசுக்குவதுபோல் என்னை நீங்கள் சுலபமாய் நசுக்கிவிட்டு, மயக்கமும் நித்திரையும் கெடாமல் இருந்து வரலாம். தூங்குகிறவனை எழுப்பினுல் கோபம் வருவது சகஜம். ஆனுல் உங்களை நான் அஞ்ஞானத்திலிருந்து தட்டி எழுப்புவது நன்மையா தீமையா என்று யோசித்தீர்களானுல் அவ்விதம் என்னை நசுக்கிவிடமாட்டீர்கள். இந்த ஈயை நீங்கள் நசுக்கிவிட்டால் கடவுள் உங்களை எழுப்ப வேறொரு ஈயை அனுப்புவாரோ இல்லையோ, அதைச் சொல்லுவது முடியாது. கடவுள் எனக்கு இந்த ஏவலிடாதிருந்தால், நான் என் குடும்பம் என் காரியம் எல்லாவற்றையும் இவ்வளவு வருஷங்களாகக் கவனியாமல், ஏன் உங்களுள் ஒவ்வொருவரிடமும் போய் "கெட்டுப் போகவேண்டாம், ஆத்மா பெரியது, தர்மம் பெரியது, நல்வழியில் இறங்கு, உண்மை ஞானத்தைத் தேடு" என்று மனஞ் சலியாமல் தகப்பனைப் போல், அண்ணன்மாதிரி அல்லும் பகலும் அலைந்து போதித்துவர வேண்டும்? இதனுல் எனக்கு எவ்விதப் பிரயோஜனமாவது இருந்தால் சுயநலத்தைக் கருதி இப்படிச் செய்தேன் என்று நினைக்கலாம். ஆனுல் என்மேல் எவ்வளவு குற்றம் சுமத்தப் பார்த்தாலும், சுயநலத்திற்காகவாவது ஓர் இலாபத்திற்காகவாவது இம்மாதிரி செய்துவந்தேன் என்று என் விரோதிகளும் சொல்லவில்லை.

மரணத்திற்குப் பயந்து நான் ஒருவித அக்கிரமமும் செய்யமாட்டேன் என்று நீங்கள் அறிந்துகொள்ள வெறும் பேச்சுகள் மாத்திரம் பேசாமல், நடந்த இரண்டு சமாசாரங்களை உங்களுக்கு எடுத்துக்காட்டு கிறேன். கேளுங்கள் : ஆர்கினுஸா யுத்தம் நடந்ததும் தளகர்த்தர்கள் பத்துப் பேர்களையும் விசாரணைக்குக் கொண்டு வந்தீர்களல்லவா ? அப்போது அந்தப் பத்து பேர்களையும் ஒன்று சேர்த்துக் குற்றம் சாட்டித் தண்டனை விதிப்பது நியாயத் தவறு என்று நான் நினைத்தேன். என் குலம் அந்த மாதத்தில் சபையில் அக்கிர குலமாய் நியமிக்கப்பட்டு, நான் அக்கிராசனத்தி லிருந்த நாளில் தளகர்த்தர்கள் பத்துப் பேரையும் ஒரே வாக்காகக் தண்டிக்கப் பிரேரணை செய்தபோது, நான் அது கூடாது என்று தீர்ப்புக் கொடுத்து உங்களுடைய அபிப்பிராயத்துக்கு விரோதமாய், பிடிவாதமாய், நின்றேனல்லவா ? நீங்கள் செய்தது நியாயத் தவறு என்று பின்னால் உங்களுக்கே தெரிந்தது. ஆனால் அப்போது மற்ற நாளில் அமைந்த அக்கிராசனர்கள் எல்லாம் உங்களோடு ஒத்து வந்ததும், எல்லாரும் என் மேல் மிகுந்த கோபங்கொண்டு என்னை அக்கிராசனப் பதவியிலிருந்து நீக்கிச் சிறைப்படுத்தவும் சித்தமாயிருந்தார்களாயினும் நான் அவைகளையெல்லாம் கவனியாமல் நியாயப்படி என் அபிப்பிராயத்தை வெளியிட்டேனல்லவா? அப்போது சிறையையாவது மரணத்தையாவது கண்டு நான் பயப்படவில்லை. பிறகு, குடியரசு போய், இராஜாங்கத்தைக் கவர்ந்து முப்பது பேர் என்னையும் இன்னும் நால்வரையும் கூப்பிட்டு

ஸ்வாமி நகரத்திலிருந்து லியான் என்பவரை அழைத்து வாருங்கள் என்று எங்களுக்கு உத்தரவிட்டார்கள். அவரைக் கொன்றுவிடுவதற்காக இந்த அக்கிரம ஏவலை யிட்டார்கள் என்பதை நான் அறிந்து, அக்கிரமத் திற்கு நான் பாத்தியப்படமாட்டேன் என்று சொல்லி முப்பதின்மருடைய கொடுங்கோலரசில் என் உயிரை இழக்கச் சித்தமாகி, அவர்களுடைய உத்தரவை மறுத்துவிட்டேன். மற்ற நால்வர் அக்கிரமத்திற்கு ஒப்புக்கொண்டு லியானை அழைத்து வந்தார்கள். சர்வ அதிகாரத்தையும் வகித்து மகாபலம் பொருந்திய அந்த முப்பது பேருடைய அதிகாரத்தையும் நான் பொருட் படுத்தாமல் அவர்கள் இட்ட அக்கிரம ஏவலைச் 'செய்ய மாட்டேன்' என்று மறுத்தேன். சீக்கிரத்தில் அவர் கள் அதிகாரம் குலைந்து மறுபடியும் குடியரசு ஏற் பட்டுவிட்டது. இல்லாதிருந்தால் என்னை அவர்கள் கொன்றே யிருப்பார்கள். இது உங்களுள் அநேக ருக்கு நேரில் தெரிந்த விஷயம்.

என்னை மன்னியுங்கள் என்றும் என் பக்கம் தீர்ப் புக் கொடுங்கள் என்றும் உங்களை நான் கெஞ்சிக் கேட் டுக் கொள்ளவில்லை. அப்படிக் கேட்டுக் கொள்வது ஆதென்ஸ் நகரத்தில் பிறந்தவனுக்குத் தகுதியன்று. நீங்கள் நியாயப்படித் தீர்ப்பு கொடுக்க வேண்டுமே ஒழிய தயை தாட்சண்யத்தினால் ஒரு தீர்ப்பு செய் யவே கூடாது. அப்படியிருக்க, நான் உங்களை ஏன் கெஞ்சிக் கேட்டுக்கொள்ள வேண்டும்? தர்மத்தி லிருந்து தவறாமல் இருக்கவேண்டுமென்று உங்களை

நான் கேட்டுக்கொள்ள வேண்டியிருக்க, என் குழந்தைகளையாவது என் குடும்பத்தையாவது குறித்து என்னை விடுதலை செய்யும்படி நான் உங்களைக் கேட்பது தவருகும். அப்படிக் கேட்டுக் கொண்டேனுல் நான் உங்களைச் சத்தியத்திலிருந்து வழுவும்படி ஏவினவனுவேன். அப்போது நான் தெய்வத்தில் நம்பிக்கையில்லாதவனுவேன்; நான் நாஸ்திகன் என்று நானே ஒப்புக்கொள்வதாகும். மகா நகரத்தார்களே! என்னை நாஸ்திகன் என்று சொல்லுவது சுத்த தவறு. என்னைக் குற்றஞ்சாட்டுகிறவர்களுக்குள்ள தெய்வ பக்தியைவிட எனக்குத் தெய்வ பக்தி மிகவுமுண்டு; அதிக திடமான பக்தியுடன் நான் கடவுளை நம்பியிருக்கிறேன். உங்களுக்கும் எனக்கும் நன்மையைத் தரும்படியான வழியைக் கடவுளறிவார். அதன்படி அவர் உங்களுக்குப் புத்தி கொடுத்து எவ்விதம் தீர்ப்புச் செய்யும்படி ஏவுகிருரோ அவ்விதம் செய்வீர்களாக.

[சபையாரில் 281 பேர் ஸோக்ரதர் குற்றவாளியென்றும் 220 பேர் குற்றவாளி யல்லவென்றும் வாக்குக் கொடுத்தனர். இதற்குப் பிறகு குற்றவாளியென்று தீர்ப்புக் கொடுக்கப்பட்டவனுக்கு என்ன தண்டனை விதிக்க வேண்டியது என்பதைப் பற்றி வாதியும் குற்றவாளியும் பேச வேண்டிய முறை.]

ஸோக்ரதருக்கு மரண தண்டனை விதிக்கவேண்டும் என்று வாதி பேசினுன். பிறகு ஸோக்ரதரும் அது விஷயமாகப் பேசுகிருர்.

## ஸோக்ரதர் பிரசங்கம்—II

ஆதன்ஸ் மகா நகரத்தார்களே! நீங்கள் கொடுத்த தீர்ப்பைக்கண்டு நான் ஆயாசப்படவில்லை. என்னைக் குற்றவாளி யென்றே சொல்வீர்கள் என்று எனக்கு முன்னமே தெரியும். இதைக் கண்டு நான் ஆச்சரியப் படவில்லை. ஆனால் இவ்வளவு குறைந்த வாக்குக்களே என்னைக் குற்றவாளி யாக்கினவே யென்றுமட்டுஞ் சிறிது வியப்படைந்தேன். முப்பது வாக்குகள் மாத்திரம் மறுபக்கம் திரும்பியிருந்தால் தீர்ப்பு மாறியேயிருக்கு மல்லவா? இது நிற்க, எனக்கு மரண தண்டனையே விதிக்கவேண்டும் என்று வாதிக்கப்பட்டது சரியே. வேறு தண்டனையைப் பிரரேபிக்கும்படி என்னைக் கேட்கிறீர்கள். வேறு என்ன தண்டனையை நான் ஒப்புக்கொள்ளக்கூடும்? நான் செய்த காரியத்திற்குத் தகுதியான கைம்மாருகவல்லவோ தண்டனை இருக்க வேண்டும்? நான் சுகமாய் இல்லற சுகங்களனுபவித்துக் கொண்டிருக்கச் சம்மதியாமல், ஜனங்கள் பெரிதாக மதிக்கும் செல்வம், குடும்ப வாழ்வு, சேனையிலும் இராஜாங்கத்திலும் அதிகாரம் பொருந்திய பெரிய பதவிகள், மேடைகள் ஏறிப் பிரசங்கங்கள் செய்து குடியரசில் செல்வாக்கு அடைவது, நகரத்துக் கட்சிகளில் முதன்மையடைவது - இவைகளையெல்லாம் மதியாமல் துறந்தேன். இவைகளில் நான் மனமும் முயற்சியும் செலுத்தியிருந்தேனுனல் என் ஆத்மாவுக்குப் பயனுமில்லாமல் உங்களுக்கும் நான் எவ்வித நன்மையுஞ் செய்யாமல் போயிருப்பேன். ஆகையால் பெரிய

பதவியையும் செல்வத்தையும் விரும்பாமல் உங்கள் ஒவ்வொருவரிடமும் போய் ஒவ்வொருவருக்கும் ஞான முண்டாக்குவதற்காகப் பாடுபட்டேன். ஞானமே பெரும் பொருளாகையால் ஒவ்வொருவருக்கும் இவ் விதம் அரும்பெரும் நன்மையைச் செய்யப் பாடுபட்ட ஒருவனுக்கு நியாயப்படி என்ன தண்டனை விதிக்க லாம்? "உன் பொருளையும் உன் அலுவல்களையும்பற்றி நீ கவலைப்படுவதற்குமுன் உன் ஆத்மாவைப் பற்றிக் கொஞ்சம் கவலை செலுத்து" என்று ஒவ்வொருவனுக் கும் சொன்னேன். இம்மாதிரியான குற்றம் செய்கிறவ னுக்கு நீங்கள் கொடுக்கத்தக்க தண்டனை என்னவென் றால்: அப்படியே இன்னும் செய்துவர அனுகூல மாய், போதுமான சாவகாசத்தோடு, பசியும் பிணியு மில்லாமல் ஜீவனம் நடத்த அவனுக்கு இராஜாங்கத் திலேயே ஒரு மானியம் கொடுப்பதுதான். தேரோட் டத்திலும் குதிரையோட்டத்திலும் வென்றவர்களுக்கு இம்மாதிரி மானியம் தந்து வெகுமதி செய்கிறீர்கள். அதைவிட இம்மாதிரி உங்களுடைய உண்மை நன்மைக் காகப் பாடுபட்ட ஏழைக்கு இந்த ஏற்பாடு செய்ய வேண்டியதுதான் தர்மம். இந்தத் தண்டனையையே நான் பிரேரணை செய்கிறேன்.

இம்மாதிரி நான் சொல்லுவதால் நான் கர்வங் கொண்டு பேசுவதாக நீங்கள் நினைக்கலாம். ஆதன்ஸ் மகா நகரத்தார்களே! அப்படியல்ல. நான் தெரிந்து எவனுக்கும் ஒரு தீங்கும் செய்யவில்லை. அப்படி யிருக்க நான் வேறு எவ்விதம் பேசமுடியும்? என் மன

துக்குள் நான் நிரபராதியென்று விளங்கி யிருக்கிற படி உங்களுக்கும் விளங்காமலிருப்பதற்குக் காரணம், பிரமாணங்களை எடுத்துக் காட்டப் போதுமான அவ காசமில்லாமையே. சில இராஜ்ஜியங்களில் மரண தண்டனை வழக்குகள் ஒரே நாளில் முடிவுபெறக் கூடாதென்று விதித்திருக்கிறார்கள். நமது நகரத் திலும் அவ்விதியிருந்தால் ஒரு வேளை நான் குற்றம் செய்யவில்லையென்று உங்களுக்குத் திருப்திபட நிரூ பித்திருக்கக்கூடும்.

நமக்கிருந்த சிறு காலத்தில் என் பகைவர்கள் என் மேல் சூட்டிவந்த பெரும் பழிகளை நீக்கிக்கொள்ளச் சாவகாசப்படவில்லை. ஆனாலும் என் மனச்சாட்சிப்படி நான் யாதொரு குற்றமும் செய்யாதிருக்க, எப்படி எனக்கே நான் ஒரு தண்டனையைச் சொல்ல முடியும்? மரணத்தைக் கண்டு நான் பயப்படவில்லை. இந்த உடலிலிருந்து என் உயிர் நீங்கிப்போவது எனக்கு இன் பத்தைத் தருமோ துன்பத்தைத் தருமோ என்பதை நான் அறியாமலிருக்க, அறியாத துன்பத்திற்குப் பதி லாக அறிந்த துன்பம் ஒன்றை ஏன் இச்சித்து, மரணத் திற்குப் பதில் வேறு தண்டனை கொடுங்கள் என்று நான் கேட்கவேண்டும்? மரண தண்டனை வேண்டாமென் றால் சிறைச்சாலையிலிருக்கும் தண்டனைக்கு ஒப்புக் கொள்ளட்டுமா? ஏன் எனக்கினியுள்ள வாழ்நாட் களைச் சிறைச்சாலையில் வரும் ஒவ்வொரு அதிகாரியி னுடைய அடிமையாக இருந்து கழித்துப் பிழைத் திருக்க வேண்டும்? இது மரணத்தைவிட நலம் என்று

எப்படிக் கருதக்கூடும்? அபராதம் விதியுங்கள் என்ருல் தகுந்த அபராதம் கொடுக்கக்கூடிய சக்தி எனக்கில்லே. சிறைச்சாலையில்தான் இருக்கவேண்டும். நகரத்தைவிட்டு அப்புறப்படுத்தி விடுங்கள் என்று சொல்லலாம்; அதற்கு நீங்களும் ஒப்பலாம். சகோதரர்களே! என் பிராணனை எப்படியாவது காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்ற ஆசை எனக்கு இல்லே. என் நகரத்தார்களாகிய உங்களுக்கே நான் பேசுவதும் சோதிப்பதும் சகிக்க முடியாமற்போனல் மற்ற ஊரார் அதைக் கேட்டுப் பொறுத்திருப்பார்களோ? என் கேள்விகளேயும் சோதனைகளேயும் நீங்கள் பொருமல் என்னே ஊரைவிட்டுப் போவென்று துரத்தினபின், இனி எனக்கிருக்கும் ஆயுள் நாட்களே ஊரூராயலேந்து கழிக்கக் கிழவனுகிய எனக்கு மனமொப்பவில்லே. எந்த ஊருக்குப் போனுலும் ஜனங்களே நான் இதே கேள்விகள் கேட்கவேண்டும்; இதே விதம் ஆத்ம சோதனே செய்யவேண்டும். உங்களுக்கு எப்படி அது வெறுப்பைத் தந்ததோ அப்படியே எல்லா ஊராருக்கும் அது வெறுப்பைத் தரும். இந்த உயிரைக் காப்பாற்றுவதற்காக ஏன் என் சொந்த நகரத்தைவிட்டுப் பிரஷ்டனுய் ஊரூராய் அலேய வேண்டும்?

வேறு தேசத்திற்குப் போய் இந்தமாதிரி ஆத்ம சோதனே செய்யாமல் சும்மா சுகமாயிருக்கலாமே என்று நீங்கள் சொல்லலாம். நான் சும்மாவிருக்க முடியாதென்று உங்களுக்குச் சொன்னல் நீங்கள்

நம்பமாட்டீர்கள். இதுவே என் துர்ப்பாக்கியம். கடவுள் ஏவலுக்கு விரோதமாய் நான் எப்படி நடக்க முடியும் என்று சொன்னால் வேடிக்கை பேசுகிறேன் என்று நினைக்கிறீர்கள். என்னை நம்பமாட்டீர்கள். தர்மத்தைப் பற்றியும் உண்மைக் கடமைகளைப் பற்றியும் பேசித் தானும் மற்றவர்களுடன் ஆத்ம ஞான மடைவதைவிட வேறு பிழைப்பு மனிதனுக்கு வேண்டியதில்லை. அவ்வாறு செய்ய அவகாசமில்லாவிட்டால் உயிரை விடுவது நலம் என்று நான் சொன்னால் அதையும் நம்பமாட்டீர்கள். இதற்கு நான் என்ன செய்ய முடியும்?

நான் பணக்காரனாயிருந்தால் என் ஆஸ்தியையே அபராதமாய்க் கொடுத்துவிட சந்தோஷமாய் இசைந்திருப்பேன். பொருளை இழப்பதனால் எனக்கு எவ்விதத் துன்பமும் உண்டாயிராது. ஆனால் நான் ஏழை. அபராதம் கொடுக்கச் சக்தியில்லை. என் சக்திக்குத் தகுந்த அபராதம் விதித்தால் கொடுக்கலாம். ஒரு 'மினா' அபராதமாகப் போடுவீர்களா? அவ்வளவு கொடுக்கமுடியும். இல்லை, இங்கிருக்கும் என் நண்பர்கள் முப்பது 'மினா' போடலாம் என்று சொல்லச் சொல்லுகிறார்கள். அவர்கள் அதற்கு உத்தரவாதமா யிருப்பார்கள்.

[ஒரு 'மினா' என்பது சுமார் அறுபது ரூபா மதிப்புள்ள கிரேக்கர் நாணயம்.]

[மரண தண்டனை விதிக்கப்படுகிறது.]

[மறுபடியும் ஸோக்ரதர் பேசுகிறார்.]

ஸோக்ர்தர் பிரசங்கம்—III

ஆதென்ஸ் மகா நகரத்தார்களே! எனக்கு நீங்கள் மரண தண்டனை விதித்தீர்கள். ஆனால் உங்களுக்கு இதனால் அதிக லாபம் கிடையாது. என்னை விட்டுத் தப்ப நீங்கள் எனக்கு மரண தண்டனை விதியாம லிருந்தாலும், சீக்கிரத்திலேயே என் ஆயுள் நாள் சுபாவமாகவே முடிந்து நான் இறக்கும் காலம் நெருங்கி யிருந்தது. ஆனால், நீங்கள் எனக்கு விதித்த அநியாய தண்டனையினால், உங்களுக்குத் தீராத பழி வந்து சேர்ந்தது. ஆதென்ஸ் நகரத்தை இகழவேண்டியவர் கள் எல்லாரும், 'ஸோக்ரதன் ஞானி, அவனை அநியாய மாய்க் கொன்றார்கள் ஆதன்ஸ் நகரத்தார்' என்று எந் நாளும் வசை கூறுவார்கள். நான் ஞானத்தை அடைந் தவனல்லாதிருந்தாலும் உங்களைப் பழிப்பதற்காகவே என்னை ஞானி என்றும், நீங்கள் என்னைக் கொலை செய்தீர்கள் என்றும் ஜனங்கள் சொல்லுவார்கள். சிலநாள் பொறுமையுட னிருந்தீர்களானால் நானாகவே காலங்கழித்து இறந்திருப்பேன். உங்களுக்கு என் தொந் தரவு நீங்கியிருக்கும். போதுமான காரணம் காட்டாத படியாலும் சரியானபடி வழக்கை நடத்தாதபடியாலும், நான் தண்டிக்கப்பட்டேன் என்று சிலர் நினைக்கக் கூடும். அப்படியல்ல. தகுதியற்ற வழியில் நான் பேச வில்லையென்கிற காரணத்தால் நான் தண்டனையடைந் தேன். அதற்காக வருத்தப்படக்கூடாது. அழுதும் கெஞ்சியும் வேறு சிலரைப்போல் தகாத காரியங்களைச் செய்திருந்தால் நான் தப்பியிருக்கலாம். ஆனால்

அவை எனக்குத் தகா என்று விலகி நின்றேன். மரணத்தைக் கண்டு பயந்து சத்புருஷனும் வீரனும் தகாத வகையில் உயிரைக் காப்பாற்ற வேண்டியதில்லை. யுத்தகளத்தில் எப்படியோ அப்படியே நியாயஸ்தலத்திலும் நடந்து கொள்ள வேண்டியது. எதிரியால் தாக்கப்பட்டு வருந்தும் காலத்தில் ஆயுதத்தைக் கீழே போட்டுப் பகைவன் காலில் விழுந்து உயிரைக் கொடு என்று கெஞ்சிக் கேட்டால் போர்க்களத்திலிருந்து உயிருடன் தப்பி வரலாம். அது எப்படி மனிதனுக்குத் தகாதோ அப்படியே, மானத்தையும் தைரியத்தையும் தர்மத்தையும் விட்டால் மற்ற எல்லா அபாயங்களிலிருந்தும் தப்பிப் பிழைக்கலாம். ஆனால் அது தகாது. மரணத்தைக் கண்டு அஞ்சவேண்டியதில்லை. அதர்மமே மனிதனுக்கு ஆபத்து. நான் மரணத்தை இன்று நாளையென்று எதிர்பார்த்தேயிருந்தேன். முதுமையில் அது கொஞ்சம் முன்னதாக என்னை வந்து சேர்ந்தது. ஆனால் என் மேல் பகை கொண்டு என்னை நியாயஸ்தலத்திற்கு இழுத்து எனக்கு மரணம் விதிக்கச் செய்தவர்களை அதர்மமானது வலிய வந்து பிடித்துக் கொண்டது. அவர்களுக்கு நேரிட்டது பெருந்துன்பமேயொழிய, எனக்கு நேரிட்டது ஒரு பெருந்துன்பமாகாது. எனக்கு விதித்த மரண தண்டனையை அடைய நான் செல்கிறேன். அவர்களும், அதர்மமும் பாவமும் செய்தவர்களாகி, அவைகளின் தண்டனையைத் தப்பாமல் அடையப் போகிறார்கள். கடவுளின் ஆஞ்ஞையால் இப்படி நடந்ததில் எவ்விதத் தவறுமில்லை; இது நன்மையே பயக்கும் என்பது நிச்சயம்.

மகா நகரத்தார்களே! மரணத்தை எதிர்கொண்டு செல்பவனுகிய நான், உங்களுக்குச் சொல்லுகிறேன், கேளுங்கள்: நான் இறந்தவுடன் நீங்கள் எனக்குக் கொடுத்த தண்டனையைக் காட்டிலும் பதின்மடங்கு கடுமையான தண்டனையை அனுபவிப்பீர்கள். நீங்கள் ஆத்ம தருமத்தை மறந்து வாழ்நாளைக் கழித்து வருவதை நான் சோதிக்கிறேன் என்று என்மேல் வெறுப்புற்றல்லவா என்னை விட்டுத் தப்புவதற்காக எனக்கு மரண தண்டனை விதித்தீர்கள்? ஆனல் அவ்வளவு எளிதில் சோதனையிலிருந்து நீங்கள் தப்ப முடியாது. நான் இருந்த வரையில் முன் வராத அனேகர், எனக்குப் பின் நான் செய்த சோதனையை விட மிகக் கடினமான சோதனைக்கு உங்களை உள்ளாக்குவார்கள். அவர்கள் இப்போது வாலிபர்களா யிருக்கிருர்கள். அவர்களுடன் நீங்கள் போராடி வெல்ல முடியாது. ஒழுக்கங் கெட்டு வாழும் ஜனங்கள் அறிவுள்ளவர்களுடைய பழியிலிருந்து தப்புவ தற்கு வழி, அறிவுள்ளவர்களைக் கொல்வதல்ல. தர்ம மார்க்கத்தை யறிந்து நல்வழியில் செல்வதே தக்க வழியாகும்.

என்மேல் குற்றம் இல்லை யென்று வாக்களித்த வர்களாகிய உங்களுக்கும் சில வார்த்தை சொல்ல வேண்டுகிறேன். எனக்கு நேர்கிற மரணம் என் நன் மைக்காகவே யிருக்கவேண்டும் என்று நான் பூரண மாய் நம்பியிருக்கிறேன். ஏனென்ருல் எனக்கு எப் போதும் தெய்வவாக்கு ஒன்று, நான் செய்யக்கூடாத காரியத்தில் பிரவேசிக்கும் காலத்திலெல்லாம் 'வேண்

டாம்' என்று எச்சரிக்கை செய்வதுண்டு. என் மனத்துள் அந்தர்யாமியாய் நின்று ஆண்டவன் எனக்குச் சொல்லும் அந்த வாக்கு ஒருபோதும் தவறினது கிடையாது. இதுவரையில் சிறியதும் பெரியதுமான எல்லா விஷயங்களிலும் அது எனக்குத் துணையாய் நின்று என்னைக் காப்பாற்றி வந்தது. இன்று காலை நியாய ஸ்தலத்திற்கு வந்த போதோ நான் உங்கள் முன்னிலையில் பேசும் போதோ என்னை அது தடுக்கவேயில்லை. அனேக காலங்களில் நான் பேச்சுத் தவறி ஒரு சொல் சொல்லப் போகும் சமயத்திலும் அது என்னை 'வேண்டாம்' என்று தடுத்திருக்கிறது. ஆனால் இந்த விஷயத்தில் நான் சொன்னதிலும் செய்ததிலும் எதிலும் அது என்னைத் தடுக்கவில்லை. இதனால் நான் அறிவது என்னவென்றால், இம்மரணம் எனக்குப் பெரிய நன்மையே என்று ஆண்டவன் எனக்குக் காட்டுகிறார் என்பதே. ஜனங்கள் நினைக்கிறபடி மரணம் உண்மையில் ஒரு பெருந்துன்பமாயிருந்திருந்தால் என்னுள் நிற்கும் தெய்வமானது என்னை 'வேண்டாம்' என்று தடுத்திருக்கும். வேறு வழியிலும் யோசித்துப் பாருங்கள். ஏன் மரணத்தைத் துன்பமாய்க் கருதவேண்டும்? ஒருவன் இறந்தால் இரண்டில் ஒன்று ஆகவேண்டும். ஆத்மாவும் உடலுடன் அழிந்து போய் அறிவு இன்பம் துக்கம் ஒன்றுமில்லாமல் நாஸ்தியாய்ப் போக வேண்டும். இப்படியாயின் மரணத்தை ஏன் வெறுக்க வேண்டும்? இல்லையானால் சநாதனமாய் நாம் நம்பி வந்தபடி மரணம் வாய்த்த காலத்தில் ஆத்மாவானது வேறு உலகத்திற்குச் செல்லும். இதுவரையில்

இறந்த பெரியோர்கள் எல்லாரும் இருக்குமிடத்திற்கு நாம் போவதானால் அதை ஏன் வெறுக்கவேண்டும்? நம்முன்னோர்களை யெல்லாம் நேரில் நாம் காண்பதும் பேசுவதும் என்ன பெரும்பாக்கியம்! இதை அளிக்கும் மரணத்தை ஏன் நாம் ஒரு துன்பமாக எண்ணவேண்டும்? நமக்கு முன் இறந்த பெரியோர்களோடு கூடிப் பேசி ஞானத்தைப் பெருக்கிக் கொள்ளுவது ஒரு பெரிய நன்மையாகவே நான் கொள்கிறேன்.

என் நண்பர்களே! உங்களுக்கு மரணம் நேர்ந்த காலத்தில் நீங்களும் தைரியமாயிருங்கள். நல்லவனுக்கு ஒருபோதும் தீங்கு நேரிடாது என்று திடமாய் நம்புங்கள். தர்ம வழியில் நின்றவனுக்கு இம்மையிலாவது மறுமையிலாவது ஒரு துன்பமும் வராமல் கடவுள் பாதுகாப்பார். இப்போது உலகத்திலிருந்து நான் விடுதலையடைவது எனக்கு நன்மையென்று கருதியே கடவுள் எனக்கு மரணத்தைக் கொடுக்கிறார். ஆகையால் என்மேல் பழிசாட்டினவர்கள்மேலாவது எனக்குத் தண்டனை விதித்தவர்கள்மேலாவது எனக்குக் கோபமில்லை. அவர்கள் நன்மை நாடி மரணதண்டனை விதிக்கவில்லை, தீமை கருதியே அத்தண்டனை விதித்தார்கள் என்று அவர்கள் மேல் நான் குற்றம் சொல்லலாமேயொழிய, அவர்கள்மேல் எனக்கு எவ்வித வருத்தமுமில்லை. ஒன்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்: என் பிள்ளைகள் வளர்ந்து வயது முதிர்ந்தவர்களான காலத்தில், அவர்கள், பொருளையாவது அல்லது வேறு எதையாவது தர்மத்தை விடப் பெரிதாக நினைத்

தார்களானால் அவர்களை விடாதீர்கள். நான் உங்களை எப்படி விடாமல் சோதனை செய்து வந்தேனோ அப்படி அவர்களையும் தொந்தரவு செய்து தண்டனையும் விதி யுங்கள். என் மக்கள் அறியாமையில் மூழ்கியிருப்ப தைத் தெரிந்து கொள்ளாமல், அறிவுடையவர்கள் என்று தங்களை நினைத்துக் கொண்டாலும், அல்லது கேவலம் பயனற்ற வாழ்வை நடத்தித் தாங்கள் மேன்மை பெற்ற பெரியோர்களாகத் தங்களை எண் ணிக் கர்வமடைந்தாலும், நான் மற்றவர்களை இரக்க மின்றித் தூற்றினமாதிரி நீங்களும் அவர்களைத் தூற் றுங்கள். இப்படி நீங்கள் செய்வீர்களாயின் எனக்கும் என் மக்களுக்கும் நன்றி செய்தவர்களாவீர்கள்.

காலமதிகமாகிவிட்டது. நீங்கள் இன்னும் சில நாள் உயிருடன் இருக்கவும் நான் இப்போதே உங் களைவிட்டு நீங்கவும் ஆண்டவன் திருவருள் பாலிக்கும் பாக்கியம் உங்களுடையதா என்னுடையதா என்பது கடவுளுக்கே தெரியும். விடை கொடுங்கள்.

[ஸோக்ரத மகரிஷியின் நியாயஸ்தலப் பிரசங்கம் முடிந்தது]

## க்ருதருடன் சோக்ரத மகரிஷி

### சிறைச்சாலையில் செய்த சம்பாஷணை

[வருஷம் ஒருமுறை ஆதன்ஸ் நகரத்தார் கிரே தத் தீவிலுள்ள அனங்கன் கோயிலில் அர்ச்சனை செய்

யச் சாமக்கிரியைகள் வைத்து ஒரு கப்பல் அனுப்புவது வழக்கம். இம்மாதிரி ஆதன்ஸிலிருந்து கப்பல் புறப்பட்டது முதல் அது திரும்பி வரும் வரையில் நகரத்திற்குச் சில நியமங்களுண்டு. அந்த நோன்புக் காலத்தில் மரணதண்டனையை நிறைவேற்றி உயிரை மாய்க்கக்கூடாது என்பது ஒரு விதி. ஸோக்ரதருக்கு விதித்த மரணதண்டனை அந்த விரத காலத்தில் நேர்ந்தபடியால் அதை நிறைவேற்ற ஒருமாத காலம் தாமதமாயிற்று. இந்த ஒருமாத காலம் ஸோக்ரதர் சிறைச்சாலையில் இருக்க நேர்ந்தது. அங்கே அவருடைய நண்பர்கள் அடிக்கடி அவரைப் பார்த்து வந்தார்கள். அச்சமயங்களில் நடந்த சம்பாஷணைகளில இது ஒன்று.]

ஸோக்ரதர் : க்ருதரே ! இதென்ன இந்நேரத்தில் வந்தீர் ? நாழிகை என்ன இப்போது ?

க்ருதர் : ஆம் ; அதிக சீக்கிரமே வந்தேன். இப்போது உதயம் ஆகப்போகிறது.

ஸோ : இவ்வளவு சீக்கிரம் காவற்காரர் உம்மை உள்ளே விட்டது அதிசயம் !

க்ரு : அவர் எனக்கு இப்போது அதிக பழக்கமாய் விட்டாரல்லவா ! அடிக்கடி வந்திருப்பதனாலும் அவருக்கு நான் செய்த ஓர் உபகாரத்தை நினைந்தும் அவர் என்னைத் தடுக்கிறதில்லை.

ஸோ : நீர் வந்து அதிக நேரமாயிற்று ?

க்ரு : ஆம், முன்னமேயே வந்தேன்.



ROJA MUTHIAH
KOTTAIYUR-623 106
TAMILNADU INDIA

ஸோ : ஆனால் ஏன் என்னை எழுப்பவில்லை, சும்மா பேசாமல் உட்கார்ந்தீர் ?

க்ரி : ஸோக்ரதரே ! எனக்குத்தான் துக்கம் மேலிட்டு நித்திரை பிடிக்கவில்லை ; உம்மைப் பார்த்தால் எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது. கவலையில்லாமல் சுகமாய்த் தூங்குகிறீர். அதைப் பார்த்து உம்மை எழுப்ப எனக்கு மனம் வராமல் சும்மாவிருந்தேன். எப்போதுமே உம்முடைய மனோநிலை சுக துக்கங்களால் அசைவற்று ஒரே வழியிருந்ததை அறிவேன். ஆனால் இப்போது இவ்வளவு பெரிய துயரத்தினிடையில் சாந்தமாயும் சுலபமாயும் நீர் எல்லாவற்றையும் பொறுத்திருப்பதைப் பார்த்து நான் என்ன சொல்வேன் !

ஸோ : இதென்ன நீர் சொல்லுவது? இந்த வயதில் எனக்கு மரணம் வந்ததுபற்றி நான் மனங்கலங்கினால் சிரிப்பாயிராதா ?

க்ரி : உம்மைப் போன்ற வயோதிகர்களும் இவ்வித சந்தர்ப்பங்களில் மன நிலை தவறித் தங்களுக்கு வந்த விதியைப் பொறாமல் வருத்தப்படுவதைப் பார்த்திருக்கிறோமே.

ஸோ : உண்மை தான். இப்போது நீர் இவ்வளவு சீக்கிரம் காலையில் வந்த சந்தர்ப்பம் என்ன ?

க்ரி : கெட்ட சமாசாரம் கொண்டு வந்திருக்கிறேன். ஸோக்ரதரே ! அது உமக்கு ஒன்றும் கெட்ட சமாசாரம் அல்ல. ஆனால் எனக்கும் உம்முடைய நண்பர்கள் அனைவருக்கும் மட்டும் இதைப்போன்ற

துக்க சமாசாரம் கிடையாது. மற்றவரைவிட இது என்னால் பொறுக்க முடியவில்லை!

ஸோ: என்ன அது? கப்பல் திரும்பி வந்துவிட்டதா என்ன? என் தண்டனை நிறைவேற்றுங் காலம் வந்துவிட்டதென்று இப்படிச் சொல்லுகிறீரா?

க்ரு: கப்பல் இன்னும் வந்து விடவில்லை. ஆனால் இன்று வந்து சேரும் என்று நினைக்கிறேன். சூனியத் துறைமுகத்திலிருந்து வந்த சிலர், செய்தி கொண்டு வந்தார்கள். அவர்கள் சொன்னதில் கப்பல் இன்று நமது நகர் வந்து சேரும் என்று தெரியவருகிறது. ஸோக்ரதரே! நாளை உமது ஆயுள் முடியுமே, நாம் எப்படிப் பொறுப்பது?

ஸோ: க்ருதரே! ஆண்டவன் கட்டளை நிறைவேறட்டும். ஆனால் கப்பல் இன்று வராது; நாளையே வரும் என்று நினைக்கிறேன்.

க்ரு: ஏன் அப்படி நினைக்கிறீர்?

ஸோ: கப்பல் வந்து மறுநாளே நான் உயிரிழக்க வேண்டியது?

க்ரு: ஆம்; அதுவே அதிகாரிகளுடைய ஏற்பாடு.

ஸோ: அப்படியானால் கப்பல் நாளையே வரும் என்று நினைக்கிறேன். நான் கண்ட ஒரு கனவினால் அப்படி நினைக்கிறேன். நீர் வந்து என்னை எழுப்பாமலிருந்தீரே அப்போது தான் அந்தக் கனவைக் கண்டேன். எழுப்பாததும் நல்லதே.

க்ரு: என்ன கனவு? எனக்குச் சொல்லுவீரா?

ஸோ: விலக்ஷணமுள்ள ஒரு ஸ்திரீ ரூபம், மங்கள உடுப்புத தரித்து என்னைக் கூப்பிட்டு இன்றைக்கு மூன்றுவது நாள் நீர் அழகிய சுவர்க்கத்துக்கு வருவீரல்லவா என்று சொன்னதுபோலக் கனவு கண்டேன். இதன் பொருள் கப்பல் நாளை வரும் என்று கண்டு கொண்டேன்.

க்ரி: ஐயோ, உமது கனவின் பொருள் மிகத் தெளிவாகவேயிருக்கிறது. ஓ ஸோக்ரதரே! என் பிரியமானவரே!! மறுபடியும் நான் உம்மை வருந்திக் கேட்டுக் கொள்ளுகிறேன். என் பேச்சைக் கேளும். உயிர் தப்பித்துக் கொள்ளலாம். நீர் இறந்தால் என் துக்கத்தை நான் எப்படிச் சகிப்பேன்? உமக்குப் பின் உம்மைப்போல் வேறொரு நண்பரை நான் காண்பேனோ? என்னையும் உம்மையும் நன்ருய் அறியாதவர்கள் என்ன சொல்லுவார்கள்? நான் இஷ்டப்பட்டிருந்தால் பணச் செலவு செய்து உம்மைச் சிறையிலிருந்து தப்பவைத்திருக்கலாம். அப்படிச் செய்யாமல் நான் லோபம் செய்தேன் என்று என்மேல் பழியும் சொல்லுவார்கள். ஒருவன் தன் அன்பிற்குரிய நண்பரைவிடப் பணத்தைப் பெரிதாய்க் கருதினன் என்று ஜனங்கள் சொல்வதினும் வேறு ஒரு அவமானமும் பெரிய பழியும் மனிதனுக்குக் கிடையா. சிறையிலிருந்து போகமாட்டேன் என்று நீர் பிடிவாதம் செய்தீர் என்று உலகம் நம்பவே மாட்டாது; நாங்கள் பிரயத்தனம் செய்யவில்லை என்றே ஜனங்கள் நினைப்பார்கள்.

ஸோ: என் அன்புள்ள க்ருதரே! ஏன் இப்படிப் பேசுகிறீர்? நாம் பாமரர்களுடைய சொல்லைக் கண்டு ஏன் கவலைப்பட வேண்டும்? சான்றோருடைய சொல்லையே நாம் கவனிக்க வேண்டும்; அவர்கள் என்ன நினைப்பார்கள் என்றே நாம் யோசிக்க வேண்டும். அவர்கள் உண்மையை அறிவார்களல்லவா?

க்ரு: அப்படியில்லை, ஸோக்ரதரே! உலக வாழ்க்கையையும் நாம் கவனிக்க வேண்டும், இப்போது உமக்கு நேர்ந்த விபத்தையே பாரும். உலக வாக்கால் என்ன பெரிய துன்பம் வந்தது பாரும். பொய்ப் பழி சுமத்திப் பாமர ஜனங்களின் தப்பான அபிப்பிராயத்தாலன்றோ நீர் கெட்டீர்?

ஸோ: க்ருதரே! அப்படியல்ல. அவர்களால் பெருந் துன்பமும் உண்டாகாது, பெரு நன்மையும் உண்டாகாது. உண்மையாவது அறிவாவது அறிவின்மையாவது உலகத்தாருடைய வாக்கால் மாறுபடாது.

க்ரு: அப்படியேயிருக்கலாம். ஸோக்ரதரே! என்னைக் கேளும், என்னைப்பற்றியாவது நமது மற்ற நண்பர்களைப் பற்றியாவது நீர் கவலைப்பட வேண்டாம். நீர் சிறையிலிருந்து தப்பியோடினால் எங்கள்மேல் குற்றம் வரும்; உம்மைத் தப்புவித்த குற்றத்திற்காக எங்களுக்குத் திரவியச் செலவு நேரும்; சொத்து முழுதும் பறிமுதலாகலாம்; தவிர வேறு தண்டனைகளுக்கும் நாங்கள் உள்ளாவோம் என்று இம்மாதிரி நீர் பயப்படுகிறீரா? சொல்லும்! அவ்விதக் கவலை உமக்கு வேண்

டாம். இவ்வித கஷ்ட நஷ்டங்களைக் கண்டு நாங்கள் பின்வாங்கக்கூடாது. உம்மை உயிர் தப்புவிப்பது எங்கள் கடமை. அதற்கு இவ்வித அபாயங்களை நாங்கள் பொருட்படுத்தக்கூடாது. நான் சொல்வதை மறுக்க வேண்டாம். வருந்திக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஸோ: நீர் சொன்ன ஆக்ஷேபணையும் உண்டு; இன்னும் அனேக விஷயங்களுமிருக்கின்றன.

க்ரி: அவைகளைப்பற்றி யோசிக்கவே வேண்டாம். எங்களுக்கு ஆட்கள் இருக்கிறார்கள். அதிகப் பணச் செலவில்லாமலே அவர்கள் உம்மைச் சிறையிலிருந்து மீட்கத் தயாராயிருக்கிறார்கள். இதற்காக அதிகப் பணச் செலவு வேண்டியதில்லை. என் ஆஸ்தியெல்லாம் உம் விஷயத்தில் செலவுசெய்ய நான் மனமுள்ளவனாயிருப்பது போதாதா? என் பணத்தை உபயோகிக்கக் கூடாது என்று நீர் ஒரு வேளை எண்ணினால், இன்னும் நமக்கு வேண்டியவர்கள், வேறு நகரங்களிலிருந்து வந்திருப்பவர்கள், ஆதென்ஸிலிருக்கிறார்கள். அவர்கள் உமக்குத் தெரியுமே! அவர்கள் தங்கள் பணத்தைச் செலவு செய்யத் தயாராயிருக்கிறார்கள். ஸிம்மியஸ் பிரபு இதற்காக வேண்டிய பொருளுடன் தயாராய் வந்திருக்கிறார். இன்னும் ஸீபிஸ் பிரபுவும் வேறு பலரும் அப்படியே சித்தமா யிருக்கிறார்கள். ஆனபடியால் இவ்வித சந்தேகங்களினால் பின்னடையாதீர். உயிரைக் காப்பாற்றிக்கொள்ளவும் நமது நகரத்தை விட்டு அயல் தேசங்களுக்குச் சென்று என்ன விதமாய்க் காலம் கழிப்பது என்று நியாய ஸ்தலத்தில்

சொன்னீரே, அதை ஓர் ஆக்ஷேபணையாக நினைக்க வேண்டாம். நீர் போனால் எதிர்கொண்டு நல்வரவு சொல்ல அனேக ஊர்கள் இருக்கின்றன. தெஸ்ஸலி இராஜ்யத்திற்கு நீர் சென்றால் அவ்விடம் எனக்கு நண்பர்கள் இருக்கிறார்கள். அவர்கள் உமக்கு வேண்டுவன செய்து யாதொரு இடையூறும் உமக்கு வராமல் பார்த்துக்கொள்ளக் கூடியவர்கள்.

தவிர, ஸோக்ரதரே! நீர் உயிரை வீணே மாய்த்துக் கொண்டீராஞல், அது பெரும்பாவமாகும். உமது பகைவர்களுடன் நீரும் சேர்ந்துகொண்டு அவர்கள் எண்ணத்தை நிறைவேற்றுவது நியாயமல்ல. உம்முடைய குழந்தைகளை அனாதைகளாய் விட்டுவிடலாமா? நீர் செய்யவேண்டிய கடமைகளைச் செய்யாமல், அவர்களுக்குக் கல்வி பயிற்றுவியாமல் அவர்களை இவ்விதம் விட்டுவிட்டு இறப்பது தகுதியன்று. அனாதைக் குழந்தைகளின் கதியையே அவர்கள் அடைவார்கள். சரியாய் வளர்த்து வித்தை கொடாமல் போனால் குழந்தைகளைப் பெற்றே யிருக்கக்கூடாது. தர்மத்தை வாழ்நாள் முழுதும் போதித்த நீர் அதை மறந்து விட்டீர்போலும்! தைரியத்தையும் தர்மத்தையும் விட்டுவிட்டு முயற்சியில்லாமல் உயிரை விடுவது பாவமாகும். அப்படித்தானிருக்கிறது நீர் செய்வது. உம் மீதும் உமது நண்பர்களாகிய எங்கள்மீதும் இது ஒரு பெரிய அபவாதமாகும். நாம் பயந்து முயற்சி செய்யாமலிருந்தபடியால் இம்மாதிரி யெல்லாம் நடந்தது என்றே நினைக்கவேண்டி வரும். நீர் நியாய

ஸ்தலத்திற்குப் போகாமலே தப்பி யிருக்கலாம்; போயும், வழக்கை வேறு விதமாகவாவது நடத்தி யிருக்கலாம். பிறகு இப்போதும் உயிர் தப்பித்துக் கொள்ள வழி தேடாமலிருப்பது எங்களுடைய முயற்சி யின்மையும் பயமுமே காரணம் என்று ஜனங்கள் நினைப்பார்கள். நாங்கள் ஜன்மமெடுத்தும் உமக்கு நண்பர்களாக இருந்தும் என்ன பயன்? இப்போது உம்மை உயிர் தப்புவிக்காமல் போனால், செய்யக் கூடிய காரியத்தைச் செய்யாமல் விட்டுவிட்டோம் என்கிற பழி எங்கள்மேல் நிற்கும். நீர் வீணே உயிர் மாய்ப்பது எங்களுக்கும் உமக்கும் மானக்குறைவாகும். ஆழ்ந்து யோசித்துப் பாரும். இனி யோசிப்பதற்கும் அவகாசம் கிடையாது. உடனே தீர்மானித்துச் செய்ய வேண்டிய சமயம் நெருங்கிவிட்டது. எல்லாம் இன் றிரவு செய்து முடிக்கவேண்டும். இனித் தாமதம் செய்தால் காரியம் கெட்டுப்போகும். ஐயோ! ஸோக்ர தரே! மறுக்கவேண்டாம்; நான் சொல்லுவதைத் தட்டவேண்டாம்.

ஸோ: என் பிரிய நண்பரே! நான் சொல்லு வதைக் கேளும். என் உயிரைத் தப்புவிக்க நீர் இவ் வளவு கவலைப்படுவது நியாயமாயிருந்தால் சரி; தர் மத்திற்கு விரோதமாயும் தீமையைத் தருவதுமா யிருந்தால், என்னைத் தப்புவிக்க நீர் இவ்வளவு கவலைப் படுவது கூடாதல்லவா? இப்போது பார்ப்போம்: நீர் சொல்லுகிறபடி செய்வது தகுமா தகாதா? ஆராய்ந்து பார்த்து, எது உண்மையானது, எது நல்

வழியென்று கண்டபின் அவ்வழியையே நான் பின் பற்றுவேன். என் வாழ்நாள் முழுதும் நான் நடந்த முறை இதுவே. இப்படியே இப்போதும் செய்வேனே யொழிய, இந்த மரண தண்டனை வந்ததேயென்று என் ஒழுக்கத்தினின்றும் நான் வழுவமாட்டேன். மரண தண்டனை மாத்திரமன்று; குழந்தைகளைப் பேய், பிசாசு, பூதம் என்று சொல்லி மிரட்டுவதுபோல் என்னைப் பயமுறுத்த நகரத்தார்கள் இன்னும் புதிய தண்டனைகளை யுண்டுபண்ணினாலும் என் தர்மத்தை நான் கைவிடமுடியாது. இப்போது நீர் சொல்வதை ஆராய்ந்து பார்ப்போம். ஜனங்கள் எங்களை இகழ்வார்கள், இப்படிச் சொல்வார்கள் அப்படிச் சொல்வார்கள் என்று சொன்னீரல்லவா? இதை முதலில் எடுத்து ஆராய்வோம். நாம் இதுவரையில் ஐயமேயின்றி ஒரு அபிப்பிராயம் கொண்டிருந்தோம். அடிக்கடி மற்றவர்களிடம் வற்புறுத்தியும் வந்தோமல்லவா? அதாவது ஜனங்களுடைய வாக்கு என்று எல்லாரும் சொல்வதை நாம் கவனிக்க வேண்டியதில்லை. அறிந்தோர் சிலருடைய அபிப்பிராயமே கவனிக்கத்தக்கது என்று நீரும் நானும் எத்தனையோ முறை பேசியிருக்கிறோமே. இது தவறா அல்லது உண்மையா? வெறும் பேச்சுக்காகவா? நன்றாய் ஆராயாமல் நாம் அம்மாதிரி சொல்லி வந்தோமா? இதை முதலில் சொல்லும். நீர் இப்போது உயிரை யிழக்கும் தறுவாயில் இல்லை. ஆகையால் அபாயத்தைக் கண்டு புத்தி மயங்காமல் நீர் அபிப்பிராயம் கொடுக்கலாம். யோசித்து எனக்குப் பதில் சொல்லும். அறிவில்லாத வெகு ஜனங்களின்

அபிப்பிராயங்களை நாம் கவனிக்க வேண்டியதா அல்லது அறிந்தோராகிய சிலருடைய அபிப்பிராயங்களையே நாம் பெரிதாய்க் கொள்ளவேண்டுமா ?

க்ரு : பெரியோராகிய சிலர் அபிப்பிராயமே மேலானது.

ஸோ : ஆகையால் அச்சிலருடைய பழியையும் நன்மதிப்பையுமே நாம் பார்த்து நடந்துகொள்ள வேண்டும்.

க்ரு : ஆம்.

ஸோ : அப்படிச் செய்யாமல் மற்றவர்களுடைய பழிக்குப் பயந்தும் நன்மதிப்பை எதிர்பார்த்தும் நடந்தால் ஒழுக்கம் கெடுமல்லவா ?

க்ரு : ஆம்.

ஸோ : வைத்தியன் சொல்லைக் கேளாமல், ஆரோக்கிய சாஸ்திரமறியாத மற்றவர்கள் பலர் சொல்லைக் கேட்டு நடந்தால் உடம்பு கெட்டுப்போகுமல்லவா ?

க்ரு : ஆம்.

ஸோ : வைத்தியன் பேச்சைக் கேளாமற் போனால் எப்படி தேகம் கெடுமோ அப்படியே, நல்ல ஞானி ஒருவரின் சொல்லைக் கேளாமல் பலர் சொல்லைக் கண்டு பயந்தும் நயந்தும் நடந்தால் நமது ஆத்மாவுக்குத் தீங்கு நேரிடுமல்லவா ?

க்ரு : ஆம்.

ஸோ : தேகத்தைவிட ஆத்மா சிறந்த பொருளல்லவா ? தேகத்தை இரட்சித்துக்கொள்ள நாம்

அனைவரும் இந்த நியாயத்தை ஒப்புக்கொண்டு நடந்தால், தேகத்தைவிடச் சிறந்ததும் நித்தியமாயுமுள்ள ஆத்மாவை இரட்சித்துக்கொள்ள அதே நியாயத்தைச் சிறிதேனும் தவருமல் ஒப்புக்கொள்ள வேண்டும் அல்லவா ?

க்ரு : ஆம் உண்மை.

ஸோ : ஆகையால், கிருதரே ! இது தர்மம் இது அதர்மம் என்கிற பகுத்தறிவுள்ளவர்களுடைய அபிப்பிராயத்தையே நாம் மதிக்கவேண்டும். வெகு ஜனங்கள் இழிசொல் கூறுவார்கள் என்று நாம் பயப்படக் கூடாது அல்லவா ?

க்ரு : ஆம், அப்படியே ஏற்படுகிறது.

ஸோ : ஆனல் பாமர ஜனங்கள் மரண தண்டனை விதிக்கக்கூடும், உயிரை மாய்க்கும் அதிகாரம் அவர்களுக்கு உண்டே என்று சொல்லலாம் அல்லவா ?

க்ரு : ஆம். அது ஓர் ஆக்ஷேபணையாயிருக்கிறது.

ஸோ : இதிலும் நாம் அனேக நாளாய் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறோமல்லவா? அது இப்போது மாறிப் போய் விட்டதா ? உயிருடன் இருப்பதே பெரிதா அல்லது நல்வழியில் பிழைத்திருப்பதே பெரிதா. சொல்லும்.

க்ரு : நல்வழியில் பிழைத்திருப்பதே பெரிது.

ஸோ : ஆகையால், இப்போது யோசித்துப் பார்ப்போம் : நான் சிறைச்சாலையிலிருந்து தப்பிப்போக முயல்வது சரியா தவரு என்பதை ஆராய்வோம்.

சரியாயிருந்தால் அப்படியே செய்யலாம்; தவருயிருந் தால் அந்த எண்ணத்தை விட்டுவிடுவோம். தப்பிப் போவதற்காக வேண்டிய பணச் செலவு, ஜனங்களு டைய நன்மதிப்பு, பழி, குழந்தைகளுடைய யோக க்ஷேமம் இவைகளைப்பற்றியெல்லாம் நாம் பார்க்கக் கூடாது. நன்மையா தீமையா என்று சோதிப்பதற்கு இவை சரியான உறைகல்லாகமாட்டா. சரியான பிரமாணங்களை எடுத்துப் பார்ப்பதே முறை. நானும் நீரும் மற்றவர்களும் என்னென்ன செய்யவேண்டுமோ அதைச் செய்து சிறையிலிருந்து தப்பிப் போவது, நல் வினையாகுமா தீவினையாகுமா என்பதையே பார்க்க வேண்டும். தீய கருமமென்று நாம் கண்டால் உயி ரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகவாவது அல்லது வேறு கஷ்டங்களை நீக்கிக்கொள்ளவாவது நாம் அந் தக் காரியத்தைச் செய்யக்கூடாதல்லவா?

க்ரி: ஆம் ஸோக்ரதரே! உண்மையே. ஆனல் நாம் என்ன செய்வது?

ஸோ: நண்பரே! நான் சொல்வதைக் கேட்டு, அதில் பிழை ஏதாவது இருந்தால் நீர் தடுத்து, அப் பிழையைத் திருத்தும்; நான் ஒப்புக்கொள்ளுகிறேன். நான் சொல்வதில் பிழையொன்றுமில்லாவிட்டால் ஏன் என்னை வீணே திரும்பத் திரும்ப உயிர்தப்பி ஓடச் சொல்லுகிறீர்? உம்முடைய அபிப்பிரா யத்தை நான் மிகவும் மதிக்கிறேன். ஆகையால் இவ் விஷயத்தில் உம்மைத் திருப்திபண்ண விரும்புகிறேன். நான் கேட்கிறவைகளுக்குப் பதில் சொல்லும்.

க்ரி : அப்படியே.

ஸோ : நாம் தவறான காரியங்களை மனதறிந்து எப்பொழுதும் செய்யக்கூடாதா? அல்லது சில சமயங்களில் சில விஷயங்களில் அப்படிச் செய்வது தகுமா? நீரும் நானும் வயது முதிர்ந்தவர்களாயிருந்து அனேக முறை நாம் இருவரும் இந்தத் தர்மத்தை முடிவாக ஏற்று வந்தோமல்லவா? தவறான காரியத்தை ஒரு போதும் செய்யக்கூடாது; ஜனங்கள் என்ன சொல்லுவார்கள் என்று கவனிக்கக்கூடாது; மரணம் அல்லது அதற்கு மேலான வேறு தண்டனைகளையும் நாம் பார்த்துப் பயப்படக்கூடாது என்று நாம் இதற்கு முன்னமே கொண்ட முடிவு சரியா, அல்லது அதில் பிழையுண்டா?

க்ரி : சரிதான்.

ஸோ : ஆகையால், நாம் ஒருபோதும் தவறானதைச் செய்யக்கூடாதல்லவா?

க்ரி : கூடாது.

ஸோ : தவிர, எப்போதும் தீயன செய்யக்கூடாது என்றால், ஒருவர் நமக்குத் தீயனசெய்தால் அதற்குப் பதிலாகவும் நாம் தீயசெயலைச் செய்யக்கூடாது அல்லவா? ஜனங்கள் பிரதிக்குப்பிரதி செய்யலாம் என்று நினைப்பது தவறுதானே?

க்ரி : ஆம்.

ஸோ : ஆகையால், க்ரிதரே! நாம் யாருக்கும் தீங்கு செய்யக்கூடாதே?

க்ரு : கூடாதுதான்.

ஸோ : நன்மைக்கு நன்மையும் தீமைக்குத் தீமையும் செய்யலாம் என்று ஜனங்கள் நினைப்பது பிசகுதானே.

க்ரு : சந்தேகமில்லை ; பிசகுதான்.

ஸோ : தவருன செயல் செய்வதும் தீங்கிழைப்பதும் எல்லாம் ஒன்றுதானே? நமக்கொருவன் என்ன தீங்கிழைத்திருந்தபோதிலும் - அவனால் நமக்கு எவ்வளவு பெரிய துன்பம் நேரிட்டிருந்தபோதிலும் - அவனுக்கு நாம் தீங்கிழைக்கக் கூடாது. தவருன செயலும் செய்யக்கூடாது. இது உண்மையான தர்மம் என்று ஒப்புக்கொள்கிறீரா? யோசித்துச் சொல்லும். இப்படிப் பழிக்குப் பழி வாங்கக் கூடாது. தீமை ஒருவன் நமக்குச் செய்யினும் நாம் அவன்பால் தீமை செய்யக் கூடாது, நெறி தப்பி நடக்கக்கூடாது என்று சிலரே ஒப்புவர் ; மற்றப் பலர் இதை ஒப்பமாட்டார். ஒப்பினும் அவ்வாறு நடக்கமாட்டார். ஆகையால் தீரயோசித்துச் சொல்லும். ஒருவன் நமக்குத் தீமை செய்தால் அதற்குப் பதிலாக நாம் தீங்கு இழைக்கலாம் என்று கொள்வாரும், தீமைக்குப் பதிலாகவும் தீமை இழைக்கக்கூடாதென்கிற தர்மத்தைக் கொண்டவரும் சேர்ந்து எவ்விஷயத்திலும் ஒரு முடிவுக்கு வர முடியாது. அடிமுதல் வேறுபாடான கொள்கைகளுள்ளவர்கள் ஒரு முடிவுக்கு வரமுடியாது. ஒருவன் நன்மை செய்யினும் தீமை செய்யினும் நமது கடமை நன்மை செய்வதே என்கிற கொள்கையை நான்

நீண்ட நாளாகக் கொண்டவன். இப்போதும் நான் அதையே உறுதியாய் நம்புகிறேன். நீர் வேறு அபிப் பிராயப்படுகிறீரா ? சொல்லும்.*

க்ரு : நானும் அதே கொள்கைக்கு இணங்கு கிறேன்.

ஸோ : அடுத்தபடி, நான் உம்மைக் கேட்பது, ஒரு வன் தான் செய்த வாக்குறுதியை நடத்தவேண்டிய தல்லவா ? நியாயத்தவறில்லாத உடன்படிக்கைகளை நிறைவேற்ற வேண்டியதுதானே ?

க்ரு : ஆம். நிறைவேற்ற வேண்டும்.

ஸோ : இப்போது பார்ப்போம். நான் இராஜாங் கத்தின் அனுமதியின்றித் தப்பியோடினால், நான் இராஜாங்கத்திற்குத் தீங்கு இழைப்பேனா இல்லையா ? என்னைக் கட்டுப்படுத்தும்படியான நியாயமான உடன் படிக்கைகளை மறுத்தவனாவேனா இல்லையா ?

---

* கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை.

அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்.

இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று

என்ற திருக்குறளாசிரியருடைய உறுதி வாக்கையும் கவ னிக்க. கௌதம புத்தர், ஏசுநாதர் இவர்கள் உலகத்தில் எடுத்துக் காட்டிய முக்கிய தர்மமும் இதுவே.

க்ரு : நீர் கேட்பதற்குப் பதில் சொல்ல முடிய வில்லை ; விளங்கவில்லை.

ஸோ : ஆராய்ந்து பாரும். நமது சுதர்மங்களும் சுயராஜ்யமும் உருவங்கொண்டு வந்து நம் முன்நின்று கேட்பதாக வைத்துக்கொள்ளும். "ஸோக்ரதரே, சிறையிலிருந்து தப்பி யோடுகிறீரே! என்ன காரியம் செய்கிறீர்? நம்மைக் கொலை செய்யவல்லவா முயலு கிறீர்? ஜனங்களால் செய்யப்பட்ட சட்டங்களை அவ ரவர் இஷ்டப்படி அவரவர் மறுத்துவிட்டு அச் சட்டங்களின்படி நியாயஸ்தலத் தீர்மானங்கள் மதிக் கப் பெறுமல் போன பிறகு ஓர் இராஜாங்கம் நிற் குமா? நீர் எங்களைக் கொலை செய்யவல்லவோ நினைக் கிறீர்?" என்று அவை என்னைக் கேட்பது நியாய மாகும். இதற்கு நாம் என்ன பதில் சொல்வோம், க்ரு தரே? சுயராஜ்யத்தில் ஜனங்கள் ஏற்படுத்திக்கொண்ட நியாய முறைகளின்படி நியாயஸ்தலத்தில் உண்டான தீர்மானத்திற்குமேல் ஒரு மறுப்பும் கூடாதல்லவா? ஒருவேளை சொல்லலாம். எனக்கு இராஜாங்கம் தீங் கிழைத்ததல்லவா? தவருகச் செய்யப்பட்ட தீர் மானத்தை நான் ஏன் ஒப்பவேண்டும்? இம்மாதிரி நான் சொல்லலாமா?

க்ரு : ஏன் சொல்லக்கூடாது?

ஸோ : இப்படி நான் வாதித்தால் நமது சுதர்மம் எதிர் நின்று அடியில் கண்டபடி பதில் சொல்லும் : "ஸோக்ரதனே! இதுதாஞ நம்முடைய உடன்படிக்கை?

இராஜாங்கத்தில் செய்யப்பட்ட ஒவ்வொரு தீர்மானத்தையும் ஒப்புக்கொள்வதாக நீ சம்மதிக்கவில்லையா?" எப்போதேனும் இம்மாதிரி உடன்படிக்கை கொடுத்ததாக அறியேனே என்று நான் சொன்னால், நமது சுதர்மதேவதை பதில் சொல்லும்: 'அப்பா! மாற்றிப் பேசாதே. ஏன் என்னையும் என் நகரத்தையும் கொலை செய்து அழிக்கப் பார்க்கிறாய்? நாங்கள் உனக்கு என்ன தீங்கு செய்தோம்? முதலில் உனக்குத் தாய் தந்தைபோல் நாங்களிருந்தோமல்லவா? நகரத்துள்ள ஆட்சியின் துணை கொண்டல்லவோ உன் தகப்பனார் உன் தாயைக் கொண்டு உன்னைப் படைத்தார்? விவாக முறைகளைப்பற்றி நமது நகரத்தின் விதிகளைப்பற்றி உனக்கு ஏதாவது ஆக்ஷேபணையுண்டா? சொல்' என்று என்னைக் கேட்டால் நான் இல்லையென்று தானே சொல்லவேண்டும்? தவிர, 'குழந்தைப் பருவத்தில் உன்னையும், நகரத்தில் மற்றக் குழந்தைகளையும் பாதுகாத்து வந்த நமது சட்டங்களில் எதையாவது நீ ஆக்ஷேபித்தாயா?' என்று கேட்டால் அதற்கும் நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. 'நம்மால் நீ பிறந்து வளர்ந்து பாதுகாக்கப்பட்டவன், எங்களுக்குக் குழந்தையாகவும் அடிமையாகவும் உன் முன்னோர்போல் நீயும் இராமல் எங்களைத் தள்ளி விடுவது தர்மமாகுமா? உன் சிறிய பாத்தியங்களும் சிறிய ஆதீனங்களும் உன்மேல் எங்களுக்குள்ள பெரிய ஆதீனத்திற்கு அடங்கியே நிற்க வேண்டும். நாங்கள் உனக்கு ஒரு துன்பம் செய்தால் அதற்குப் பதிலாக நீ எங்களுக்குத் துன்பம் உண்டாக்கலாமா? உன் தகப்பன் உனக்கு ஒரு கெடுதி



ROJA M... KOTTAIYU...

செய்தால் நீ அதற்குப் பழி வாங்குவாயா? நீ அடிமையாயிருந்து உன் எஜமானன் உனக்கு ஓர் ஊறு உண்டுபண்ணினால் அதற்குப் பதிலாக நீ அவனுக்கு ஊறு செய்யமுடியுமா? அவர்கள் உன்னைக் கஷ்டப் படுத்தினாலாவது, வசைச் சொற்கள் சொன்னாலாவது, அடித்தாலாவது, அல்லது வேறு துன்பம் செய்தா லாவது நீ அவர்களுக்குப் பதில் கஷ்டப்படுத்தவாவது, வசைப்பேச்சுப் பேசவாவது, அடிக்கவாவது, பழிவாங்க வாவதுமுயல்வாயா? முயல்வது நியாயமாகுமா? உன் தேசமும் சுதர்மமும் உனக்குத் தாயும் தந்தையும் எஜ மானர்களும் போன்றவை. அவைகளின்மேல் நீ பழிக் குப்பழி வாங்குவது தகாது. உன்னைக் கொன்று உயிர் மாய்த்தாலும் அது நியாயம் என்று கருதி அவ்விதம் நாங்கள் செய்தால் நீ அதற்குப் பதிலாக எங்களைக் கொல்லவும் அழிக்கவும் தகுமா? தர்ம ஒழுக்கங்களை அதிகமாக மதிக்கிற நீ, உன் தேசத்திற்கும் இராஜ்ஜி யத்திற்கும் சுதர்மத்திற்கும் இவ்வளவு பெரிய தீங் கிழைப்பது சரிதானா? உன் தாய் தந்தையர்-மற்ற முன் னோர்கள் - அனைவரையும்விட உன் தேசம், அதிகம் பெரிதும் அதிகம் மதிக்கத்தகுந்ததும் சநாதனமு மானது, புண்ணியம் பொருந்தியது, தெய்வங்களாலும் பெரியோர்களாலும் மதிக்கப் பெற்றது என்பது உண்மையல்லவா? நீ அதை அறியவில்லையா? அப் படிப்பட்ட சுதேசத்தையும் அதன் சுதர்மத்தையும் சுய ஆட்சியையும் நீ நன்கு மதித்துப் பக்திசெலுத்தி அவை களுக்கு எவ்விதக் கேடும் உண்டாகாதபடி தாய் தகப்பனைவிட அதிகமாய்ப் போற்றி வரவேண்டு மல்லவா? அவர்கள் உன்னிடம் கோபித்தாலும் நீ

சாந்தமாயும் பக்தியுடனும் அவர்களின் கோபத்தைச் சரியான வழியில் மாற்றவோ அல்லது அவர்கள் சொல் லுக்கு அடங்கவோ வேண்டும். அவர்கள் உனக்குச் சாட்டையடி அல்லது கால் விலங்கு தண்டனையாகக் கொடுத்தால் அதை நீ சாவதானமாய் ஏற்றுக்கொள்ள வேண்டுமல்லவா ? சண்டையில் போய் உயிரைக் கொடுத்தோ காயம்பட்டோ வா என்றாலும் நீ சந் தோஷமாய்ப் போகவேண்டியவனல்லவா? பின் திரும்பி ஓடுவாயா ? யுத்தத்திலும் நியாயஸ்தலத்திலும் மற் றெங்கேயும் உன் தேசமும் உன் நகரமும் என்ன செய் யச் சொல்லுகின்றனவோ அதை நீ செய்தே தீரவேண் டும் ; அல்லது அந்த உத்தரவுகள் நியாயத்தவறு என்று அவை திருப்திபடக் காட்டவேண்டும். தாய் தந்தையருக்கு விரோதமாய்த் துராக்கிரகம் செய்வது கடவுள் இட்ட விதிக்கு விரோதம். உன் தேசத்தின் மேல் துராக்கிரகச் செயல் செய்வது அதைவிடப் பெரிய அதர்மம். இப்படி நமது நகரும் நமது தர்மமும் வாதித்தால் நாம் என்ன பதில் சொல்லக்கூடும் ? க்ருதரே ! சொல்லும்.

க்ரு : நியாயமென்று ஒப்புக்கொள்ளுகிறேன்.*

* இவ்விடம் ஒரு சந்தேகம் தோன்றலாம். ஸோக்ர தர் உபதேசம் நியாயமாயின் சட்ட மறியல் இயக்கமும் ஒத்துழையா இயக்கமும் எவ்விதம் நியாயமாகும் என்று கேட்கலாம். சுயராஜ்ய தர்மத்திற்கும் குடிகள் சம்மத மின்றி துராக்கிரக பலத்தால் நடத்தப்படும் அன்னிய அரசாட்சியில் குடிகள் எடுத்துக் கொள்ளக்கூடிய தர்மத் திற்கும் உள்ள வித்தியாசத்தை ஆராய்ந்து சந்தேகத்தை நீக்கிக் கொள்க.

ஸோ : இன்னும், நமது நகரதேவதையும் சுதர்ம தேவதையும் சொல்லும் :

' நீ தப்பியோடுவது எங்களை நாசஞ் செய்யும்படியான தீவினையாகும். உன்னைப் படைத்ததும் குழந்தைப் பருவத்தில் காத்ததும் அறிவு ஊட்டி வித்தை கொடுத்ததும் நீ வேண்டின பொருள் உனக்குத் தந்து காத்ததும் நாங்களல்லவா ? தவிர, எங்களைக் கண்டு யாருக்காவது திருப்தியில்லாவிடில், வயது வந்தவுடனே தம் பொருளை எடுத்துக்கொண்டு நம்முடைய நகரத்தைவிட்டு வேறு இராஜ்ஜியத்திற்குப் போய் விடலாம் என்றும் அவகாசம் கொடுத்தோம். இம்மாதிரி இளமைப்பருவம் நீங்கிப் புத்தியடைந்த ஒவ்வொருவனும் நகரத்தில் வழங்கும் அரசாங்க முறையும் சட்டங்களும் நியாயமும் தனக்குப் பிடியாவிடின் நகரத்தை விட்டு விலகிப் போகும் சுதந்தரத்தைக் கொடுத்திருக்கிறோமல்லவா ? நம்முடைய குடியேற்ற நாடுகளுக்காவது அன்னிய இராஜ்ஜியங்களுக்காவது வேறு எங்கேயாவது போகலாம். ஆதன்ஸிலேயே இருந்து தீரவேண்டும் என்று ஒருவரையும் நாங்கள் கட்டாயப்படுத்தவில்லை. ஆனால் நம்முடைய நகரத்தின் நீதி பரிபாலனத்தையும் மற்ற அரசாட்சி முறைகளையும் அறிந்து வயதுவந்த பின்னும் நகரத்திலேயே தங்கியிருக்கும் ஒவ்வொருவனும் நகரத்தின் விதிகளை ஒப்புக்கொண்டவனாகிறான். அப்படி எங்களை ஒப்புக்கொண்டு எங்கள் நகரத்திலிருக்கும் ஒருவன் எங்களை நிராகரித்துவிட்டால், அவன் மூன்று குற்றங்கள் செய்தவனாகிறான். பெற்

ரேரை மீறி நடந்த குற்றம்; எடுத்து வளர்த்தவ ருக்குத் துரோகம் செய்த குற்றம்; உடன்படிக்கையை நிறைவேற்ருமல் சத்தியத்தைத் தவறின குற்றம் ஆகிய மூன்றும் செய்தவனுகிருன். நாங்கள் சொன் னதையெல்லாம் செய்யவேண்டும் என்று முரட்டுத் தனமாயும் நாங்கள் சொல்லவில்லை. நியாய ஸ்தலத் தில் நாங்கள் சொல்லுவது தவறு என்று நிரூபிக்கவும் அவகாசம் கொடுத்தோம். இத்தகைய முப்பாவமும் நீ செய்யத் துணிந்தாயா? ஸோக்ரதனே! மற்றவர் களைவிட உன் குற்றம் பெரிதாகும். நம்முடைய நக ரத்தை விட்டு நீ வெளியே போகாமல் எப்போதும் ஆதன்ஸிலேயே இருந்து வந்தாய். மற்றவர்களைப் போல் நீ அடிக்கடி திருவிழாக்களுக்குக்கூட ஊரை விட்டுப் போனது கிடையாது. போர் முனைக்குப் போனது தவிர நீ எப்போதும் இவ்வூரிலேயே இருந்து வந்தாய். நம்முடைய நகரமும் அதன் பரிபாலனமும் உனக்குத் திருப்தியா யிருந்ததாலல்லவா, நீ மற்ற ஊர் களையும் தேசங்களையும் விரும்பிப் போகாமலிருந்தாய்? எங்களை நீ ஒப்புக்கொண்டு நகரத்தில் வாழ்ந்து இல் லற சுகமும் அனுபவித்தாய்? உன்மேல் வழக்குத் தொடர்ந்த காலத்திலும் உனக்கு அவகாசமிருந்தது. ஆதன்ஸ் நகரத்தைவிட்டு அப்புறப்படுத்திவிடும் தண்டனை கொடுக்கும்படி நீ நியாயஸ்தலத்தில் கேட் டிருக்கலாம். அதையும் நீ செய்யவில்லை. இப்போது நீ செய்யப் போகும் காரியத்தை அப்போது நீ நம் முடைய அனுமதிபெற்றே செய்திருக்கலாமே! ஆனல் அப்போது நீ என்ன சொன்னுய்? ஊரைவிட்டுப்

போவதைவிட நான் மரணத்தையே விரும்புகிறேன் என்று தைரியமாய்ச் சொன்ன பேச்சை இப்போது மறந்தாயோ? எங்களை மதியீனப்படுத்தி நாசஞ் செய்யப் பார்க்கிறாய். கேவலம் ஒரு மானமற்ற அடிமை தன் எஜமானனை விட்டு ஓடுவதுபோல் எங்களிடம் நீ செய்துகொண்ட உடன்படிக்கையை மீறி அசத்தியத்தில் புக நினைக்கிறாய். எங்களுடைய ஆட்சிக்குட்பட்டிருக்கிறேன் என்று நீ ஒப்பினது பொய்யா, அல்லது மெய்யா? சொல்லு' என்று கேட்டால் நாம் என்ன சொல்லுவது? க்ருதரே! ஒப்பினேன் என்று தானே சொல்லவேண்டும்?

க்ரு: ஆம்.

ஸோ: க்ருதரே! இன்னும் அத்தேவதைகள் சொல்லும்: 'ஸோக்ரதனே! நீ செய்த உடன்படிக்கையை மீறுகிறாயே. உன்னை நாங்கள் ஏதாவது மோசமாவது பலவந்தமாவது செய்து எங்களுக்கு உட்பட்டிருக்க வாக்குறுதி வாங்கினோமா? அல்லது அவசரத்தில் யோசனை செய்யப் போதுமான அவகாசம் கொடாமல் உன்னிடம் வாக்குப் பெற்றுவிட்டோமா? எழுபது வருஷங்கள் நீ நம்முடன் வாழ்ந்தாய்; இந்த எழுபது வருஷங்களில் எப்போதாவது நகரத்தின் பரிபாலனம் உனக்குத் திருப்தி யில்லாதிருந்தால் நீ நகரத்தைவிட்டுப் போயிருப்பாய்; உடன்படிக்கையை ரத்துசெய்து கொண்டிருப்பாய். அண்டையிலுள்ள இராஜ்ஜியங்கள் ஆதன்ஸைவிட உனக்கு அதிகத் திருப்தியைக் கொடுத்திருந்தால் அவ்விடங்களுக்குப் போய்விட உனக்கு எழுபது வருஷங்கள் இருந்தனவே! கிரேக்க

தேசமோ விட்டுக் கீழ்நாட்டுக்காவது மேல்நாட்டுக் காவது நீ போய்விட்டிருக்கலாமே. நொண்டியும், குருடனும், முடவனும் ஊரைவிட்டுச் சிலநாள் வெளியே சென்றாலும்கூட நீ மட்டும் இவ்வூரை விட்டுப் போனது கிடையாதே! இப்போது நாங்கள் சொல்லுவதைக் கேள். கொடுத்த உறுதிவாக்கை மறுக்காதே. ஊரைவிட்டு ஓடிப்போகாதே. எங்க ளுக்குத் துரோகம் செய்யாதே.

'ஸோக்ரதனே! யோசனை செய்து பார். இந்த அக்கிரமச் செயலால் நீ என்ன நன்மையை யடையப் போகிறாய்? அல்லது உன் நண்பர்கள் என்ன லாபம் பெறுவார்கள்? உனக்கு உதவிசெய்து சிறையிலிருந்து மீட்ட குற்றத்திற்காக அவர்களும் குடிப் பிரஷ்டம் அடையலாம்; தேசப் பிரஷ்டம் அடையலாம். அவர்க ளுடைய சொத்தும் பறிமுதலாகலாம். நீ பக்கத்தில் வேறு இராஜ்ஜியத்திலுள்ள ஒரு நகரத்திற்குப் போவாய் என்று வைத்துக்கொள்வோம். நீ போன இடத்திலெல்லாம் அந்தத் தேசத்து அரசாங்கத்திற்கு நீ ஒரு பகையாகக் கருதப்படுவாய். தங்கள் தங்கள் அர சாங்கத்தில் பக்தியும் பற்றுமுள்ளவர்களெல்லாம் உன்னை என்ன நினைப்பார்கள்? சட்டத்தை மீறி, அர சாங்கத்தின் அதிகாரத்தை நிராகரித்து வந்தவன் என்றே ஒவ்வொருவரும் உன்னைக் கருதுவர். தன் தாய் நகரபரிபாலனத்தை மீறிச் சட்டத்தை நிராகரித்து விடக் கூடியவன் வாலிபர்களையும் அறிவீனர்களையும் துர்ப்புத்தியுண்டாக்கிக் கெடுத்துவிடவுங்கூடும். உன் மேல் மெலேதன் சாட்டின குற்றம் உண்மையே ஆகும்.

செய்த தீர்மானமும் நியாயமாகும். நீ எங்கேதான் போவாய்? தங்கள் தங்கள் அரசாங்கத்தில் பற்றில் லாத ஜனங்கள் நிறைந்த அராஜக ஊர்களைத் தேடிப் போவாயா? தங்கள் தேச பரிபாலனத்திலும் சுதர்மத் திலும் பக்தியில்லாதவர்களிடமே பேசித் திரிவாயா? அவர்களிடம் நீ என்ன சம்பாஷணைசெய்து காலம் போக்குவாய்? தர்மத்தைப்பற்றிப் பேசுவாயா? நியா யம், நீதிஸ்தலம், அரசாங்கம், இராஜ்ஜிய பரிபாலனம், சுயாட்சி இவைகளைப்பற்றிப் பேச உனக்கு நா எழுமா?

'இன்னும் யோசித்துப் பார். இராஜ பக்தியில் லாத ஊர் ஒன்றைத் தேடி, நீ செய்த குற்றத்தைப் பெரிதாக நினையாத இடமாக ஒன்று பார்த்துப் போவாய் என்று வைத்துக்கொள்வோம். அவ்விடத்தி லுள்ள ஜனங்கள் உன் கதையைக் கேட்டு ஆனந்த மடைவார்கள். ஸோக்ரதன் உடுப்பு மாற்றி மாறு வேஷம் பூண்டு ஏமாற்றி யோடிப்போன கதையைக் கேட்டுச் சிரித்துச் சந்தோஷிப்பார்கள். ஆனால் ஒரு வர் இருவராவது உன்னைக் கேட்பார்களல்லவா? 'ஐயா கிழவரே! நீர் இன்னும் எவ்வளவு நாள் பிழைத் திருக்க வேண்டுமென்று ஆசைப்பட்டு இம்மாதிரி உம் முடைய அரசாங்கத்தை மீறி ஓடி உயிர்தப்பி வந்தீர்?' இப்படி ஒருவர் கேட்டால் நீ வெட்கப்படுவாயல்லவா? இப்படி நீ வெட்கப்படும்படியான கேள்விகளை ஒருவ ரும் உன்னைக் கேட்காமலிருக்க நீ கண்டவர்கள் எல்லாரையும் முகமன் பேசிச் சந்தோஷப்படுத்தி எல்லாரிடமும் வேஷம் போட்டு வரவேண்டும். இம் மாதிரிக் காலம்கழித்து என்ன இன்பத்தை யடையப்

போகிருய்? நல்ல உணவுகள் தின்பதில் காலம் போக்குவாயா? இதற்குத் தானு தர்மத்தைப்பற்றியும் நல்வினை தீவினைகளைப்பற்றியும் இவ்வளவுபேச்சுக்கள் நீ பேசி வந்தாய்? ஒருவேளை உன் குழந்தைகளுக்காக உயிர் தப்பிப் போகலாம் என்று நினைக்கிருயா? தான் பிறந்த ஊருக்குப் பிரஷ்டமாய் நீ போவதுடன் உன் மக்களையும் அப்படியே செய்யப் போகிருயா? ஒரு வேளை அவர்களை ஆதென்ஸிலேயே விட்டுப் போவாயோ? அவர்களுடன் நீ இல்லாமல் அவர்கள் நீ எங்கேயோ உயிருடனிருக்கிற காரணத்தினலேயே என்ன வித்தை அதிகமாய்க் கற்றுக்கொள்ளப் போகிருர்கள்? நீ உயிருடன் இல்லாதிருந்தாலும் அவ்வளவுதான் கற்கப்போகிருர்கள். உன் நண் பர்கள் அவர்களைப் பார்த்துக்கொள்வார்கள் என்று நீ நினைப்பது சரிதான். ஆனல் அவர்கள் நீ உயிருடன் இருந்தால் பார்த்துக்கொள்வார்களா? நீ உயிரிழந்துவிட்டால் பார்க்க மாட்டார்களா? உன் நண்பர்களிடம் உனக்குப் போதுமான நம்பிக்கை யில்லை போலும்! இல்லை, ஸோக்ரதனே! கேள்: மக்கள் உயிர் எதுவும் நியாயத்திற்கு மேலல்ல. நியா யம் தவறினையானல் யமனிடம் செல்லும் காலத்தில் என்ன பதில் சொல்வாய்? நீ இப்போது ஓடின யானல் நீயும் சுகப்படப்போவதில்லை, உன் நண்பர் களும் சுகப்படப்போவதில்லை; ஒருவித மேன்மையை யாவது புண்ணியத்தையாவது, நீயோ உன் நண்பர் களோ அடையப்போவதில்லை. இப்போது நீ மரண மடைந்தால் நீ அடைந்த துன்பத்துக்குக் காரணர், அநியாயத்தைச் செய்த மனிதர்கள். நியாயம், நகரம், தர்மம் இவைகள் உனக்கு ஒரு துரோகமும் செய்ய

யில்லை. அவைகளைப் பரிபாலித்த ஜனங்களே உன்னை அக்கிரமத்திற்குப் பலியாக்கினவர்க ளாவார்கள். இதற்கு நீ செய்யவேண்டியதென்ன? அதர்மம் உன் பால் செய்யப்பட்டதால், நீ அதர்மத்தில் இறங்க லாமா? தீய காரியத்திற்குப் பிரதி நீயும் தீய காரியம் செய்துவிட்டு அவமானப்பட்டு உன் நண்பர்களும் நீயும் மேன்மை யிழந்து, சுகமிழந்து, உன் தேசத்திற் கும் சுதர்மத்திற்கும் தீங்கிழைத்து, இப்படியாவது உயிர் தப்புவதைப் பெரிதாக நினையாதே. அப்படிச் செய்வாயாயின் நகர தர்மத்தை நாசம் செய்த நீ காலஞ்சென்று யமனிடம் செல்லும்போது தர்ம சொரூபமான அவன் எவ்வாறு உன்னை வரவேற் பான்? க்ருதன் சொல்வதைக் கேளாதே; நாங்கள் சொல்வதைக் கேள். கெட்டுப்போகாதே.'

க்ருதரே! இவ்வாறு நமது சுயராஜ்ஜியமும் சுதர்மமும் பிரசன்னமாய் என் காதில் சொல்லி வரு கின்றன. அந்தத் தர்ம உபதேசம் மற்றப் பேச்சுக் களையெல்லாம் அழுத்திவிட்டு என் காதில் ஒலித்துக் கொண்டே யிருக்கிறது. இப்படியிருக்க நீர் ஏன் வீணாக என்னை உயிர் தப்பித்து ஓடும்படி சொல்லு கிறீர்? என் மனம் மாறாது. மாற்றி விடலாம் என்று நீர் இன்னும் நினைத்தால், பேசும். நான் வேண் டாம் என்று சொல்லவில்லை.

க்ரு: நான் வேறு என்ன சொல்லப் போகிறேன்! என் பேச்சு முடிந்துவிட்டது.

ஸோ: க்ருதரே! கடவுள் ஆணையென்று உட் பட்டுத் தைரியமா யிருக்கலாம்.

[க்ருதர் - ஸோக்ரதர் சம்பாஷணை முற்றிற்று]

## ஸோக்ரதரின் மரணம்

இஷக்ராதர் : நீர் ஸோக்ரதர் மரணமடைந்த காலத்தில் கூடவே யிருந்ீரா! அல்லது சங்கதி மற்ற வர்களிடம் கேட்டுத் தெரிந்துகொண்டீரா ?

வீதர் : நான் கூடவே யிருந்தேன்.

இஷ : அப்படியானல் நமது ஆசாரியர் கடைசியில் என்ன சொல்லி எப்படி உயிரைவிட்டார் ? எல்லாம் சொல்லும். அவர் மரண சரித்திரம் கேட்க மிக்க ஆசையா யிருக்கிறது. ஆதன்ஸிலிருந்து அனேக நாளாய் யாரும் நம்மூருக்கு வரவில்லை ; சங்கதி சரியாய்ச் சொல்லுவாரில்லை. அவர் விஷம் சாப்பிட்டார், இறந்தார் என்ற பேச்சுத் தவிர வேறு ஒன்றும் தெரியவில்லை. *நண்பர்கள் யாராவது சுவாமியுடன் இருந்தார்களா அல்லது யாரையும் அதிகாரிகள் விடவில்லையா ?

---

* மரண தண்டனையின் முறை, தலையை வெட்டுவது, தூக்குப் போடுவது, மலையிலிருந்து கீழே தள்ளுவது, நெருப்புவைத்து எரிப்பது, மின்சாரத்தினல் கொல்லுவது, இப்படிப் பல தேசங்களிலும் பல காலங்களிலும் பலவிதமாக வழங்கி வருகிறது. ஆதென்ஸ் நகரத்தில் ஸோக்ரதர் நாளில் மரண தண்டனை முறை யென்ன வென்ருல் தண்டனை விதிக்கப்பட்டவனிடம் குறித்த நாளில் வெகுசீக்கிரத்தில் மரணத்தைத் தரும்படியான மகா கொடூரமான ஒரு விஷ பானத்தைக் கொடுத்து அவன் அதைக் குடிக்கச் செய்வது.

வீ: இப்படியல்ல. அனேக நண்பர்கள் கூடவே கடைசிவரை யிருந்தார்கள்.

இஷ: நடந்ததெல்லாம் விவரமாய்ச் சொல்லக் கோருகிறேன். உமக்கு அவகாசமுண்டா, அல்லது வேறு அலுவல் ஏதாவது இருக்கிறதா?

வீ: ஒரு தடையுமில்லை. நடந்ததெல்லாம் சொல்லுகிறேன். ஸோக்ரதர் விஷயத்தைச் சொல்லுவதும் கேட்பதும் மனதுக்கு ஆனந்தத்தைத் தருகின்றன. கேளும்: நான் அன்று கூடவே யிருந்தேன். என் மனம் சுவாதீனம் தப்பி ஒருவிதக் கலக்கமடைந்தது. மிகப் பிரியமான நண்பர் ஒருவர் மரணமடையும் காலத்தில் உண்டாகவேண்டிய துக்கமே தோன்றவில்லை. அவர் மனநிலையையும் ஆனந்தத்தையும் கண்டு என் மனதில் துக்கமே உண்டாகவில்லை. ஆகா! என்ன தைரியம்! பெருந்தன்மையுடன் உயிரைவிட்டார். தேவர்கள் எல்லாரும் அவரைச் சுற்றி அவர் ஆத்மா விடுதலை யடைவதைப் பார்க்க வந்து காத்திருந்ததுபோலவே யிருந்தது. நற்கதியை யடைந்து ஆனந்த பதவியையடைவார்க்குத் துக்கமொன்றுமில்லை என்பது கண்கூடா யிருந்தது. சாதாரணமாய் ஆத்ம விஷயங்களைப்பற்றி அவர் சம்பாஷித்தால், மனதில் ஒருவித உற்சாகம் எனக்கு உண்டாகும். அன்று அவர் ஆத்ம விஷயங்களையே பேசினார். ஆனாலும் எனக்கு அவ்வித உற்சாகம் உண்டாகவில்லை. விசனமும் ஆனந்தமும் கலந்த ஒருவித மனோபாவம் என்னைக்

கொண்டது. அங்கிருந்தவர்களெல்லாரும் இதேமாதிரி யாகவே யிருந்தார்கள். ஒருசமயம் சிரித்தோம்; ஒரு சமயம் அழுதோம். இப்படிச் சுவாதீனமற்ற மன நிலையோடிருந்தோம். முதலிலிருந்து சொல்லுகிறேன், கேளும்: சாதாரணமாய் நானும் சில நண்பர்களும் தினமும் காலையில் சிறைச்சாலைக்குப் பக்கத்தில் ஒரு மைதானத்தில் சேர்ந்து பேசிக்கொண்டிருந்து விட்டுச் சிறைச்சாலைக் கதவு திறந்தவுடன் உள்ளே போவோம். முதல்நாள் மாலையில் கிரேதத் தீவிலிருந்து சுவாமி கோயிலுக்கு அபிஷேகம் செய்துவிட்டுக் கப்பல் திரும்பி ஆதன்ஸ் சேர்ந்துவிட்டதென்று சமாசாரம் அறிந்தோமாகையால், அன்று அதிகாலையிலேயே போனோம். நாங்கள் சிறைச்சாலையண்டை போனதும் வாயிற்காவலாளி வந்து, "கொஞ்சம் பொறுங்கள், அதிகாரிகள் வந்து ஸோக்ரதருடைய கால் விலங்கு களைக் கழற்றிவிட்டு அவருக்கு இன்று விஷபானம கொடுக்க உத்தரவு செய்துகொண் டிருக்கிறார்கள். அவர்கள் போனதும் நீங்கள் வரலாம்" என்று சொல லிப் போனான். அவன் கொஞ்ச நேரங் கழித்துத் திரும்பி வந்து, எங்களை உள்ளே விட்டான். அப போதுதான் விலங்கும் சங்கிலிகளும் கழற்றப்பட்டிருந் தன. ஸோக்ரதருடைய மனைவி சாந்திபை குழந்தை யைக் கையில் எடுத்துக்கொண்டு பக்கத்தில் உட்கார்ந் திருந்தாள். எங்களைக் கண்டதும் சாந்திபை கண்ணீர் விட்டு, "ஐயோ! இதுவோ கடைசி முறை நீர் உம் முடைய நண்பர்களுடன் பேசுவது?" என்று சொல்லி அழ ஆரம்பித்தாள். "க்ருதரே, இவளை வீட்டுக்கு

யார் அழைத்துப் போவார்கள் ? " என்று ஸோக்ரதர் சொன்னதும் க்ருதருடைய ஆட்கள் சிலர் சாந்தி பையை அழைத்துப் போனார்கள். அவளும் விம்மி விம்மி அழுதுகொண்டும் மார்பிலடித்துக் கொண்டும் வீட்டுக்குப் போனாள். ஸோக்ரதர் தம் படுக்கையின் மேல் உட்கார்ந்து கால்களை மெதுவாகப் பிசைந்து கொண்டு "இந்த விநோதத்தைப் பாருங்கள். சுகமும் நோயும் பரஸ்பரம் விரோதமாயிருந்தும், இரண்டும் சேர்ந்திருக்க முடியாதாயினும், கடவுள் அவைகளை ஒன்றன்பின் ஒன்று தப்பாமல் வரும்படி கட்டிவிட்டிருக்கிறார். நீங்கள் ஒருவரோடு ஒருவர் விரோதப் பட்டுக் கூட வாழமாட்டோம் என்கிறீர்கள். உங்களில் ஒருவர் வாலை ஒருவர் தலைக்குக் கட்டிவிடுகிறேன் என்று சொன்ன மாதிரியிருக்கிறது. மனிதனுக்கு ஒன்று வந்தால் மற்றொன்று தவறாமல் அதன் பின் வரும். இவ்வளவு நாள் இந்தக் கால்விலங்கு நோயைத் தந்து வந்தது. இப்போது அது எடுத்துவிடப்பட்டதும் எவ்வளவு சுகமாயிருக்கிறது" என்றார்.

"எவேனர் என்னைப்பற்றி விசாரித்தாரா ? அதிக சந்தோஷம். அவரிடம் என் நமஸ்காரங்களைச் சொல்லுங்கள். அவர் நல்ல ஞானியல்லவா? அவரையும் சீக்கிரம் என்னைப் பின்தொடர்ந்து வரச் சொல்லுங்கள். இன்று நான் உங்களைவிட்டுச் செல்லவேண்டிய நாள். அதிகாரிகள் உத்தரவு செய்துவிட்டார்கள்."

அப்போது ஸிம்மியர், "இதென்ன, இப்படிச் சொல்லுகிறீர்கள் ? எவேனரை நான் அறிவேன்.

அவர் மரணமடைய விருப்பமுள்ளவராயில்லை" என்று சொன்னார்.

"என்ன! எவேனர் தத்துவஞானமடைந்தவர் என்று கேள்விப்பட்டேனே, அப்படியில்லையா? ஞானமடைந்தவன் ஒவ்வொருவனும் இந்த உடலை விட்டுப் போகவே விரும்புவான். ஆனால் பலவந்தமாய் உயிர் மாய்த்துக் கொள்ளமாட்டான். அது தவறாகும்." இப்படிச் சொல்லிவிட்டுக் கால்களைக் கீழே போட்டு உட்கார்ந்து கொண்டார்.

"ஏன் அது மாத்திரம் தவறாகும்? சொல்லுங்கள்" என்று அங்கிருந்தவர்கள் கேட்க, ஸோக்ரதர் சொன்னார்: 'உடலானது கடவுள் நமக்குத் தந்த ஒரு சிறைச்சாலை யாகும்; அதிலிருந்து நாமாகத் தப்பி யோடக்கூடாது; கடவுளே விடுதலை செய்யவேண்டும்' என்று சில ஞானிகள் சொல்லுவார்கள். இதன் பொருள் விளங்குவது கஷ்டமாயிருக்கலாம். நான் சொல்லுவது என்னவென்றால், 'நாமெல்லாரும் கடவுளின் பாதுகாப்பிலிருக்கிறோம். நாமெல்லாரும் அவருடைய சொத்து. நம்மை நாம் வதை செய்துகொள்ள நமக்குச் சுவாதீனம் கிடையாது. கடவுளே நமக்கு விடுதலை கொடுக்கும்வரையில் நாம் காத்திருக்கவேண்டும்.'

"ஞானமடைந்த ஒவ்வொருவனும் மரணத்தை ஆவலுடன் விரும்புவான் என்று நீர் சொன்னது இதற்கு விரோதமாகவில்லையா? நாம் கடவுளுடைய சொத்தாயிருந்து - அவர் ஆதீனத்திலிருந்து - பாது

காக்கப்பெற்று வருவது உண்மையாயின், எப்படி ஞானியான ஒருவன் அக்காப்பிலிருந்து விடுபட விரும்புவான்? ஏன் மரணமடைய ஆவல் கொள்ள வேண்டும்?" என்று ஒருவர் கேட்டார். அதைக் கேட்டு ஸோக்ரதர் "ஓகோ! என்மேல் குற்றம் மறுபடியும் சாட்டுகிறீர்கள். ஏன் உயிரைவிடப் போகிறீர்? உயிரை ஏன் காப்பாற்றிக்கொள்ள நீர் முயலவில்லை? என்று என்னைக் கேட்பதற்குப் பதில் இந்தக் கேள்வி கேட்கிறீர்களல்லவா?" என்று நகைத்துக்கொண்டே சொன்னார்.

அதற்கு அவர்கள், 'ஆம்' என்று சொன்னார்கள். "அப்படியானால் கேளுங்கள்: கடவுள் காப்பில் நான் இருந்து வந்தேன். அவர் ஆக்ஞை கொடுத்தவுடன் சந்தோஷத்துடன் உயிரைவிடுகிறேன். ஆனால் அப்படி உயிரிழந்தவுடன் ஆத்மா அழிந்துபோவதாயிருந்தால் நீங்கள் சொன்னது சரி. ஆத்மா அப்படி அழியாது. இவ்வுடல் நீங்கிப் போனாலும் கடவுளின் காப்பிலேயே - அவர் பக்கத்திலேயே அல்லது வேறு இடத்திலேயே - அவருடைய பூர்ண ஆதீனத்திலிருப்பேன் என்பது திண்ணம். ஆகையால் மரணத்தைக் கண்டு துயரப்பட வேண்டியதில்லை" என்று சொன்னார்.

"ஆத்மாவுக்கு அழிவில்லை யென்பதை எங்களுக்கு நன்றாய் விளக்கவேண்டும். நீர் எங்களை விட்டுப் போகுமுன்னே இதைப்பற்றி நாங்கள் ஞானமடையும் படி நீர் உபதேசித்தால் நலமாயிருக்கும்" என்று அங்கிருந்தவர்கள் சொன்னார்கள்.

"அப்படியே ஆகட்டும். ஆனால் க்ருதர் ஏதோ சொல்ல விரும்புகிறார் போலிருக்கிறது. அது என்ன, கேட்போம்" என்றார்.

"ஒன்றுமில்லை ஸோக்ரதரே! உமக்கு விஷபானம் கொடுக்க வேண்டியவன் சொல்லுகிறான்: நீர் அதிகமாய்ப் பேசக்கூடாதாம்; பேசினால் தேகத்தில் உஷ்ணம் மேலிட்டு அந்த விஷத்தின் வேகத்தைத் தடுக்குமாம். அப்படி விஷத்தின் வேகம் தடுக்கப்பட்டால் மரணம் சுலபமாய் உண்டாகாமல் இரண்டு மூன்று முறை விஷபானம் கொடுக்கவேண்டி நேரிடுமாம்" என்று க்ருதர் சொன்னார்.

"அவன் கிடக்கட்டும். எவ்வளவு தரம் கொடுக்க வேண்டுமோ அவ்வளவு தரம் கொடுக்கச் சொல், அதற்காக என்ன?" என்று ஸோக்ரதர் சொன்னார்.

"நீர் இப்படியே பதில் சொல்வீர் என்று எனக்குத் தெரியும்" என்று க்ருதர் சொல்லிவிட்டு உட்கார்ந்தார்.

"ஞானியானவன் மரணத்தை ஆவலுடன் விரும்பி அதை எதிர்பார்த்திருப்பான் என்பது உங்களுக்கு விளங்கிற்றா?" என்று ஸோக்ரதர் கேட்டதற்கு, அங்கிருந்தவர்கள் நகைத்து "எங்களை நகைக்கச் செய்கிறீரே! இது நகைக்கும் சமயமன்று. நீர் சொல்லுவதை ஒப்புக்கொண்டு நமது மகா ஜனங்கள் எல்லா ஞானிகளையும் கூப்பிட்டு நீங்களே மரணத்தை விரும்புகிறீர்களாமே யென்று எல்லாருக்கும் ஒரே

முறை சந்தோஷமாய் மரணதண்டனை விதித்து இந்த ஞானிகளுடைய தொந்தரவு ஒழிந்ததென்றிருப்பார்கள் " என்று சொன்னார்கள்.

" அப்படி மகா ஜனங்கள் செய்தால் உத்தமமே. ஆனால் அவர்களுக்கு என்ன காரணத்தினால், எவ்விதத்தில் ஞானியானவன் மரணத்தை விரும்புகிறான் என்பது தெரியாது. மரணம் என்றால் என்ன? நம்முடைய ஆத்மாவும் உடலும் வேறுபடுவதா? "
" ஆம். "

" அதாவது மரணம் வாய்த்தவுடன் ஆத்மா உடலினின்று பிரியும். உடல் ஆத்மாவினின்றி தனியாகவும் நிற்குமல்லவா? " " ஆம். "

" ஞானிகளுடைய எண்ணமும் வாழ்க்கையும் எவ்வித மிருப்பனவென்று சற்று ஆராய்வோம். நல்ல சுவையுள்ள பதார்த்தங்களை உண்டும் பருகியும் இவைகளால் உண்டாகும் இன்பத்தையும் மற்றும் இதர புலன்கள் வழியாய் மனிதனுக்கு உண்டாகும் சிற்றின்பங்களையும் மதிக்க மாட்டார்களல்லவா? இன்றியமையாத அளவு ஏற்று மற்றவைகளை வெறுப்பார்களல்லவா? " " ஆம். "

" அதாவது ஞானியின் மனம் உடலைப் பொருந்தினது அன்று. உயிருடனிருந்தாலும் சாத்தியமான வரையில் உடலையும் அதன்வழிச் சேரும் சிற்றின்பங்களையும் மனதினின்று நீக்கி ஆத்ம விஷயங்களிலேயே அவன் மனதைச் செலுத்துவானல்லவா? " " ஆம். "

"அதாவது, உயிருள்ளபோது ஞானியானவன் உடலின் பற்றுக்களிலிருந்து தன் ஆத்மாவை விடுவிக்க முயலுகிருன்." "ஆம்."

"ஞானத்தை அடைய ஒருவன் முயலும்போது அவனுடைய ஐம்பொறிகளின் வழியால் அடையக்கூடிய இன்பங்களில் அவன் மனம் சென்று அந்த முயற்சியில் பலவித இடையூறுகள் உண்டாகின்றதல்லவா? தவிர இந்த ஐம்பொறிகளால் மனிதனுக்கு உண்டாகக்கூடிய அறிவெல்லாம் அஞ்ஞானமும் பிழையும் கலந்துள்ளன என்றும் நாம் தெரிந்திருக்கிருேமல்லவா?" "ஆம்."

"ஆகையால், மெய்யறிவு அடையவேண்டுமானுல் ஐம்புலன்களே அடக்கி அவைகளால் உண்டாகும் அவஸ்தைகளிலிருந்து மனதை விடுவிக்கவே முயலவேண்டும். ஞானியினுடைய ஆத்மா தன்னேச் சிறைப்படுத்தியுள்ள உடலேவிட்டுத் தனிப்படவே சதா காலமும் விரும்பிக்கொண்டிருக்கும்."

"உடலுள்ளவரையில் அதன் யோக க்ஷேமத்திற்காகப் பாடுபட வேண்டும். காலமும் முயற்சியும் அதன் பொருட்டுக் கழிகின்றன. நோய்வாய்ப்படும்போதெல்லாம், மனநிலே மாறி மெய்யறிவு உண்டாவது தடைபடுகிறது. உடலுள்ளவரையில் காமம், வெகுளி, அச்சம், மயக்கம் இவைகளால் ஞானத்தை அடைவது தடைப்படுகிறது. உடலும் அதன் அவாவும் ஆசையுமே எல்லாத் தீவினேகளுக்கும், நிலேயில்

லாத பொருளைத் தேடுவதிலும் பகையிலும் சண்டையி லும் நாம் வீணே காலம் கழிப்பதற்கும் காரணம்.*

"மெய்யறிவை அடைய நாம் முயல அவகாசமுமில் லாமல் செய்கிறதும் அதுவே. ஒரு சமயம் புலன்களை அடக்கி அறிவை அடையத்தகுந்த நிலையில் மனதை ஒரு வன் நிறுத்தினாலும் அடுத்த நிமிஷத்தில் மறுபடியும் உடலானது மேல்நின்று அந்நிலையைக் கெடுத்துவிடு கிறது. ஆகையால் பரிபூர்ணமான மெய்யறிவு என்பது ஒன்றுண்டாயின், அது ஒருவனுக்கு வேண்டுமாயின், உடலைவிட்டுப் பிரிந்து ஆத்மா தனித்து நின்றால்தான் அதை அடைய முடியும். உடலுடன் இவ்வுலகில் இருக்கும்வரையில், இன்றியமையாத விஷயங்களில் தவிர மற்றப்படி உடலின் சம்பந்தமெல்லாவற்றையும் ஒழித்துவர வேண்டும். இப்படி ஆண்டவன் நமக்கு விடுதலை யளிக்கும்வரையில் நம்மாலான வரையில் ஆத்மாவைத் தேக சம்பந்தத்திலிருந்தும், அதனாலுண் டாகும் குற்றங்களிலிருந்தும், விலக்கியே வைக்கவேண் டும். எவன் உயிருடனிருக்கும்போதே தன் ஆத்மாவை உடலிலிருந்து தன்னாலானவரை விலக்கித் தற்சுத்தி யடைகிறானோ அவன் மரணத்திற்குப்பின் ஆண்டவன்

---

*ஆங்காரப் பொக்கிஷங்கோபக்களஞ்சிய மாணவத்தால்
நீங்காஅரண்மனை பொய்வைத்த கூடம்விண் ணீழல்வளர்
தேங்கார் பெருமதிற் காமவிலாசமித் தேகங்கந்தல்
பாங்காயுனைப்பணிந் தெப்படிஞானம் பலிப்பதுவே

என்று பட்டினத்துப் பிள்ளையார் அருளின பாடலாலுங் காண்க.

சன்னிதியில் சுத்த ஆத்மாக்களுடைய சமூகத்தில் போய்ச் சேர்ந்து பூரண மெய்யறிவு அடைவான்.''

அதன்மேல் ஆத்மாவுக்கு என்றும் அழிவு கிடையாது என்னும் விஷயத்தைப்பற்றியும், ஆத்மாக்கள் தங்கள் தங்கள் கர்மங்களுக்குத் தக்கவாறு மறு ஜன்மங்கள் அடையுமென்பதைப்பற்றியும், இன்பம் துன்பம் என்கிற இருவகைப் பற்றுக்களையும் ஒழித்து ஆத்மஞான மடைந்தவனே முத்தியடைவான் என்பதைப்பற்றியும் அனுமானப் பிரமாணங்களுடன் வெகு நேரம் சம்பாஷணை ரூபமாய் உபதேசித்தார்.*

---

*இந்த அரிய பிரசங்கத்தை இங்கே முழுவதும் மொழி பெயர்க்கவில்லை. வடமொழியில் உபநிஷத்தையும், பகவத்கீதையையும், பீஷ்மாசாரியார் உபதேசத்தையும், தமிழில் திருமூலர், திருவள்ளுவர், தாயுமானவர், பட்டினத்தார் முதலியோர் அருளிச்செய்த அரிய நூல்களையும் படித்தவர் ஸோக்ரதர் பிரசங்கத்தில் புதிய விசேஷத்தைக் காணார். ஆனால் இந்த மெய்யுணர்வு கிரேக்க மகரிஷியான ஸோக்ரதர் 2400 வருஷங்களுக்கு முன் அடைந்து உபதேசித்து வந்தார் என்பதை மாத்திரம் நாம் அறிந்துகொள்ள வேண்டும். பிரசங்கத்தை (முதனூலை)ப் படித்தால் பகவத்கீதையில் அர்ச்சுனனுக்குப் பகவான் உபதேசம் செய்த மொழிகளை ஸோக்ரதர் அறிந்தேயிருக்க வேண்டும் என்று தோன்றும். கிரேக்க தேசத்திற்குப் பாரததேச ரிஷிகளியற்றிய நூல்களும் அவைகளால் உண்டான ஞானமும் சிறிது பாகம் போய்ச் சேர்ந்தேயிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆக்ஷேபணை சமாதானங்களையும், ஸோக்ரதர் பேசின தத்துவார்த்த முழுவதையும் மொழிபெயர்த்தால் பெருகும் என்றும் தமிழ் மக்களுக்கு அவசியமில்லையென்றும் விடப்பட்டன.

"ஆகையால் எவனொருவன் தன் வாழ்நாளில் ஐம் புலன்களை அடக்கி உடல் வழியாய் வரும் சுக துக்கங் களை நீக்கி ஆத்ம ஞானம், நடு நிலை, தர்மம், அச்ச மின்மை, பற்றின்மை, மெய்ம்மை இவைகளை வளர்த்து வருகிருனே அவன் மரணத்தைக் கண்டு பயப்பட வேண்டுவதில்லை. அவன் தன் ஆத்மா நற்பேறு அடை யும் என்று தைரியமாயிருப்பான். உடல்விட்டு நீங்க ஆண்டவன் கட்டளை எப்போது வந்தாலும் ஏற்றுக் கொள்ளச் சித்தமாயிருப்பான். என் நண்பர்களாகிய நீங்களும் உங்கள் காலத்தை எதிர்பார்த்திருங்கள். என்னை இப்போதே காலன் அழைக்கிருன். ஆகை யால் நான் ஸ்நானம் செய்யப் போகிறேன். விஷத்தைப் பானம் பண்ணுவதற்கு முன்னேயே ஸ்நானம்செய்து விடுவது நல்லது. இல்லாவிடில் பிறகு பிரேதத்தைக் கழுவ நேரும். ஜனங்களுக்கு வீண் தொந்தரவு."

இப்படி முடித்தவுடன், க்ருதர் "அப்படியே யாகட்டும்" என்று சொல்லி, "உமது நண்பர்களுக் காவது எனக்காவது குழந்தைகள் விஷயமாயாயினும் மற்றெதைப்பற்றியாயினும் நீர் ஏதாவது சொல்ல வேண்டியதுண்டா? நாங்கள் எப்படி உமக்குத் தொண்டு செய்யக்கூடும்? சொல்லும்" என்று கேட்டார்.

"க்ருதரே! நான் இவ்வளவு நாள் உங்களுக்குச் சொல்லிவந்தபடி நீங்கள் நடந்தால்போதும். உங்க ளுடைய ஆத்மாக்களைப் பாதுகாத்து அதைச் சுத்தி செய்து வாருங்கள். அது செய்தால் மற்றவையெல் லாம் தாமே வரும். இப்போது எவ்வித உறுதியும்

எனக்கு நீங்கள் சொல்லாமலிருந்தாலும், உங்கள் வாழ்வை நான் இவ்வளவுநாள் சொன்னபடி நீங்கள் பாதுகாத்து வந்தால் என் குடும்பங்களைப் பற்றியும் உங்கள் குடும்பங்களைப் பற்றியும் நான் உங்களுக்குச் சொல்லாமலே எவ்விதம் நடந்துகொள்ள வேண்டுமோ அவ்விதம் நடந்துகொள்வீர்கள். இன்று நாம் பேசிய விஷயங்களையும் இதற்குமுன் அனேகமுறை நாம் பேசிய விஷயங்களையும் நீங்கள் மறந்து நான் குறிப்பிட்ட வழியில் வாழ்வை நடத்தத் தவறுவீர்களானல் நீங்கள் என் குடும்பத்தைப்பற்றி எனக்கு இப்போது எவ்வளவு வாக்குறுதி செய்தாலும் பயனில்லை அல்லவா?"

"எங்களாலியன்ற அளவு செய்கிறோம். தங்களை எவ்விதம் அடக்கம் செய்ய உத்தரவு கொடுக்கிறீர்கள்" என்று க்ருதர் கேட்க, ஸோக்ரதர், "தங்களிஷ்டப்படி செய்யலாம். என்னை எப்படி அடக்கம் செய்யப் போகிறீர்கள்? நான் உங்களுக்கு அகப்படுவேனு. பார்ப்போம்" என்று சொல்லி நகைத்தார். "நண்பர்களே, க்ருதருக்கு நான் என்ன சொல்லியும் நம்ப மாட்டார்; உங்களுடன் இவ்வளவு நேரம் பேசி, ஆக்ஷேபணை சமாதானங்கள் ஒழுங்காக எடுத்துக் காட்டியும், இன்னும் சில நிமிஷங்களுக்குள் உடலை விட்டு விடுதலையடைந்து வெளியே போய்விடும் ஸோக்ரதனனவன் நான் என்று அவர் ஒப்பமாட்டார். கொஞ்சநேரம் கழித்துக் கீழே கிடக்கப்போகும் பிரேதத்தை நான் என்றும் என்னை அவர் எவ்விதம்



ROJA MUTHIAH
KOTTAIYUR-623 106
TAMILNADU INDIA

அடக்கம் செய்ய விரும்புகிறேன் என்றும் கேட்கிறார். விஷம் பருகின பின் உங்களுடன் இதுவரையில் பேசி வந்தவனாகிய நான் இவ்விடத்தைவிட்டு மேலுலகம் சென்றுவிடுவேன் என்று எவ்வளவு சொல்லியும் அவருக்கு விளங்கவில்லை. அவருக்கு நீங்கள் உறுதிமொழி கொடுக்கக்கூடாதா? நியாயஸ்தலத்தில் எனக்கு அவர் ஜாமீனாக நின்றார். அதாவது நான் போய்விடமாட்டேன்; இருப்பேன் என்று உறுதிகொடுத்தார். இப்போது நீங்கள் அவருக்கு நான் இருக்கமாட்டேன்; போய்விடுவேன் என்பதற்கு ஜாமீன் கொடுங்கள்" என்று சொல்லி நகைத்தார்.

"இப்படி அவருக்கு நீங்கள் உறுதிசொன்னால் தான் அவர் என் பிரேதம் தீப்பற்றி எரிகிறதைப் பார்த்ததும் அல்லது மண்ணில் போட்டு மூடுவதைப் பார்த்ததும் அழாமலிருப்பார். ஸோக்ரதனை எடுத்து மயானம் செல்கிறோம், ஸோக்ரதனைச் சிதையின்மேல் வைக்கிறோம், அல்லது மண்ணில் புதைக்கிறோம் என்று அவர் சொல்லாமலிருப்பார். என் பிரியமான க்ருதரே, இவ்விதம் பேசுவதெல்லாம் தவறு. தவறான பேச்சுக்களை உபயோகித்தால் பேச்சுமாத்திரம் கெடுவதல்லாமல், ஆத்ம ஞானமும் கெட்டுப்போய்த் துன்பமுண்டாகும். தைரியமாயும் சந்தோஷமாயும் இருப்பீராக. அழாதீர். என் உடலைப் புதைக்கிறேன் என்று சொல்லும்; என்னைப் புதைக்கிறேன் என்று சொல்லாதீர். உம்மிஷ்டப்படி நீர் எவ்விதம் தகுதியென்று நினைக்கிறீரோ அவ்விதம் தேகத்தை அடக்

கம் செய்யும்" என்று சொல்லி ஸ்நானத்திற்குச் சென்றார். க்ருதரும் எங்களை இருக்கச் சொல்லிவிட்டு அவருடன் போனார். நாங்கள் அவ்விடமே உட்கார்ந் திருந்தோம். அன்று அவர் சம்பாஷித்த விஷயங் களைப்பற்றியும் பேசிக்கொண்டிருந்தோம். நம்மைப் பெற்ற தந்தையை இழந்து, நாமெல்லாரும் திக்கற்ற குழந்தைகளாகப் போவதுபோல் தோன்றிற்று. ஸ்நா னம் செய்து வந்தபின் அவருடைய மூன்று மக்களை யும் அழைத்து வந்தார்கள். ஒருவன் வயதுவந்தவன் - மற்றிருவர் சிறு குழந்தைகள் - அவரைச் சேர்ந்த ஸ்திரீ களும் வந்தார்கள். க்ருதரை வைத்துக்கொண்டு அவர் களுக்குச் சொல்லவேண்டியன எல்லாம் கடைசி யாகச் சொல்லிவிட்டார். அவர்களை அனுப்பிவிட்டு எங்களிடம் மறுபடியும் வந்து உட்கார்ந்தார். அப் போது அஸ்தமன வேளையாய்விட்டது. அதன் பிறகு யாரும் அதிகம் பேசவில்லை.

பின்பு ஓர் உத்தியோகஸ்தன் வந்து அவர் முன் நின்று, "ஸோக்ரதரே, மற்றவர்களைப்போல் நீர் செய்யமாட்டீர் என்பது எனக்குத் தெரியும். நான் விஷபானத்தைக் கொடுத்து அவர்களைக் குடிக்கச் சொன்னால் அவர்கள் கோபங்கொண்டு என்னைத் திட்டுவதும் சபிப்பதும் வழக்கம். அதிகாரிகளுடைய உத்தரவை நான் நிறைவேற்ற வேண்டியவனல்லவா? நான் என்ன செய்யக்கூடும்? நீர் அவ்விதமெல்லாம் செய்யமாட்டீர் என்று எனக்குத் தெரியும். இதுவரை யில் இவ்விடம் வந்தவர்கள் எல்லாரையும்விட நீர்

பெருந்தன்மையும் அன்பும் நிறைந்தவராயிருக்கிறீர். என்மேல் நீர் கோபம் கொள்ளமாட்டீர். எனக்கு உத்திரவிட்டவர்களே இந்தப் பெருங் குற்றத்திற்குப் பதில் சொல்லவேண்டும். என்னை ஆசீர்வதியும். சுவாமி! நான் வந்த காரியம் உமக்குத் தெரியுமே'' என்று கண்ணீர்விட்டழுதுகொண்டு வெளியே போய் விட்டான்.

ஸோக்ரதர், ''அப்பா நீ சொன்னபடி செய்கிறேன், சுகமாயிருப்பாயாக'' என்று அவனுக்குச் சொல்லிவிட்டு, எங்களைப் பார்த்து ''இவன் எவ்வளவு மரியாதையும் அன்பும் உடையவனுயிருக்கிருன்! நான் இவ்விடமிருந்த காலமெல்லாம் இவன் அடிக்கடி என்னிடம் வந்து பேசிப் போவான். மிக நல்ல இருதயமுடையவன். எனக்காகக் கண்ணீர் விடுகிருன் பாருங்கள். க்ருதரே, வாரும். அவன் சொன்னபடி செய்வோம். விஷபானம் சித்தமாயிருந்தால் அதைக் கொண்டுவரச் சொல்லும், அல்லது சீக்கிரம் சித்தப்படுத்தச் சொல்லும்'' என்று சொன்னுர்.

அதற்குக் க்ருதர், ''இல்லை, ஸோக்ரதரே, அவசரப்படவேண்டாம். இன்னும் அஸ்தமனமாகவில்லை. மலைமேல் சூரியன் இன்னும் பிரகாசிக்கிருன். மற்றவர்கள் எல்லாரும் கடைசிநாள் நன்ருய்ச் சாப்பிட்டும் மதுபானம் செய்தும் நண்பர்களுடன் பேசி ஆனந்தித்தும் பிறகுதான் வெகுநேரம் கழித்து விஷத்தைப் பானஞ் செய்வார்கள். நீர் ஏன் அவசரப்படுகிறீர்? இன்னும் வெகுநேரம் இருக்கிறது'' என்று சொன்னுர்

"நீர் சொல்லும் மனிதர்கள் அப்படிச் செய்வது சரிதான். ஏனென்ருல், அவர்கள் அச்சுகங்களை மதித்து உயிருடன் இருக்கவே எப்போதும் விரும்புகிறபடியால் தாமதம் செய்து விஷம் குடிப்பார்கள். நான் அப்படிச் செய்வது தருமா? அப்படிச் செய்தால் உயிரை விட மனம் வராமல் இந்த உடலுடன் இன்னும் ஒரு நிமிஷமாவது இரண்டு நிமிஷமாவது இருக்க ஆசைப்பட்டவனுவேன் என்றல்லவா எண்ணப்படுவேன்? அதை நினைக்க எனக்கு வெட்கமாயிருக்கிறது. நான் சொல்லுவதை மறுக்காதீர்" என்று ஸோக்ரதர் மறுபடியும் சொல்ல, க்ருதர், பக்கத்திலிருந்த தம் ஆள் ஒருவனுக்குக் கண் காட்டினுர். அவன் வெளியே சென்ற கொஞ்ச நேரத்தில் விஷபானம் கொண்ட ஒரு பாத்திரத்துடன் ஓர் உத்தியோகஸ்தன் வந்தான்.

ஸோக்ரதர் அவனைக் கண்டதும் புன்னகையுடன், "நண்பனே, இவ்விஷயமெல்லாம் உனக்கு நல்ல அனுபவம். நான் செய்யவேண்டியதைத் தயவு செய்து சொல்" என்ருர்.

"இதை நீர் குடித்துவிட வேண்டும். அவ்வளவுதான். அதன்பின் கால் மரக்கும்போல் தோன்றுகிற வரையில் நடந்துகொண்டிருக்க வேண்டியது. பிறகு நீர் படுத்துக்கொள்ளலாம். விஷம் தன் வேலையைச் செய்யும்" என்று சொல்லி ஸோக்ரதரிடம் விஷபானத்தைக் கொடுத்தான். அவர் அதைக் கையசையாமல் முகம் மாருமல் தம் கையில் வாங்கிக்கொண்டு,

அதிகாரியை உற்றுப் பார்த்து, (அம்மாதிரி அவர் உற்றுப் பார்க்கும் வழக்கம் உமக்குத் தெரியுமே!) " அப்பா! இந்தப் பானம் இவ்வளவுதானு, அல்லது நம்மிஷ்டம்போல் இன்னும் அதிகமாய்ச் செய்து கொள்ளலாமா?" என்றுகேட்டார். அதற்கு அதிகாரி, " எவ்வளவு வேண்டுமோ அவ்வளவே நாங்கள் செய்வது வழக்கம் " என்று சொன்னுன்.

" அப்படியா! நல்லது, தேவர்களைத் துதித்து என்னைச் சுகமாய் அழைத்துப் போகும்படி ஜெபிக்கலாமல்லவா? அப்படியே ஆகக்கடவது" என்று சொல்லி விஷத்தைப் புன்சிரிப்புடன் வாயில் வைத்துக் குடித்துவிட்டார். அதுவரையில் நாங்கள் அனேகமாய்த் துக்கத்தை ஒருவாறு அடக்கியிருந்தோம். ஆனல் அவர் விஷத்தை எடுத்துக் குடிப்பதைக் கண்டவுடன் எங்களால் பொறுக்கமுடியவில்லை. என்னை அறியாமல் என் கண்ணீர் பெருக ஆரம்பித்தது. என் முகத்தை மூடிக்கொண்டு நான் அழுதேன். அவருக்குக் கஷ்டம் வந்ததென்று நான் துக்கப்படவில்லை. இப்பேர்ப்பட்ட நண்பரைவிட்டுப் பிரிகிறேனே என்று என் துர்ப்பாக்கியத்திற்காக நான் அழுதேன். எனக்கு முன்னேயே க்ருதர் துக்கத்தைத் தாங்க முடியாமல் அழுதுகொண்டு வெளியே போய்விட்டார். அநங்கநந்தர் முதலிலிருந்து கண்ணீர்விட்டுக் கொண்டேயிருந்தவர் கடைசியில் பலமாய்ப் புலம்பினுர். அதன் மேல், ஸோக்ரதர் ஒருவர் தவிர நாங்கள் எல்லாரும் துக்கத்தைப் பொறுக்க முடியாமல் விம்மி அழ ஆரம்பித்தோம்.

"நண்பர்களே! நீங்கள் செய்வது என்ன? ஸ்திரீகளையெல்லாம் நான் அனுப்பிய காரணம் இம் மாதிரி என் பக்கத்தில் யாரும் புலம்பாதிருக்கும்படி யல்லவா? நீங்கள் பொறுத்துக் கொள்ளாமல் இப்படி அழுவது தகுதியன்று. ஆத்மா உடலைவிட்டுப் பிரியுங் காலத்தில் சப்தமில்லாமலிருக்க வேண்டு மென்று சொல்லுவார்கள். தயவு செய்து சாந்தமா யிருங்கள்" என்று ஸோக்ரதர் சொல்ல, நாங்கள் வெட்கப்பட்டு அழுவதை நிறுத்தினோம்.

அவர் கொஞ்ச நேரம் நடந்துகொண்டேயிருந்து, கால்கள் மரத்துப்போவதாகத் தெரிந்ததும் அதிகாரி சொன்னபடி மல்லாந்து படுத்துக்கொண்டார். அவ ருடைய பாதங்களை அடிக்கடித் தடவிப்பார்த்து, பிறகு அவன், காலை நன்றாய் அமுக்கி, "அமுக்குவது உமக்குத் தெரிகிறதா?" என்று கேட்டான். அதற்கு ஸோக்ரதர் "தெரியவில்லை" என்றார். இப்படித் தேகம் வர வர மரத்துப்போக ஆரம்பித்தது. மார்பு வரையில் இப்படி மரத்துப் போனதும் 'நான் போய் விடுவேன்' என்று தாமே தொட்டுப் பார்த்துக்கொண்டு சொன் னார். இடுப்பு வரையில் குளிர்ந்து போனதும், தம் முகத்தின்மேலிருந்த துணியை யெடுத்து "க்ருதரே, அஷ்கலேபர் கோயிலில் ஒரு பலி எனக்காக நீர் சமர்ப் பிக்கவேண்டும். அது செய்யவேண்டிய கடன். அதை மறவாதீர்" என்று சொன்னார். அப்படியே ஆகட்டு மென்று க்ருதர் சொல்லி, "இன்னுமேதாவது உமது மனோபீஷ்டம் உண்டா?" என்று கேட்டார். இதற்குப் பதில் ஒன்றும் சொல்லவில்லை. கொஞ்ச நிமிஷத்துக்

கெல்லாம் தேகம் ஓர் அசைவுற்றது. அதிகாரி துணியை எடுத்துப் பார்த்ததில் உயிர் போய் ஸோக்ரதர் பிரேதமாய்க் கிடந்தார். வாயையும் கண்ணையும் க்ருதர் மூடினார். இதுதான் முடிவு.

நாம் கண்ட மானிடர்களுக்குள் சிறந்த ஞானமும் தர்மமும் நல்வினையும் பொருந்திய நமது நண்பர் பரலோகமடைந்த வரலாறு இது என்று வீதர் சொல்லி முடித்தார்.



ROJA MUTHIAH
KOTTAIYUR-623 106
TAMILNADU INDIA